ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

# பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகள்

அருளிய

# அருணாசல பஞ்சரத்னம்

விளக்கவுரை

முகவைக் கண்ண முருகனடிமை

பதிப்பாளர்

ஸ்ரீரமண பக்த சமாஜம்

சென்னை

*முதற்பதிப்பு: 2013*

*உரிமை: நூலாசிரியருக்கே*

***ஸ்ரீ ரமண பக்த ஸமாஜம்***
***ஜி2 ,ஷிர்டி க்ரஹா***
***42/18 , சம்பங்கி தெரு,***
***மேற்கு மாம்பலம்,***
***சென்னை 600 033.***

***தொலைபேசி: 09841739090, 04423716495, 9444172623.***
***மின்னஞ்சல்:*** *srhcpl@gmail.com*

***சார்பாக,***

*14.07.2013 அன்று வித்வான் H. வைத்யநாதன் அவர்கள் நினைவு நாள் விழாவில் கோடம்பாக்கம் மீனாக்ஷி கல்லூரியின் K.R.S. வளாகத்தில் சர்வதேச வேளாண் விஞ்ஞானி Prof. M.S. ஸ்வாமிநாதன் அவர்களால், ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் உரிமையாளர் திரு. S.முரளி அவர்கள் முன்னிலையில் வெளியிடப்பட்டது.*

***ரூ.140/-***

*அச்சிட்டோர்:*

***ஜெய்கணேஷ் ஆப்செட் பிரிண்ட்டர்ஸ்***
*எண். 19, வெங்கடசாமி லேன், சாந்தோம்,*
*சென்னை - 600 004. Ph:* 044-24934535

# பொருளடக்கம்

## பிற்பகுதி

### பஞ்சரத்னத்தினமும் உள்ளது நாற்பதும்

## நன்றியுரை

பகவான் ஸ்ரீரமண மஹரிஷிகள் அருளிய **அருணாசல ஸ்துதி பஞ்சகம்** ஸ்ரீரமண இலக்கியத்தில் முதலிடம் வகிக்கும் ஓர் அரிய படைப்பாகும். திருவருணைச் சிவமே ஸ்ரீரமண உருக்கொண்டு, தன்னைத் தானே பாடி மகிழ்ந்து, தன் அழகிய திருமார்பிற்கு மேலும் அழகு சேர்த்துக் கொண்ட தோத்திரப் பாமாலையே இது! அதில் ஐந்தாவது பாடற் தொகுதியாக விளங்கும் **அருணாசல பஞ்சரத்னம்** தோன்றிய விவரத்தை நூலில் விரிவாகக் காணலாம். அத்வைத வேதாந்த சாரமாக ஒளிரும் இந்தப் பஞ்சரத்னத்திற்கு தாம் விளக்கவுரை எழுத நேர்ந்ததை முகவைக் கண்ண முருகனடிமை திரு. K. ஸ்ரீராம் பணிவுரையில் விவரித்துள்ளார். முதற்பாட்டிற்கு விரிவானதொரு விளக்கவுரை எழுத நேர்ந்த பின்பே, ஸ்ரீபகவான் இந்தப் பணியைத் தமக்கிட்டிருப்பதை உணர்ந்ததாகவும், பின்பு மற்றைய நான்கு பாடல்களுக்கும் எழுதி நிறைவு செய்ததாகவும் திரு. ஸ்ரீராம் தெரிவித்துள்ளார்.

இந்த விரிவான, ஆழமான விளக்கவுரை பற்பல புதுமைகளை உள்ளடக்கியதாக மிளிர்கின்றது. முதலாவது, யாரிடம், எதற்காக, ஏன் ஸ்ரீபகவான் கூறினாரென்ற கேள்விகளுக்கிடமின்றி, ஸ்ரீரமண சித்தாந்தத்திற்கு ஒரு உலகப் பொதுமறையாக, ஒரு பிரமாண சாத்திரமாக, ஸ்ரீரமணோபதேசங்களுக்கு உறுதி பயக்கும் உரைக்கல்லாக ‘பரமார்த்த தீபம்’ என்று போற்றப்படும் குருவாசகக் கோவையிலிருந்து தக்க பாடல்களை மேற்கோள்களாகப் பெருத்த அளவில் காட்டியிருப்பது இதுவரையில் எவரும் செய்திராத புதுமையாகும். இந்த விளக்கவுரையின் தனிப்பெருஞ்சிறப்பும் இதுவே!

இரண்டாவது, ஐந்து பாடல்களிலும் காணப்படும் ஒவ்வொரு சொல்லிற்குமுரிய கருத்தாழத்தில் அன்பர்களை ஆழங்கால்பட வைப்பதாகும்.

*மூன்றாவது, ‘**அருள் நிறைவு** (பாடல்-1)’, ‘**நானென்றிதய நடித்திடுதல்** (பாடல்-2)’, ‘**நன்கறிந்து** (பாடல்-3)’, ‘**யோகி ஒளி காணும்** (பாடல்-4)’, ‘**எப்பொழுதும்** (பாடல்-5)’ ஆகிய சொற்களுக்கிடையேயுள்ள கருத்துத் தொடர்பைத் துல்லியமாகப் படம் பிடித்துக் காட்டியிருப்பதாகும்.*

*நான்காவது, ஸ்ரீபகவான் மூன்றாம் பாட்டில் தந்துள்ள ‘முந்நீர்’ என்னும் உபமானத்திற்கு ‘உலகு, உயிர், இறைவன் (ஜக, ஜீவ, ஈசுவரர்கள்)’ என்று உபமேயம் காட்டியிருப்பதும் மற்றுமொரு புதுமையே!*

*ஐந்தாவது, விளக்கவுரையை நிறைவு செய்த பின்னும், ‘பஞ்சரத்னத்தின் மையக் கருத்து’, ‘ஐந்து பாடல்களிலும் காணப்படும் கருத்துத் தொடர்பு’, ‘உலகின் பொய்மை’ ‘பஞ்சரத்னமும் காயத்ரி மந்திரமும் ’ என்னும் தலைப்புக்களில் அனைத்து வேதாந்த இலக்கியத்தின் சாரமாக ஒளிரும் இந்த நூலின் மேன்மைகளை விளக்கியிருப்பது பின்னுமொரு புதுமையே!*

*இவ்வளவு புதுமைகளுக்கிடையே ஒரு பழைமையும் உண்டு; அதுவே இந்நூலின் அவதாரிகை! நூலாசிரியர் தாம் நூலில் சொல்ல வந்த கருத்துக்களையெல்லாம் சுருக்கமாக கூறுவது அவதாரிகை ஆகும்; இந்தப் பண்டைத் தமிழ் மரபையொட்டி நூலில் விளக்கப்பட்டுள்ள ஸ்ரீ ரமணோபதேசங்களின் சாரமாக அவதாரிகை அமைந்துள்ளது. இந்தப் பழைமையும் பாராட்டத்தக்கதே!*

*இந்த விளக்கவுரையை சிரத்தையொடு பயில்பவர் மேலும் பற்பல புதுமைகளையும் சிறப்பம்சங்களையும் காணக் கூடும்.*

*எங்கள் வேண்டுகோளின்பேரில் இந்த விளக்கவுரைக்கு ‘**வாழ்த்துரை**’ வழங்கிய ஸ்ரீரமணாச்ரமத் தலைவர் அவர்ககளுக்கு எங்கள் நமஸ்காரங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.*

*எங்கள் வேண்டுகோளின்பேரில் இந்த விளக்கவுரைக்கு ‘அணிந்துரை’ வழங்கியுள்ள ஸ்வாமிஜி தியாகேஷானந்தர் எங்கள் சத்சங்கங்களில் பலமுறை சொற்பொழிவாற்றியவர்; ‘பஞ்சரத்னத்தைப்’ பற்றி எங்களிடையே உரையாற்றியிருகிறார்;*

நேரம் கிடைத்தபோதெல்லாம் அவராகவே எங்கள் சத்சங்கத்தில் பங்கேற்று எங்களை மகிழ்விப்பவர்; ஸ்வாமிஜி அவர்ககளுக்கு எங்கள் நன்றி கலந்த நமஸ்காரங்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்த நூலை அச்சிடும்பணியில் பங்கேற்ற செல்வி.பானுமதி, திரு. கேசவன், திரு. மாரியப்பன், அண்ணா நகர் ஜி. சுவாமிநாதன், திரு என். வேங்கடேஸ்வரன், ஜெய்கணேஷ் ஆப்செட் பிரிண்ட்டர்ஸ் ஆகியோர் அனைவருக்கும் ஸ்ரீபகவானின் பேரருளை யாசிக்கிறோம்.

யோக வாசிஷ்டம், அஷ்டவக்ர ஸம்ஹிதை, திரிபுர ரகஸ்யம், பகவத் கீதை, உபநிடதங்கள், பிரம்மசூத்திரங்கள், கைவல்ய நவநீதம், சொரூப ஸாரம், வித்யாரண்யர்-ஆதி சங்கர பகவத்பாதர்-தாயுமானவர் முதலானோர் அருளிய நூல்கள் என்று விரிந்து கொண்டே போகும் அத்வைத வேதாந்த ரகஸ்யத்தைச் சுருங்கக் கூறி விளங்க வைக்கும் இந்தச் சிறுநூல் ஒன்றே உத்தம அதிகாரிகள் சாயுஜ்ய முக்தி பதமடையச் சாலும்; பக்குவர் பயின்றேதிப் பயனடைய ஸ்ரீபகவானருளைப் பிரார்த்திக்கின்றோம்.

**சென்னை** — **M.K. வைத்தியநாதன்**

06.01.2013 — செயலர், ஸ்ரீரமண பக்த ஸமாஜம்

ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

## பணிவுரை

அகிலம் போற்றும் பகவான் ஸ்ரீ ரமண மகரிஷிகள் அருளிய அருணாசல பஞ்சரத்னத்திற்கு நான் விளக்கவுரை எழுத நேர்ந்தது ஒரு சுவையான நிகழ்ச்சியாகும்.

என் அருமை நண்பர் திரு. A.R. சந்திரசேகர் அவர்கள் பஞ்சரத்னத்தின் பாடல்களுக்கு எங்கள் மேற்கு மாம்பலம் சத்சங்கத்தில் 2012-ம் ஆண்டில் மாதந்தோறும் தொடர் சொற்பொழிவாற்றினார். அதனால் உந்தப்பட்டு நானும் பஞ்சரத்னத்தின் மேன்மையைப் பற்றி எங்கள் சத்சங்கத்தில் பேசினேன். இதற்குப் பின்பு தற்செயலாக திரு.டேவிட் காட்மென் இணையதளத்தில் பஞ்சரத்னத்திற்கு திரு. மைக்கேல் ஜேம்ஸ் அவர்கள் எழுதியுள்ள ஆங்கில விளக்கவுரையைப் பார்த்தேன். அதில் திரு. மைக்கேல் ஜேம்ஸ் தமது குரு ஸ்ரீ சாது ஓம் ஸ்வாமிகளின் வாய்வழிக் கூற்றை ஆங்கிலத்தில் (transcription) தந்துள்ளதாகக் கூறியிருந்தார். இந்த ஆங்கில விளக்கவுரை 2005-ம் ஆண்டிலேயே இணையதளத்தில் ஏற்றப்பட்ட விவரத்தையும் அதில் பார்த்தேன். பின்பு 2012-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் சீரிய அடியவர் தாராபுரம் திரு. சிதம்பரகுற்றாலம் அவர்கள் பஞ்சரத்னப் பாடல்களுக்கு ஒரு எளிய விளக்கவுரையைத் தாம் எழுத இருப்பதாகவும், நான் பஞ்சரத்னத்தைப் பற்றிப் பேசிய உரையிலிருந்து குறிப்புரைகளை அனுப்பி வைத்தால் அவருக்குப் பயன்படுமென்றும் கூறினார். நானும் டிசம்பர் 2012-ல் பஞ்சரத்னத்தின் முதற்பாடலுக்கு குறிப்புரை தயாரிக்க, அது நீண்டதொரு விளக்கவுரையாக உருவாகியது. இதை நான் திரு. சிதம்பரகுற்றாலம் அவர்களுக்குத் தெரிவிக்கவும், உடனே அவர் ''நீங்களே மற்றைய பாடல்களுக்கும் எழுதி விடுங்கள்; அதுவே ஸ்ரீபகவானின் திருவுள்ளம் என்று தோன்றுகிறது'' என்று கூறினார். திரு. ஏ.ஆர் சந்திரசேகர் அவர்கள் தொடங்கி திரு. சிதம்பரகுற்றாலம் அவர்கள் வரை நடந்த நிகழ்வுகளை நினைத்துப் பார்க்கும்போது, எனக்கும் இந்த விளக்கவுரையைத் தொடர்ந்து எழுதுவதே

பொருத்தமெனத் தோன்றியது; என் அறிவிற்குள் அறிவாக ஸ்ரீபகவான் வழிகாட்ட, நானும் எழுதி முடித்தேன்.

ஏற்கனவே ஸ்ரீபகவானின் நேரடி சீடர் புதுக்கோட்டை லக்ஷ்மண சர்மா எழுதிய பஞ்சரத்ன வார்த்திகம் ஒன்று வெளிவந்துள்ளது. அடுத்ததாக, காவ்ய கண்ட கணபதி முனிவரின் சீடர் திரு கபாலி சாஸ்திரி சம்ஸ்கிருதத்தில் எழுதிய விரிவுரை 'ஸ்ரீ அருணாசல பஞ்சரத்ன தர்ப்பணம்' ஆங்கிலத்தில் திரு. எஸ். சங்கரநாராயணன் அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. பேராசிரியர் டி.எம். பி. மஹாதேவன் அவர்கள் இந்நூலுக்கு பொழிப்புரை வழங்கியுள்ளார்கள். முதுபழம் ரமண பக்தை ஸ்ரீமதி. டி.ஆர். கனகம்மாள் அவர்கள் இந்தப் பாடல்களுக்குப் பதவுரையும், பொழிப்புரையும் தந்துள்ளார்கள். இவை அனைத்தும் ஸ்ரீரமணாசிரமப் பதிப்புக்களாக வெளிவந்துள்ளன. மற்றும், திரு. மைக்கேல் ஜேம்ஸ் அவர்களால் எழுதப்பட்ட ஸ்ரீசாதுஓம் ஸ்வாமிகளின் உரைநூல் இன்டர்நெட்டில் ஆங்கில மொழியில் உள்ளது. மேலும் சில உரைகள் வெளிவந்திருக்கலாம். இனிப்பு ஒன்றேயாயினும் வேறுவேறு நிறங்களில், வடிவங்களில் மாந்தர் தமக்கு விருப்பமானவற்றைச் சுவைத்து மகிழ்வதைப் போல, இந்த விளக்கவுரையையும்

''குற்றம் அகற்றிக் குணம் கொண்டு பாராட்டல்
கற்றறிந்த மாந்தர் கடன்''

என்னும் ஸ்ரீ முருகனார் ஸ்வாமிகளின் கூற்றின்படி பெரியோர் குற்றங்குறைகள் நீக்கி ஏற்க வேண்டுகிறேன்.

அருணாசல பஞ்சரத்னத்தைத் தேர்ந்தெடுத்து, அதற்குத் தொடர் சொற்பொழிவுகள் ஆற்றியதன் மூலம், என் கவனத்தைத் திருப்பி, நான் பஞ்சரத்னத்தில் மூழ்கித் திளைக்க வகை செய்த என் இனிய நண்பர் ஸ்ரீ A.R. சந்திரசேகர் அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கவனிப்பாரற்ற, துருப்பிடித்த இரும்பு பாத்திரத்தை துருப்பற்றவே இயலாத தங்கப் பாத்திரமாக மாற்றும் ஸ்பரிசவேதியைப் போல், தமிழ்மொழி தாய்மொழியாயினும்,

அதில் புலமையற்ற எனக்கு, பூமாதேவியும் வெட்குமளவிற்குப் பொறுமை காட்டிப் பயில்வித்து, ஸ்ரீபகவானின் பணிகளுக்கோர் தக்கப் பாத்திரமாகச் செய்த என் ஆசான் வித்வான் H. வைத்தியநாதன் அவர்களுக்கு அனந்த கோடி நமஸ்காரங்கள். அவரிடம் பாடம் கற்ற பாக்கியத்தின் விளைவே இதுபோன்ற விளக்கவுரைகள் தோன்றக் காரணமாகும். அவர் என்மீது பொழிந்த அன்பிற்கும் உண்டோ அடைக்குந் தாழ்? என் அன்பிற்கும், பெருமதிப்பிற்குமுரிய அந்தப் பெரியவர் விதேகராகுமுன் இந்நூலைப் பார்வையிட்டருளியது ஸ்ரீ ரமணத்திருவருளேயாகும்.

சில, பல வருடங்களாகவே பஞ்சரத்னத்திற்கு ஒரு உரை எழுதுமாறு என்னை வற்புறுத்தி வரும் என் தமையனார் (என் பெரிய தந்தையின் குமாரர்) திரு.N. ரஞ்சன் அவர்களுக்கும், அவர்தம் துணைவியார் திருமதி. சாந்தா ரஞ்சன் அவர்களுக்கும் இந்த விளக்கவுரை பெருத்த மகிழ்ச்சியைத் தரும் என்பதில் ஐயமில்லை. சீரிய ரமண பக்தர்களாகத் திகழும் அவர்களும், அவர்கள் குடும்பத்தாரும் இக, பர சௌபாக்கியங்கள் அனைத்தும் ஸ்ரீபகவானருளால் பெறுவராக.

பரமானந்தத்திற்குப் பஞ்சமேயில்லாத இந்தப் பஞ்சரத்ன ஸாகரத்தில் மூழ்கி மெய்யன்பர்கள் ஸ்ரீபகவானருளால் ஆன்ம முத்தெடுத்து சாயுஜ்ய முக்திபதமுறுவராக!

அருணை அருணேசனும் ஸ்ரீரமணேசர் அருள் வாழி!

இப்படிக்கு
**முகவைக் கண்ண முருகனடிமை**

***சென்னை***
***29.12.2012***
***(ஸ்ரீரமண ஜயந்தித் திருநாள்)***

ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

## வாழ்த்துரை

ஆதிசங்கரர் அருளிய தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரத்திற்கு அவரது சீடர் ஸுரேச்வராசார்யர் எழுதிய மானஸோல்லாஸம் என்ற ஒரு விரிவுரை உள்ளது. தமது வேண்டுகோளை ஏற்று ஸம்ஸ்க்ருத மொழியில் பகவான் ரமணர் அருளிய அருணாசல பஞ்சரத்னத்திற்கும் அவ்வாறே ஸம்ஸ்க்ருதத்தில் ஓர் விரிவுரை எழுத எண்ணினார் காவ்யகண்ட கணபதி முனிவர். அவரது எண்ணம் அவரது சீடரான கபாலி சாஸ்திரிகள் மூலம் நிறைவேறி 'ஸ்ரீ அருணாசல பஞ்சரத்ன தர்ப்பணம்' என்று நூல் வடிவம் கொண்டு ஆங்கிலத்தில் சங்கரநாராயணன் அவர்களின் மொழிபெயர்ப்பில் *(The cardinal Teaching of the Maharshi)* இதுவரை நான்கு பதிப்புகள் கண்டுள்ளது.

இதுபோல் லக்ஷ்மண சர்மா அவர்களும் பஞ்சரத்னத்திற்கு 'லகுவிருத்தி' என்று ஒரு உரைநூலை ஸம்ஸ்க்ருதத்தில் செய்யுள் வடிவத்திலும் ஆங்கிலம், தமிழில் உரைநடையிலும் இயற்றினார். இவ்வுரைநூலை பகவான் தனது திருக்கரத்தாலேயே எழுதிய தோடல்லாமல் 'வார்த்திகம்' என்று தலைப்பும் கொடுத்தருளி யுள்ளார். இதனைச் சிறப்புப் பதிப்பாக 2006ஆம் ஆண்டில் ஸ்ரீரமணாச்ரமம் வெளியிட்டுள்ளது.

பகவான் ரமணர் மற்றும் முருகனாரது நூல்களை ஆழ்ந்து கற்று தனது கருத்துக்களுக்கு நூல்வடிவம் கொடுப்பதில் ஆர்வமுள்ள சென்னை ஸ்ரீராம் அவர்கள் தற்போது பஞ்சரத்னத்திற்கு புதிய விரிவுரை ஒன்றைத் தயாரித்துள்ளார். புலமையும் பக்தியும் பளிச்சிடும் இந்நூலினையும் அன்பர்கள் ஓதி உணர்ந்து அருணாசல ரமணரது அருளுக்குப் பாத்திரமாகப் பிரார்த்திப்பதுடன், ஸ்ரீராம் அவர்களுக்கு எனது வாழ்த்துகளையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

மார்ச் 10, 2013 — **வே. சு. ரமணன்**

மகா சிவராத்திரி நன்னாள் — தலைவர், ஸ்ரீரமணாச்ரமம்

ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

## அணிந்துரை

ஸ்வாமி தியாகேஷானந்த சரஸ்வதி

சிவாஞ்சலி டிரஸ்ட்
3, நியூ தில்லை நகர்,
கோவை - 641041.

ஓம் நமோ பகவதே மஹரிஷி ரமணாய.

ஸ்ரீராம் அவர்கள் ஒரு சிறந்த ரமண பக்தர்; ரமண இலக்கியங்களில் பண்டிதர்; இனிய தமிழை முறையாகக் கற்றவர்; ரமண சேவைக்கு முந்துபவர்; பற்பல நூல்கள் வாயிலாக ரமண பக்தியைப் பரப்பி வருபவர். இந்த வரிசையில் இப்போது வெளிவந்திருக்கும் மற்றுமொரு நூல் இந்த அருணாசல பஞ்சரத்ன விளக்கவுரை. இதை கண்ணுற்றோம். அளவிலா ஆனந்தம் அடைந்தோம்.

இமயத்திற்கும் மூத்த அக்கினிமலை அமுதம் நிரம்பிய ஆழ்கடல் ஆகுமோ? அமுதக் கடல் தன்னுடன் உறவாடும் சூரிய கதிர் ஆகுமோ? ஆக்கும் ஆதவன், இன்னுயிர்களை காக்கும் கதிரவன் விழுங்கும் சூரியன் ஆவனோ? விழுங்குபவன் ரக்ஷகனோ? விழுங்குவது அருள் நிறைவோ? விழுங்கும் சூரியன் தாமரை மொட்டை மலரவைக்கும் விரிபரிதியாக விளங்குவானோ? இவ்வாறு முதற்பாட்டிலேயே இந்த விளக்கவுரை கருத்துச் செறிவின் அடர்த்தியால் படிப்போர் சிந்தனையைத் தூண்டுகிறது.

''நானும் தானாகி, நானும் அதுவாகி, நானற்ற நிலைதனில் நானும் நான் ஆனேன்''. இந்த 'நான்' 'தான்' நூல் முழுவதும் நன்கு ஒளிர் விடுகிறது. வேதாந்த ஸாகரத்தின் ஆழத்திற்கே சென்று, அதில் புதையுண்டிருக்கும் வேதாந்த ரகசியப் புதையலாகிய ''நான்'' என்னும் ஸத் வஸ்துவை அடையாளம் காட்டுவது இந்த விளக்கவுரை!

திரைப்படக்காட்சியைப் போன்று உலகம் என்ற புறத்தோற்றம் ''அஹம் அஹம் இதி ஸ்புரதி ஜ்வலித:'' என்னும் ஆன்ம சூரிய ஒளியால் விழுங்கப்படுகின்றதென்பது நல்ல உவமை. அதுபோல் ஐம்புலன்கள் வழியே வெளிவந்த மனம் உள்நோக்கித் திரும்பிப்போகையில் பிரம்ம விஷ்ணுகள் அடிமுடி காணுத அண்ணுமலையாக நிற்கிறது. அதனுல் விளைவது சாந்தம்; சிவம்; அத்வைதம்; இதுவே பரப்பிரம்மன்; அபின்னம் என்று நூலில் நன்கு விளக்கப்படுகிறது. படிப்போர் எல்லோருக்கும் இப்பேரின்பம் கிடைக்கட்டும்.

திரையில் தோன்றும் படம்போல, நெருப்பில் வீழ்ந்த விறகு போல, ஒளி குன்றியதால் கயிறில் தோன்றும் பாம்பு போல, கடலில் தோன்றும் அலை போல, கடலை அளக்க முயன்ற உப்புபொம்மை போல, கண்ணுடியுள் தோன்றும் பிரதி பிம்பம் போல இவ்வுலகம் அருணுசலனில் ஒடுங்கும்; இந்த அருணுசலம் இப்புவியின் இதயம்; அண்ட சராசரத்தின் இதயம். ஆன்மிக இதயமான அருணுசலன் உடல், பிராணன், ஜீவன், ஆன்மா ஆகிய நான்கின் நிலைக்களன் என்பதை நாஞர் அருண்மொழித் தொகுப்பு, ஸ்ரீ அருணுசல ஸ்துதி பஞ்சகம், ஆன்ம வித்தை கீர்த்தனம், ஸ்ரீ ரமண புராணம், ஸ்ரீரமண சந்நிதிமுறை, உள்ளது நாற்பது, உபதேச உந்தியார், அருணுசல அக்ஷரமண மாலை, குருவாசக் கோவை, பிரம்ம கீதை , கைவல்ய நவநீதம், நன்னூல் ஆகிய நூல்களிலிருந்து மேற்கோள்கள் காட்டி இறையுணர்வாம் தன்னுணர்வை மேலோங்க வைக்கிருர் நூலாசிரியர்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் மும் மலங்களை ஒழி; திரும்பி அகம் தனை தினம் அகக் காண்; நான் யார் என்று விசாரி; எண்ணம் எங்கு எழுகிறது என்று பார்; மனத்தை உசாவு; அது ஒயும். கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகள் கடலில் கலந்து தனி உருவை இழப்பது போல, ஜக , ஜீவ, ஈஸ்வரர்கள் ஏக காலத்தில் தோன்றி ஏக காலத்தில் மறைவது போல, நான்கு வித முக்திகளில் சாயுஜ்யம் போல, விழிப்பு, கனவு, உறக்க நிலைகள் துரீயத்தில் ஒழிவது போல என்று இவைகளை விளக்க ரமண இலக்கியங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள எடுத்துக்காட்டுகள் மிக அபாரம்.

மனத்தைத் தூய்மைப்படுத்திய பின்புதான் அகமுக நாட்டம் என்பது அவசியம் இல்லை; அகமுகமார்வதே மனத்தை தூய்மைப்படுத்திவிடும் என்ற வரிகள் சாதகர்களுக்கு மிகுந்த ஆறுதலையும், நம்பிக்கையையும் தருவதாம்.

பஹிர் முகம் குறைய, ஒழிய, பிராணாயாமம் பழகப் பழக தியானம் சம்பவிக்கும். அப்படிப்பட்ட யோகி ஸ்வயம் ஜோதியாகிய ஆத்ம ஜோதியில் கலந்து தானே சிவமாகி நிற்பான்; அவன் அருணாசலனுடன் கலந்து அண்ணாமலை அளவு நெடிது உயர்ந்து நிற்பான் என்கிறது நான்காம் பாடல். ஆன்ம சுகத்தை நாட விஷய சுகங்களை நஞ்செனத் தள்ள வேண்டும்; காற்றைப் புசித்து அடக்க, வலைபடும் பறவைபோல, மனம் அடங்கும் என்பனவற்றை விளக்கும் ராஜயோக அஷ்டாங்கம், ஞானயோக அஷ்டாங்கம் பகுதிகள் மிகச் சிறப்பாக அமைந்துள்ளன. அஷ்ட மஹாசித்திகளும், மனோலயமும் முழு யோகத்திற்கு தடையாகக் கூடும்; ஞான அஷ்டாங்கமே மனோ நாசம் மூலம் யோக சித்தி பெற வழிகோலும் என்ற சிறப்பு விளக்கம் அருமையிலும் அருமை.

''தன் முயற்சியால் வெற்றி பெறு; அது இயலாவிட்டால் பூரணசரணாகதி செய்'' என்கிறார் பகவான். இதன் மூலம் அருணாசலனை ஆன்ம உருவில் தரிசனம் செய்வது கிட்டும்; எல்லா ஜீவராசிகளையும் தன்னுள் கண்டு உவப்பதும், தன்னை எல்லா ஜீவராசிகளிடமும் கண்டு உவப்பதுமாகிய **மஹா அநுபவ பாக்கியமும்** வந்தடையும் என்கிற ஐந்தாம் பாடலின் விரிவுரையும், தத் த்வம் அஸி விளக்கமும், உபதேச உந்தியாரிலிருந்து அனனிய பாவம், பாவனாதீதம் பற்றிய விளக்கங்களும் நன்கு அமைந்துள்ளன.

அவதாரிகை, பஞ்சரத்தினத்தின் மைய கருத்து, இப்பாடல்களில் அமைந்துள்ள கருத்துத்தொடர்பு, உலகின் பொய்மை, காயத்திரி மந்திரத்துடன் ஒப்பீடு போன்ற பகுதிகள் நூலின் அழகுக்கு அழகு ஊட்டுவன. மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் அவசியம் படித்துப் பயன் பெற வேண்டிய இது போன்ற பற்பல நூல்களை யாத்து ரமண சேவையில் நூலாசிரியர்

திளைத்துச் சிறக்கட்டும்; மெய்யுணர்வை நாடும் பக்தகோடிகள் பயின்று பயன் பெறட்டுமென்று ஸ்ரீகுருமஹராஜ் திருவருளைப் பிரார்த்திக்கிறேன்.

ஓம் அருணாசல சிவ நம: ஸ்வாஹா.

*மார்ச் 10, 2013* இப்படிக்கு

*சிவராத்திரி நன்னாள்* **ஸ்வாமி தியாகேஷானந்த சரஸ்வதி**

## வித்வான் H.வைத்தியநாதன் – வாழ்க்கைக் குறிப்பு

### முகவைக் கண்ண முருகனடிமை

என் பெருமதிப்பற்குரிய ஆசான் **வித்வான். வைத்திய நாதன் அவர்களை (திரு.** H.V.**)** சந்திக்க நேர்ந்தது ஒரு சுவையான விஷயமாகும்.

முதன் முறையாக 1985-ல் ஸ்ரீரமணாச்ரமம் முன்னமே 1974-ல் மூன்றாம் பதிப்பாக வெளியிட்டிருந்த ஸ்ரீரமண சந்நிதி முறை புத்தகத்தில், அதன் பதிப்புரையில் திரு. H.V. வைத்தியநாதன் அவர்கள் அந்த புத்தகத்தின் படிவங்களைத் திருத்தும் பணியை (Proof–reading) ஆற்றிய விவரத்தைப் பார்த்தேன்.

பின்பு முகவை கண்ண முருகனார் அருளிய ஸ்ரீரமண சந்நிதி முறை பாடல்களில் ஸ்ரீபகவானருளால் ஆர்வம் ஏற்படவும், அந்த நூலைப் படிக்கும் ஒவ்வொரு முறையும் திரு. H.V. அவர்களின் பெயர் கண்களில் தோன்றிக் கொண்டேயிருந்தது. சூளைமேடு ஸ்ரீரமண சமாஜத்தில் ஓரன்பர் மூலம் திரு. H.V. அவர்களின் விலாசம் கிடைக்கவும், 1995-ம் ஆண்டு அவரை முதன் முறையாக சந்தித்தேன். தமிழ்க் கடலாக விளங்கிய அவரிடம் ஸ்ரீரமண சந்நிதி முறையைப் பாடம் படிக்க என் விருப்பத்தைத் தெரிவித்தேன். அன்று தொடங்கிய எங்கள் தொடர்பு அன்னாரது மறைவுக் காலம் வரை நீடித்தது.

திரு. H.V. அவர்கள் திருநெல்வேலி மாவட்டம் மேலப்பாவூரைச் சேர்ந்தவர். சென்னை பல்கலைக்கழகத்தில் வித்வான் (தமிழ்) பட்டம் பெற்றவர். Intermediate, ஓரியண்டல் டிப்ளமா ஆகியவை படித்ததினால் ஆங்கில மொழியிலும் மற்றும் ஸமஸ்கிருத மொழியிலும் மிகுந்த தேர்ச்சி பெற்றவர். பற்பல துறைகளில் அவர் வெளிப்படுத்திய திறமை அசாத்யமானது. அவற்றில் சில:

**ஆசிரியர் பணி**

Oct 1940-ல் திருவல்லிக்கேணியில் ஸ்ரீ. N.K. திருமலாச்சாரியாரின் நேஷனல் செகண்டரி ஸ்கூல் (1940-41), பின்பு நேஷனல் பெண்கள் மேல்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக மே 1978 வரை பணியாற்றினார். சுமார் நூறு பெண்டிர் ஆசிரியரிடையே பெண்கள் மேல்நிலைப்பள்ளியில் அரசின் தனி அதிகாரம் பெற்று ஓய்வு பெறும் வரை பணிபுரிந்த ஒரே ஆடவர் என்பதே இவரது மேன்மையைப் பறைசாற்றுகின்றது.

**தமிழ்ப்பணி**

தமிழ்த் தாத்தா ப்ரஹ்மஸ்ரீ மகாமகோபாத்யாய, தாக்ஷிணாத்யகலாநிதி, திராவிட வித்யா பூஷணம், டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்களிடம் மே 1940 முதல் ஏப்ரல் 1942 அவரது மறைவு வரையில் நேரடி மாணாக்கராகவும், ஐயரவர்கள் தமிழ்ப்பணியில் உடன்பணியாற்றுபவராகவும் விளங்கினார்.

1946 - ம் ஆண்டு காலகட்டத்தில் ஸ்ரீ கல்கி கிருஷ்ணமூர்த்தி தலைமையில் துவங்கப்பட்ட எழுத்தாளர் சங்கத்தில் துணைச் செயலராகப் பணியாற்றினார். அப்போது செயலராக மித்திரன் பத்திரிகையின் துணையாசிரியர் ஸ்ரீ. P. கோதண்டராமன் எம்.ஏ.பி.எல், பணியாற்றினாரென்பது குறிப்படத்தக்கது. பின்பு தினமணி துணையாசிரியர் திரு. ஏ. ஜி. வெங்கடாசாரி, ஆனந்த விகடன் துணையாசிரியர் திரு. தேவன் ஆகியோர் தலைவர்களான போதும், திரு. H.V. அவர்கள் துணைச் செயலராகப் பணியாற்றினார்.

டெல்லியில் ஆசிய இந்திய எழுத்தாளர் மாநாட்டிற்கு Prof. A. ஸ்ரீநிவாஸராகவன் தலைமையில் சென்னையிலிருந்து சென்ற குழுவில் திரு. H.V. அவர்களும் இடம்பெற்றிருந்தார்.

1960 - ல் உருவாக்கப்பட்ட எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கத்தில் 1974 - வரை பொருளாளராகவும், பின்னர் 1986 - வரை கௌரவ செயலாளராகவும் பணியாற்றியுள்ளார். சங்கத்தின் தலைவர்

திரு. கி. வா. ஜ அவர்கள்; கல்கி ராஜேந்திரன், அகிலன், நா. பார்த்தசாரதி முதலியோர் செயற்குழு அங்கத்தினர்கள் ஆவர். இவர்கள் அனைவரும் திரு. H.V. அவர்களின் தமிழ்ப் பணியைப் பெரிதும் மதித்துப் போற்றினர்

**சங்கீதப் பணி**

1954 -ல் பாரதி கலாசாலை என்ற பெயரில் வீணை, வயலின், வாய்ப்பாட்டு வகுப்புகள் திருவல்லிக்கேணியில் நடத்தியுள்ளார். சங்கீத வித்வான் Dr. S. ராமநாதன் முதல்வராக இதில் பணிபுரிந்தார். ஆங்கிலம், ஹிந்தி, சமஸ்கிருதம், கணக்கு, பகவத்கீதை வகுப்புக்களும் பாரதி கலாசாலையில் திரு. H.V. அவர்களின் நன்முயற்சியால் நடைபெற்றன.

**நாடகப்பணி**

1958-ல் Dr. V. ராகவன் ‘ஸம்ஸ்கிருத ரங்கா’ என்னும் நாடகரங்கத்தைத் துவக்கியபோது, அதில் ‘மாளவிகாக்னிமித்ரம்’ ஸம்ஸ்கிருத நாடகத்தில் கதாநாயகனுக நடித்துள்ளார். ஜனுதிபதி Dr. S. ராதாகிருஷ்ணன் தலைமையில் டெல்லியிலும், உஜ்ஜயினி, போபால், சென்னை ஆகிய இடங்களிலும் இந்நாடகம் பெரும் வரவேற்பைப் பெற்றது. பின்னர் ஆசிரியர் பணி திரு. H.V. அவர்களை வெகுவாக ஈர்த்ததினுல் நாடகத்துறை மட்டுமல்ல; திரைத்துறையும் அவரை இழக்க நேர்ந்தது. உண்மையைச் சொல்லப்போனுல், ஜெமினி ஸ்டுடியோவில் திரைத்துறைக்கு 1946-ல் திரு.H.V. அவர்களும் திரு. கணேசன் என்பவரும் தேர்வு செய்யப்பட்டனர். அப்போது ஜெமினியில் தலைமை மேனேஜராக இருந்த ஸ்ரீ ராமய்யர் அவர்கள் திரு.H.V. யின் கல்வி பற்றியும், பணிபற்றியும் விசாரித்துப் பின்னர் ‘நீ திரைத்துறைக்கு வரவேண்டாமென எனக்குத் தோன்றுகிறது. . இப்போது செய்யும் பணிகளையே தொடர்ந்து செய்’’ என்று அறிவுரை கூறினுர்.அநுபவஸ்தரான அவரது அறிவுரையை ஏற்று திரு. H.V. அவர்கள் தம் பள்ளி ஆசிரியப்பணி, மற்றும், பிறபணிகளைத் தொடர்ந்தார். அவருடன் தேர்வு செய்யப் பட்டவர் பிற்காலத்தில் **ஜெமினி கணேசன்** என்று புகழ்பெற்றுத் தமிழ்த் திரையுலகில் சரித்திரம் படைத்தார்.

திரு. H.V.. அவர்கள் எழுதித் தயாரித்த 'ஆண்டாள்' என்ற நாடகம் அவருடைய நாடகப் பணியில் ஒரு மைல்கல்! 1944-லிலிருந்து சுமார் **75** வருடங்களுக்கும் மேலாக ஒவ்வொரு ஆண்டும் அவர் பணியாற்றிய பெண்கள் மேல்நிலைப்பள்ளியில் தொடர்ந்து இந்த நாடகம் இப்போதும் நடைபெற்று வருகிறது.

நாட்டிய உலகில் மிகவும் பிரபலமான ஸ்ரீமதி. சித்ரா விஸ்வேஸ்வரன், திருவல்லிக்கேணி 'ஸரஸ்வதி கான நிலையம்' ஸ்ரீமதி ரங்கநாயகி ஜெயராமன் ஆகியோர் இவரைப் பல நாட்டியப் பாடல்களை எழுதுவித்து அரங்கேற்றியிருக்கிறார்கள் என்பது இவரது நாடகப் பணிக்குப் பெருமை சேர்ப்பதாகும்.

**எழுத்துப்பணி**

பள்ளிப்பாடப் புத்தகங்கள், பத்திரிகைகளில் புத்தக விமர்சனங்கள், ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நாடகங்கள், வானொலி நாடகங்கள், சொற்பொழிவுகள் என்று திரு. H.V. அவர்கள் ஆற்றிய எழுத்துப்பணி ஏராளமாகும். தவிரவும் எதிர்கால சந்ததியினரின் நன்மையைக் கருதி திருவாசகம், தேவாரம், பழமையான ஸம்ஸ்கிருத துதி நூல்களிலிருந்து பாடல்களைத் தேர்வு செய்து சிறுசிறு புத்தகங்களாக தாமே இலவச பதிப்புக்களாக நிறைய வெளியிட்டிருக்கிறார்.

ஸ்ரீ ரமண மகரிஷிகளின் தலையாய அடியவராகிய ஸ்ரீ முகவை கண்ண முருகனார் சுவாமிகளின் பரிபூரண ஆசிகளைப் பெற்றவர் திரு. H.V. அவர்கள். ஸ்ரீமுருகனார் இயற்றிய சுமார் 30,000 பாடல்கள் மலைபோல் குவிந்து கிடக்கவும், சீரிய ரமண பக்தர்களாகிய ஸ்ரீ. ரமணபாதானந்தர் அவற்றை முறைப்படுத்தும்படி திரு. H.V. அவர்களை வேண்டினார். ஸ்ரீரமண பகவானருளால் செயற்கரிய இந்தப் பணியை வெற்றிகரமாகச் செய்து முடித்ததினால் திரு. H.V.அவர்கள் ஸ்ரீமுருகனாரின் அன்பிற்குரியவரானார்; மேலும் உலகெங்கிலுமுள்ள ரமண பக்தர்களின் நன்றிக்குமுரியவராகிறார். இவர் தயாரித்த ஸ்ரீமுருகனாரின் செய்யுள் முதற்குறிப்பகராதி (Index) பின்னர்

ஸ்ரீமுருகனாரின் அச்சிடப்படாத பாடல்களை தெரிந்தெடுக்கப் பெரிதும் உதவியது. இந்த ஒரு ரமணப்பணியே திரு. H.V.அவர்களை ஸ்ரீரமண வானில் மங்காத துருவ நக்ஷத்திரமாக சுடர்விட்டுப் பிரகாசிக்க வைக்கிறது.

திரு. 'சோ' ராமசாமி எழுதிய 'மஹாபாரதம்' புத்தகப் படிவங்களை அலயன்ஸ் நிறுவனத்தாருக்காக இவர் திருத்திக் கொடுத்தார் (Proof–reading). இதனை முகவுரையில் 'சோ'அவர்கள் பாராட்டியுள்ளார். இவ்வாறு உலகோர் கண்ணுக்குத் தெரியாமல் இவர் ஆற்றிய எழுத்துப்பணிகள் கணக்கிலடங்காது.

நான் ஸ்ரீரமண வித்யா ட்ரஸ்ட்டின் தலைவராக இருந்தபோது, 1999-ல் ஸ்ரீரமண மகரிஷிகளின் விவேகசூடாமணி (மூலம்: ஆதிசங்கர பகவத் பாதர்) தமிழ் மொழிபெயர்ப்பற்கு விளக்கவுரை எழுதித்தர வேண்டியபோது, மிக்க உத்ஸாகத்துடன் அந்த புனிதப் பணியை திரு. H.V. அவர்கள் செய்து முடித்தார். நாங்கள் இருவரும் கருத்தொருமித்து இணைந்து பணியாற்றிய அந்த நாட்கள் என் வாழ்நாள் முழுவதும் என் நினைவில் பசுமையாக நிலைத்திருக்கும். பின்னர் ஆதிசங்கரரின் 'திருக்கு திருசிய விவேகம்' நூலிற்கு ஸ்ரீபகவான் அருளிய மொழி பெயர்ப்பிற்கான விளக்கவுரை எங்கள் இருவரின் ஒருங்கிணைந்த முயற்சியால் செப்டம்பர் 2003 - ல் வெளியாகியது. இந்த இரண்டு நூல்களையும் சென்னை ஸ்ரீ ரமண பக்த ஸமாஜம் வெளியிட்டிருக்கிறது.

எளிமையும், தன்னடக்கமும், மனம் திறந்து நல்லனவற்றைப் பாராட்டும் பெருந்தன்மையும், நல்லொழுக்கமும், பாடம் புகட்டும்போது அளவற்ற பொறுமையும், எடுத்துக்கொண்ட பணியைச் சுறுசுறுப்பாகவும், முழுமையாகவும் செய்து முடிக்கும் சிரத்தையும், திட்டமிட்டுச் செயலாற்றும் பண்பும் இயல்பாகவே அமையப்பெற்ற திரு.H.V. அவர்கள் இளைய சமுதாயத்தினருக்குத் தக்கதோர் எடுத்துக்காட்டு ஆவார்கள். மற்றைய ஆசிரியர்கள், எந்தத் துறையைச் சேர்ந்தவராயினும், குருதக்ஷிணை பெறுவாராயிருக்க, திரு. H.V.

*அவர்களோ மாணவர்கள் ஆர்வத்தொடு தமிழ், ஸம்ஸ்கிருதம் கற்றுக்கொள்வதே தமக்குரிய சிறந்த குருதக்ஷிணையாகக் கொள்ளும் மனப்பான்மையையுடையவர். திருவல்லிக் கேணியில் ஸ்ரீபகவத் கீதை 18 அத்யாயங்களையும் இவரிடம் கற்றுக் கொண்ட பெண்கள், மாணவிகள் பலர். அவர்களில் திருமணமாகிப் போன பெண்டிர் தாம் இருக்குமிடத்தில் கீதையை பலருக்கும் கற்பிக்கிறார்கள். ஒரு விளக்கு பல விளக்குகளை ஒளியேற்றி விளங்கச் செய்வது இயல்பேயன்றோ! இப்படிப்பட்ட மாமனிதர்களைக் காண்பது அரிதினும் அரிது!*

*தொண்ணூறு வயதை நெருங்கிக் கொண்டிருந்த போது திரு.* H.V. *அவர்கள் தமிழில் உரை எழுதி* ***'ஸ்ரீரமண சத்வாரிம்ஶத்'*** *நூலை ஆக்கி அளித்தது ஸ்ரீரமண பக்தர்களுக்குக் கிட்டயதோர் வரப்பரசாதமே! தாமே நூலை இப்படித்தான் அமைக்க வேண்டுமென்று திட்டமிட்டும், திட்டமிட்டபடி உருவாக்கியும், படிவங்களை தக்கவாறு திருத்தியும் திரு.* H.V. *அவர்கள் முதுமையிலும் இந்நூலிற்காகப் பாடுபட்டதற்கு முக்கிய காரணம் காவ்யகண்ட கணபதி முனிவரின் அருமை பெருமைகளை அவர் முழுமையாக உணர்ந்திருந்ததேயாகும்.*

*பகவான் ஸ்ரீ ரமண மகரிஷியின் நிழலாய் வாழ்ந்த ஸ்ரீமுருகனாரின் பேரன்பையும், பரிபூரண ஆசிகளையும் பெற்றிருந்த திரு.* H.V.*அவர்கள் ஸ்ரீ முருகனாரைப் போன்றே பாரத்வாஜ கோத்திரத்தில் பிறந்தார்; ஸ்ரீமுருகனாரைப் போன்றே பெண்கள் மேல்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராகப் பணியாற்றினார்; மேலும் ஸ்ரீ முருகனாரைப் போன்றே நிறைந்த அமாவாசை நன்னாளில் ஸ்ரீ பகவான் திருவடிகளில் ஒன்று கலந்தார்.*

*காவ்ய கண்ட கணபதி முனிவர் மறைந்த செய்தியைக் கேள்யுற்ற ஸ்ரீ பகவான் ''இவரைப்போன்ற ஒருவரை இனி என்று காணவியலும்?'' என்றாராம் திரு.* H.V. *அவர்களுக்கும் மேற்கண்ட வரிகள் மிகவும் பொருந்துவனவாம். இதுதான் மனித நேயம், இதுதான் மனிதப் பண்பு என்றுச் சுட்டிக் காட்டும்படி வளமான நற்பண்புகள் பற்பல அவரிடம் குவிந்து கிடந்தன. ஸர்வ குண*

சம்பன்னராக வாழ்ந்த அவர்தம் வாழ்க்கையே மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருக்கும் அவர் விடுத்த செய்தியாகும்! மனித வாழ்க்கையின் உண்மைப் பொருளை உணர்ந்து, வாழ்ந்து வழிகாட்டிய இந்த மாமனிதர் ''செல்வர் சிவபுரத்தில் உள்ளார் சிவனடிக்கீழ் பல்லோரும் ஏத்தப் பணிந்து'' என்னும் மணிவாசகரின் அருள்வாக்கின்படி ஸ்ரீ சிவரமணத் திருவடிகளில் என்றும் நிலைத்திருக்கிருர் என்பதில் ஐயமில்லை.

ஓம் ஸ்ரீரமணுர்ப்பணமஸ்து

# அவதாரிகை

## (ஸ்ரீரமணோபதேசச் சுருக்கம்)

'நான் இருக்கிறேன்' என்னும் உணர்வு என்றும் எவருக்கும் இயல்பாய் உள்ள அனுபவமே! 'நான் இருக்கிறேன்' என்னும் ஸ்வானுபவத்தில் மனிதராய் பிறந்த எவருக்கும் நள்ளிருளிலும் கிஞ்சித்தேனும் சந்தேகம் ஏற்படுவதில்லை. அடர்ந்த இருட்டிலும் மற்றைய எல்லாப் பொருள்களையும் தேடுகின்ற மனிதன் தன்னை ஒருபோதும் தேடுவதில்லை. எனவே ஒவ்வொரு மனிதனுள்ளும் அவனை அடையாளம் காட்டுகின்ற ஒளியாக 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம் அவன் தூங்கும்போதும் கூட ஸதா ஒளிர்ந்து கொண்டேயிருக்கிறது. ஆனால் சராசரி மாந்தர் இந்த 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசத்தைக் கவனிப்பதேயில்லை.

ஏனெனில் 'நான் இருக்கிறேன்' என்ற உணர்வில் அனைவரது கவனமும் 'நான்' என்னும் முற்பகுதியில் குவிந்து விடுகிறது. 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதி பின்னுக்குத் தள்ளப்படுகிறது. உண்மை என்னவெனின் அனைவரது கவனத்தையும் ஈர்க்கின்ற 'நான்' என்னும் உணர்வு 'இருக்கிறேன்' என்னும் ஆதாரத்தைப் பற்றியே எழுகின்றது. 'இருக்கிறேன்' என்னும் ஆதாரப் பிற்பகுதி இல்லாவிடில், 'நான்' என்னும் முற்பகுதி எழுவது சாத்தியமின்று. 'இருக்கிறேன்' என்னும் உணர்விற்கு ஆதாரம் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே! இதுவே **உள்ளது** அல்லது ஸத் வஸ்து (ஆன்மா) எனப்படுகிறது. உண்மையில் இரண்டும் ஒன்றே! இதையே ஸ்ரீபகவான் 'ஸ்ரீரமணோபநிஷத்' என்று போற்றப்படும் 'உள்ளது நாற்பது' நூலில் 'உள்ளது அலது உள்ள உணர்வு ('இருக்கிறேன்' என்னும் இருப்புணர்வு) உள்ளதோ' என்று அருளியுள்ளார்.

'நான் இருக்கிறேன்' என்னும் உணர்வில், கவனம் 'நான்' என்பதில் நிலைபெறும்போது, சில அடிப்படைக் குறைபாடுகள் பளிச்சிடுகின்றன. அதாவது, படிப்பு, பணம், பதவி ஆகியவை இல்லை என்னும் குறைகள் தோன்றுகின்றன. எனவே மனிதன் கல்வி கற்கிறுன்; அந்தக் கல்வியின் துணைகொண்டு சொத்து, பத்துக்களைச் சேர்க்கிறுன்; அவற்றை உபயோகித்து அதிகாரம் மிக்கப் பதவிகளை அடைகிறுன். அவைகளை அடைவதற்குக் கடும் முயற்சியையும் அவன் மேற்கொள்கிறுன். அந்த முயற்சியில் வெற்றி பெறுவதற்கு சுமார் 20 அல்லது 25 வருடங்கள் கடுமையாக உழைக்கிறுன். அத்தகைய கடும் முயற்சியினுல் வெற்றியையோ அல்லது தோல்வியையோ சந்தித்த பிறகு, அவன் மிகவும் கவனம் செலுத்திய 'நான்' என்பது பெரும் மாற்றங்களை அடைந்திருப்பதை உணர்கிறுன்; அந்த மாற்றங்கள் உடலளவில், மனத்தளவில் பெரிதும் பாதிப்புக்களை ஏற்படுத்தியிருப்பதைத் தெரிந்து கொள்கிறுன். உடலோ பால்யம் (சிறுபிராயம்), யௌவனம் (இளமை), முதுமை, நரை, திரை, மூப்பு ஆகிய மாற்றங்களை அடைகிறது; மனமோ, பத்து வயதில் விளையாட்டு மனம்; இருபதுகளில் கல்வியை நாடும் மனம்; முப்பதுகளில் தொழிலில் ஆர்வம்; நாற்பதுகளில் சொத்து, பத்துகளைப் பெருக்கிக் கொள்வதில் தீவிரம்; ஐம்பதுகளில் பதவி ஆசை; அறுபதுகளில் வெற்றி பெற்ளுேமென்று களிக்கும் மனம் அல்லது தோல்வியுற்ளுேமென்று துவண்டுபோகும் மனம் என்று பற்பல பெருத்த மாற்றங்களை அடைகிறது. அறுபது வயதில் ஒருவன் தன்னைத் திரும்பிப் பார்க்கும்போது, அறுபது வயது மனத்திற்கும் பத்து வயது மனத்திற்கும் சிறிதும் சம்பந்தமேயில்லாத உண்மைநிலையை உணர்கிறுன். பொதுவாக மாந்தர் அகமுகப்பட்டு இத்தகைய தன்னுராய்ச்சியில் ஈடுபடுவதில்லை. அவ்வாறு அகமுகப்பட்டுத் தன்னைப் பற்றிய விசாரணையில் ஈடுபடுவோர் வெகுசிலரே!

ஏனெனில், 'நான்' என்னும் முற்பகுதி சுட்டிக்காட்டும் உடலும் மனமும் பெரும் மாற்றங்களை அடைந்து இடைவிடாது

சுழன்றவாறிருக்க (rotor) ஆதாரமாகயிருப்பது (stator) 'இருக்கிறேன்' என்னும் உணர்வே! உடலும், மனமும் அடைகின்ற மாற்றங்கள் 'நான்' என்று மனிதன் அபிமானிக்கும் முற்பகுதியைச் சார்ந்தவை; அவை 'இருக்கின்றேன்' என்னும் பிற்பகுதியைச் சிறிதும் பாதிப்பதில்லை. அந்த 'இருக்கிறேன்' என்னும் உணர்வு பத்து வயதிலும் சரி, அறுபது வயதிலும் சரி, ஒரே மாதிரியாக, சிறிதும் மாற்றமின்றித் திகழ்கின்றது. படிப்பு, பணம், பதவி ஆகியவை இருப்பதோ அல்லது இல்லாததோ அதை சிறிதும் பாதிப்பதுமில்லை; அல்லது அதற்கு மேலும் சிறப்பு சேர்ப்பதுமில்லை.

'நான்' என்னும் முற்பகுதியில் கவனம் குவியும்போது படிப்பு, பணம், பதவி ஆகியவை இல்லாமை குறைகளாக உருவெடுக்கின்றன. எனவே அவை மூன்றும் இலக்குகளாக (targets) மாறுகின்றன. அவைகளை அடைவதற்கு முயற்சி (efforts) தேவைப்படுகின்றது. ஆனால் 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதிக்கோ குறைகள் எதுவும் இல்லை; அதனால் இலக்குகளும் இல்லை; அவற்றை அடையவேண்டுமென்ற முயற்சியுமில்லை; அதனால் வெற்றி-தோல்வி, சுகம்-துக்கம் முதலிய இரட்டைகளுமில்லை. அது எப்போதும் குறைகளின்றி, நிறைவாக (பூரணமாக), இலக்குகளின்றி (without targets), முயற்சியின்றி (effortless) ஸ்வயம்பிரகாசமாக தனித்து, நிராலம்பலமாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது. சுருங்கக் கூறின், 'நான்' என்பது எண்ணங்களால் மனமாக உருப்பெற்று, அது சுட்டிக்காட்டும் உடலாகச் செயல்படுகிறது. அதற்கு நேர் எதிர்மாறாக, 'இருக்கிறேன்' என்னும் இருப்புணர்வோ எண்ணங்களற்றது; உடலொடும், மனத்தொடும் தொடர்பற்று முற்றிலும் அகர்த்தாவாக உள்ளது.

'நான்' என்பதோ கால, தேசங்களுக்குட்பட்டது. இந்தியாவில் ஒரு குக்கிராமத்தில் பிறந்தவன் அமெரிக்காவில் படிப்பு, பணம், பதவி ஆகிய இலக்குகளை எட்டியபோது சுமார் 25 வருடங்கள் வேகமாக ஓடிவிட்டதை உணர்கிறான். அவன் பிறந்த

குக்கிராமமோ, அமெரிக்காவோ அல்லது 25 வருடங்களோ 'இருக்கிறேன்' என்னும் உணர்வை சிறிதும் பாதிப்பதில்லை. அது அந்தக் குக்கிராமத்திலும் சரி, அமெரிக்காவிலும் சரி, 25 வருடங்களுக்கு முன்னுலும் சரி, பின்னுலும் சரி, ஒரே மாதிரியாக விளங்குகிறது. அதாவது, அது கால, தேசங்களுக்கு அப்பாற்பட்டு விளங்குகிறது.

'இருக்கிறேன்' என்னும் ஆதார பீடத்திலிருந்து 'நான்' என்னும் ஒன்று எழுந்தவுடன், நீ (முன்னிலை), மற்றும் 'அவன்' (படர்க்கை) என்பவை எழுகின்றன. 'நீ' என்பதற்கும், 'அவன்' என்பதற்கும் 'இருக்கிறேன்' என்னும் உணர்வே ஆதாரமாயிருக்கிறது. 'நீ' என்பது உன்னைப் பொருத்தவரையில் 'நான்' என்பதாகத்தான் இருக்கின்றது. 'அவன்' என்பதற்கும் அப்படியே! ஆகவே தன்மை, முன்னிலை, படர்க்கைகள் மூன்றினுக்கும் 'நான்-நான்' என்னும் அஹம்-அஹம் ஸ்புரணமே, அதாவது, 'இருக்கிறேன்' என்னும் இருப்புணர்வே ஆதாரமாக உள்ளது. எனவே 'நான்' என்னும் முற்பகுதித் தன்மை எழும்போது முன்னிலை, படர்க்கைகள் உடன் எழுகின்றன. ஆயினும், 'இருக்கிறேன்' என்னும் உணர்வோ இந்தத் தன்மை, முன்னிலை, படர்க்கைகளுக்கு விலக்ஷணமாய், அவற்றின் தொடர்பற்றுத் திகழ்கின்றது.

'நான்' என்னும் முற்பகுதியில் முன்னிலை, படர்க்கைகளைப் பார்த்தல், பார்க்கப்படுபொருள் (திருசியங்கள்), பார்ப்பான் (தன்மை) என்னும் முப்புடிகள் தோன்றுகின்றன. 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதியோ முப்புடிகளுமற்று, உணர்வு மாத்திரமாக ஒளிர்ந்து கொண்டிருக்கிறது.

மனிதன் 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியால் விளையும் தன்மை உணர்வால் தூண்டப்பட்டு தன் முன் பிரம்மாண்டமாகத் தோன்றும் உலகத்தைக் கண்டு வியக்கிறுன்; உலகம் தரும் விஷயாதி சுகங்களில் தன்னைப் பறிகொடுத்து, அத்தகைய உலகத்தைப் படைத்தவர் ஒருவர் கட்டாயம் இருக்கவேண்டுமென்று நம்புகிறுன். அப்போது 'அவன்' என்னும் படர்க்கை 'அவர்' என்னும் இறைவனுக உருவெடுக்கிறது. 'இருக்கிறேன்' என்னும்

உணர்வே 'அவன்' என்னும் படர்க்கைக்கு ஆதாரமாக இருப்பதைப்போல், 'அவர்' என்னும் இறைவனுக்கும் ஆதாரமாக இருக்க வேண்டுமென்பதை, உண்மையைப் பகுத்து அறிய விரும்பும் எந்தவொரு பகுத்தறிவாதியும் ஒப்புக் கொள்ள வேண்டுமல்லவா? 'இருக்கிறேன்' என்னும் **தன் உண்மை இருப்புணர்வை** சந்தேகத்திற்கிடமின்றி 'நான்' என்னும் தன்மை உணர்வால் ஸதா அனுபவித்துக் கொண்டிருக்கும் ஒருவன், 'இருக்கிறேன்' என்னும் அதே உண்மை இருப்புணர்வை ஆதாரமாகக் கொண்டிருக்கும் 'அவர்' (படர்க்கை) என்னும் இறைவனை **மறுத்தல் எங்ஙனம்?** தன் இருப்புணர்வில் ஐயம் கொள்ளும் ஒருவனே இறைவனின் இருப்புணர்வில் ஐயம் கொள்ள முடியும். இது அசம்பாவிதம்! முயற்கொம்பு, மலடிமகன் என்பனவற்றைப் போன்றதே! எனவே 'நான்' என்னும் முற்பகுதி ஒரு உடலைப் பற்றி நிற்கும் **ஜீவனும்**, 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதி ஆதார உணர்வுமயமாகத் திகழும் இறைவனாகிய **சிவனும்** ஆகும். இது காரணம் பற்றியே முக்தி அல்லது யோகம் (இறைவனொடு ஒன்று கலத்தலாகிய ஜீவபர ஐக்கியம்) கூறப்பட்டுள்ளது. ஒருவனின் கவனம் 'நான்' என்னும் முதற்பகுதியிலேயே தேங்கி விடுவதினால் இந்த உண்மை புலப்படுவதில்லை. ஜீவனின் இந்த அறியாமையை அகற்றி 'இருக்கிறேன்' என்னும் ஆதார பீடத்திற்குக் கவனத்தைத் திருப்புவதே **அருணாசல பஞ்சரத்னத்தின் நோக்கமாகும்**.

உதாரணத்திற்கு, ஹைதராபாத் செல்லும் ரயில்வண்டியில் ஏறும் ஒருவன் அது பெங்களூர் **செல்லாதென்றுக் கூறுவதில்லை.** அனைவரும் அறிந்த இந்த உண்மையை வாய்விட்டுக் கூற வேண்டிய அவசியமில்லை. ஆனால் இதைத்தான் ஒரு கிறிஸ்துவன் ஹிந்துவைப் பார்த்துக் கூறுகிறான். தினமும் ஆயிரக்கணக்கில் மாந்தர் ஹைதராபாத் சென்று கொண்டிருக்கும் உண்மையை அறவே மறுத்து, ஹைதராபாத் என்னும் கைலாஸம் இல்லவேயில்லை என்கிறான். ஆகவே பெங்களூர் என்னும் கடவுளின் சாம்ராஜ்யத்திற்குச் செல்லும் ரயில்வண்டியில் ஏறிக் கொள்ளுமாறு அறைகூவி அழைக்கிறான். இஸ்லாமியனும் டெல்லி என்னும்

அல்லாவின் தலைநகருக்குச் செல்லும் ரயிலில் வரும்படி வற்புறுத்துகிறான். உண்மை என்னவெனின், பாரத தேசத்தில் ஹைதராபாத், பெங்களூர், டெல்லி ஆகிய நகரங்கள் இருப்பதைப் போன்றே ஆன்ம சாம்ராஜ்யத்தில் கைலாஸம், கடவுளின் சாம்ராஜ்யம், அல்லா அரசாளும் சாம்ராஜ்யம், வைகுண்டம், புத்தர் காட்டும் நிர்வாணம் போன்ற பற்பல சாம்ராஜ்யங்கள் உள்ளன. முனியாண்டி, மாடசாமி, பெரிய கருப்பண்ணசாமி, மாரியம்மன், தக்காளியம்மன், முப்புடாரியம்மன் போன்ற சிறிய, சிறிய கிராமங்களும் உள்ளன. அங்கே நம்மை அழைத்துச் செல்வதற்கு வழிகாட்டிகளாக, அந்தந்த வழியை நன்கு அறிந்த எஞ்சின் ஓட்டுனர்களாக அறுபத்து மூன்று நாயன்மார்கள், இயேசு கிறிஸ்து, நபிகள் நாயகம் போன்றோர் உள்ளனர். பெரிய சாம்ராஜ்யமோ அல்லது சிறிய கிராமமோ, எதுவாயினும் சரி, அங்கே சென்றுச் சேர்ந்துவிட்டால் அது ஆன்மா சாம்ராஜ்யமே!

வெளிநாட்டிலிருந்து பாரத தேசத்திற்கு வரும் ஒருவன் டெல்லி, ஹைதராபாத், பெங்களூர் என்று கூறாமல், இந்தியாவில் இருப்பதாகவே நினைக்கிறான். அதுபோல், 'இருக்கிறேன்' என்னும் ஆதார இருப்புணர்வில் கவனத்தைத் திருப்பி, அதில் நிலைபெற்ற ஞானி கைலாஸம், வைகுண்டம், அல்லா, பரமபிதாவின் சாம்ராஜ்யம் ஆகிய அனைத்தும் ஆன்ம சாம்ராஜ்யமே என்பதை உணர்ந்தவராக இருக்கிறார். அதனால் ஸர்வ மத சமரஸ பாவத்தை உடையவராக இருக்கிறார். இன்னும் சரியாகக் கூறின், ஆன்ம சாம்ராஜ்யம், ஆன்ம ஞானி , ஆன்ம ஞானம் ஆகிய அனைத்தும் ஒன்றே; வேறல்ல!

ஆனால் 'நான்' என்னும் முற்பகுதியில் கவனத்தை செலுத்தி வாழ்பவனே தன்னுடைய மதமும், தெய்வமுமே உயர்ந்ததென்ற நினைப்பில் உழல்கிறான். ''ஹைதராபாத் (கைலாஸம்) என்பது இல்லவேயில்லை; பெங்களூர் (கடவுளின் சாம்ராஜ்யம்) ஒன்று தான் உள்ளது'' என்று பிறரை திசை திருப்பும் ஒருவன், அவ்வாறு தன் நேரத்தையும், பிறர் நேரத்தையும் செலவழிப்பதைக் கைவிட்டு, தான் **அகமுகப்பட்டு,** 'இருக்கிறேன்' என்னும் ஆதார வஸ்துவைச் (அதாவது பெங்களூரை) சென்றடைவானேயாகில், அனைத்தும்

ஆன்ம சாம்ராஜ்யமே (அதாவது பாரத தேசமே) என்பதை உணர்வான். அதனுலன்றே 'கடவுளின் சாம்ராஜ்யம் உனக்குள்ளே இருக்கின்றது' என்று இயேசுபிரானும் கூறியிருக்கிறுர்.

உண்மையில் அகமுகப்படுதல் என்பது பெங்களூர் செல்லும் ரயில் வண்டியில் ஏறியமர்ந்து பயணத்தைத் துவக்குவதைப் போன்றதேயாகும். அதைக் கைவிட்டு ஒருவன் ரயில் நிலையத்தில் நின்று கொண்டு பிறரை அறை கூவி அழைப்பதினுல் என்ன பயன்? தானும் பயணம் செய்யாமல், பிறரையும் தடுப்பதுதான் மிஞ்சும்.

எனவே 'நான்' என்னும் முற்பகுதியில் வாழும்போது ஹைதராபாத், பெங்களூர், டெல்லி போன்ற பின்னப்பட்ட நகரங்கள் (மதங்கள்) தெரிகின்றன. நாத்திகனே இப்படிப்பட்ட ஊர்கள் எதுவுமே இல்லையென்று சாதிக்கிறுன். ஆனுல் பாரத தேசமே இல்லையென்று கூறுவது அறிவுடைமை ஆகுமோ? அதனுல் அவனும்கூட 'இயற்கை' என்னும் பெயரால் பாரத தேசம் (ஒரு மேம்பட்ட சக்தி, Almighty) இருப்பதை ஒத்துக் கொள்கிறுன். அதாவது அவனையுமறியாமல் ஆன்ம சாம்ராஜ்யம் இருப்பதை ஒத்துக் கொள்கிறுன்.

ஆகவே என்றும் எவர்க்கும் இயல்பாய் உள்ள சத்வஸ்துவாகிய (ஆன்ம சாம்ராஜ்யமாகிய) 'இருக்கிறேன்' என்னும் உள்ள பொருளை அகமுகப்பட்டு உள்ளத்தில் ஓர்ந்து, அதில் ஒன்றி, ஒடுங்கி, நிலைத்து நின்றிடுதலே அறிவுடைமை,பகுத்தறிவு அனைத்துமாம்.

ஏனெனில், தெய்வம் உண்டு (ஆத்திகம்), இல்லை (நாத்திகம்), உருவமுடையது (சகுணம்-கிறிஸ்துவம், யூத மதம், பார்ஸி மதம்), அரூபமானது (நிர்குணம்-இஸ்லாம், புத்த மதம்), உருவருவமானது (உருவம் உடையதாகவும், இல்லாமலும் இருப்பது-வேத மதம்), ஒன்று (அத்வைதம்), இரண்டு (துவைதம்), ஒன்றிரண்டு (விசிஷ்டாத்வைதம்) என்னும் அனைத்து வாக்குவாதங்களும் 'நான்' என்னும் முற்பகுதியிலேயே உள்ளன.

எனவே மனிதன் இத்தகைய பிரிவினை வாதங்களிலிருந்து விடுபடவேண்டுமென்றால், கவனத்தை 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதிக்குத் திருப்ப வேண்டும். அருணாசல பஞ்சரத்னம் இந்தப் பேருண்மையைத் தெளிவாக எடுத்துரைக்கின்றது; பயில்வோரின் கவனத்தை 'இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசத்திற்குத் திருப்புகின்றது; அதற்குரிய வழிமுறைகளையும், உளவுகளையும் வெகுவாக எடுத்துரைக்கின்றது.

'நான் இருக்கிறேன்' என்னும் இருப்புணர்விலிருந்து, 'நான்' என்னும் முற்பகுதியில் கவனம் குவிக்கப்படுவதினால் எழுச்சி பெறும் 'நான்' என்னும் அகந்தையே அனைத்துத் துயரங்களுக்கும் காரணம்; அகந்தை இன்றேல் அனைத்துத் துயரங்களும் இன்றாகும். 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதியில் கவனம் குவியக் குவிய, 'நான்' என்னும் அகந்தையின் அழிவு ஆரம்பமாகிறது; இறுதியில் முழுவதுமாக அழிந்துவிடுகிறது. மனிதனும் தன் உண்மை இயல்பாகிய 'இருக்கிறேன்' என்னும் இருப்புணர்வில் நிலைபெற்றுத் தன் வாழ்க்கைப் பயணத்தை நிறைவு செய்கிறான்.

இந்த ஆன்மிகப் பயணத்தில் முத்திறப்பட்ட தடைகள் உள்ளன. அவற்றில் முதலாவது, 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதியையே உணராத **அறியாமை!** இரண்டாவது, அதை உணர்ந்தவுடன், 'இருக்கிறேன்' என்னும் ஸத் வஸ்து (ஆன்மா) உண்மையில் உள்ளதாவென்று ஏற்படும் **சந்தேகம்!** மூன்றாவது, இவ்விரண்டுதடைகளையும் தாண்டி, ரஜோ, தமோ குண ரஹிதனாய், ஸத்வ குண ஸம்பன்னனாய் ஆன்ம வஸ்துவின் சாந்தி, பிரம்ம நிஷ்டையில் பிரியம், மிக்க ஆனந்தம், அஷ்டமாசித்திகள் கைவரப்பெறுதல் ஆகிய அனுபவங்களைப் பெறும்போது, தாமே பூரணமாக ஆன்ம வஸ்துவாகி விட்டோமென்றுத் தோன்றும் **விபரீத ஞானம்!** ஒன்றை (ஆன்மாவை) வேறொன்றாக (அனாத்மாவாக) அறியும் விபரீத ஞானமே முத்தடைகளிலும் பெரிய தடையாகும். முக்குணரஹிதனாய் இதையும் தாண்டிச் செல்பவனே பரிபூரண ஞானி ஆகிறான். இந்த அறியாமை, சந்தேகம், விபரீதம் என்னும் மூன்று தடைகளையும் தாண்டி ஆன்மிகப் பயணத்தைத் தொடர

வழிகாட்டுவது அருணசல பஞ்சரத்னம்! இதைக் கூறவேண்டியே இந்த விளக்கவுரை அவசியமாயிற்று.

*'இருக்கிறேன்' என்று ஒளிரும் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம் அனைத்து ஜீவராசிகளிலும் ஸதா அஹம்-அஹம் (நான்-நான்) என்று ஸ்புரித்துக் கொண்டிருக்கின்றதென்றும், 'நான்' என்னும் அகந்தை அதனின்று எழுந்து உலகத் தோற்றத்தை உருவாக்குகின்றதென்றும், 'இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வில் கவனம் திருப்பப்படும் அகம் திரும்பலே ஞான விசாரமென்றும், அத்தகைய 'நானர்' என்னும் ஞான விசாரத்தால் ஒருவன் தன் சொந்த ஸ்வபாவத்தை நன்கு அறியலாமென்றும், அவ்வாறு நன்கறிதலால் அகந்தை மனம் முந்நீர் நதிபோல் நாசமுறுமென்றும், அவ்வித மனோநாசத்தால் உலகத் தோற்றமென்னும் கனவு மறையுமென்றும், இதுவே அருள் நிறைவு என்றும், அத்தகைய இறையருள் நிறைவினல் அனைத்தும் அன்னியமின்றித் தானகத் தோன்றுமென்றும், அதனல் தன்னிடத்திலே தோன்றும் அன்பு தன்னிச்சையாகவே பிறவுயிர்களுக்கும் பரவுமென்றும், இதனைச் சாதித்தவனே மனித வாழ்க்கை என்னும் ஆன்மிகப் பயணத்தில் வெற்றி பெறுகிருனென்றும் பரம காருண்யமே தன் இயல்பாகத் திகழும் பகவான் ஸ்ரீரமண மஹரிஷிகள் ஸ்வாநுபூதியில் அருணசல பஞ்சரத்னமென்னும் இச்சிறு நூலில் முமுக்ஷுக்களுக்கு நேர்மார்க்கம் காட்டியுள்ளனர். தன்னலம் நாடும் உத்தம அதிகாரிகள் இந்நூலின் சாரத்தை கிரஹித்தவராய் ஆன்மப் பயணம் செய்து மேன்மையாம் ஆன்ம வீடுபேறுற்றுத் தாமும் தம் வாழ்க்கைப் பயணத்தில் ஸ்ரீபகவானருளால் வெற்றி பெறுவராக!*

அவதாரிகை முற்றிற்று

# அருணாசல பஞ்சரத்னம்

## நூல் வரலாறு

*சீரிய அடியவர் காவ்ய கண்ட கணபதி முனிவர் ஒருமுறை ஸ்ரீபகவானிடம் சம்ஸ்கிருதத்தில் மிகக் கடினமான பாவினமாகிய ஆர்யாகீதவிருத்தத்தில் ஒரு ஸ்லோகத்தை இயற்றித் தர வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். முதலில் மறுத்த ஸ்ரீபகவானுக்கு கணபதி முனிவர் ஆர்யாகீதவிருத்தத்தின் இலக்கண விதிகளைக் கூறி மீண்டும் யாசித்தார்.*

*இது நடந்த சில மாதங்களுக்குப் பின்னர் ஸ்ரீபகவான் 'கருணா பூர்ண' என்று ஆரம்பிக்கும் ஸ்லோகத்தை இயற்றினார். சில வருடங்களுக்குப் பின்னர், 1917-ம் ஆண்டு கணபதி முனிவர் இந்த ஸ்லோகத்தைக் காண நேர்ந்தது. அதன் மேன்மையைக் கண்டு வியப்புற்ற அவர் மேலும் ஒரு ஸ்லோகத்தை இயற்றித் தருமாறு வேண்டினார். ஸ்ரீபகவானும் 'த்வையருணாசலம் ஸர்வம்' என்னும் இரண்டாவது பாடலை இயற்றியருளினார்.*

*முதன் முறையாக எழுதப்பட்டபோதிலும், ஸ்ரீபகவானுக்கு சம்ஸ்கிருத மொழியில் இருந்த புலமையைக் கண்டு ஆச்சரியமும், அவ்விரு பாடல்களில் காணப்பட்ட கம்பீரத்தையும், அழகையும் கண்டு ஆனந்தமும் ஒருங்கே அடைந்த கணபதி முனிவர் ஞானயோக, ராஜயோக, பக்தி யோகங்களுக்கு முறையே ஒரு ஸ்லோகமாக மேலும் மூன்று ஸ்லோகங்களை அருளுமாறு ஸ்ரீபகவானை வேண்டினார்.*

*சம்ஸ்கிருத மொழியில் மஹாகவியும், பரம பக்தருமான கணபதி முனிவரின் கோரிக்கையைப் புறக்கணிக்க மனமில்லாத ஸ்ரீபகவான் அவர் விருப்பப்படியே ஞானயோக, ராஜயோக, பக்தி யோகங்களை மையமாகக் கொண்ட மூன்று ஸ்லோகங்களை அருளினார். மனம் மகிழ்வுற்ற கணபதி முனிவர் இந்த ஐந்து ஸ்லோகங்களுக்கு **'அருணாசல பஞ்ச ரத்னம்'** என்று ஸ்ரீ பகவானின்*

ஒப்புதலுடன் பெயர் சூட்டினார்; அவற்றைத் தாமியற்றிய 'ஸ்ரீரமண கீதை' நூலுக்கு மங்கல ஸ்லோகங்களாக வைத்துக் கொண்டார்.

பஞ்சரத்னத்தின் இறுதி ஸ்லோகமாகிய 'ஸ்ரீமத் ரமண மஹர்ஷே:' என்ற ஆறும் பாடல் 'தைவராதர்' என்னும் கர்நாடக மாநிலத்தைச் சேர்ந்த அன்பரால் இயற்றப்பட்டது. கணபதி முனிவர் இயற்றிய ''ஸ்ரீரமண கீதை''யில் மூன்றும் அதிகாரத்தில் தைவராதர் ஸ்ரீபகவானின் முன் வைத்த விஞக்களும், அவற்றிற்கு ஸ்ரீபகவான் அளித்த விடைகளும் இடம் பெற்றுள்ளன. தைவராதர் காவ்ய கண்டரிடம் மந்திர தீக்ஷை பெற்றவர். அவருக்குப் பெற்றோரிட்ட பெயர் 'கஜானனம்' என்பதாகும்.

இவையெல்லாம் நடந்து சுமார் ஐந்து வருடங்களுக்குப் பின்னர், 1922-ம் வருடம் ஐயாசாமி பிள்ளை என்ற அன்பர் மேற்கூறப்பட்ட பாடல்களைத் தமிழில் மொழிபெயர்க்க வேண்டவும், ஸ்ரீபகவானும் மொழிபெயர்த்தருளினார். இவ்வாறு சம்ஸ்கிருதத்திலும், தமிழிலும் ரத்னச் சுருக்கமாக சதுர்யோகங்களின் உட்பொருளை வெளிப்படுத்தும் ஐந்து பாடல்களை, இருந்ததை இருந்தபடி இருந்து காட்டும் பரப்பிரம்ம மோன சொரூபராம் ஸ்ரீ பகவானிடமிருந்து பெற சுமார் எட்டு வருடங்கள் தேவைப்பட்டிருக்கின்றனவென்ற விவரம் ஆச்சரியமளிப்பதாக உள்ளது.

இந்த அரிய நூல் ஸ்ரீ ரமணாச்ரமத்தில் ஸ்ரீபகவான் சந்நிதியில் தினசரி காலையில் வேதபாராயணம், 'ஸ்ரீ ரமண சத்வாரிம்சத்' ஆகியவற்றுடன் சம்ஸ்கிருதத்தில் ஓதப்படுகிறது; திங்கள் முதல் வெள்ளிவரை மாலைதோறும் பாராயணத்தில் தமிழில் இசைக்கப்படுகிறது.

தமிழ்மொழி அறிந்தோர் சம்ஸ்கிருத ஸ்லோகத்தையும், பின்பு அதன் தமிழ் மொழிபெயர்ப்பையும் அடுத்தடுத்து இசைப்பது ஒரு மரபாக இருந்து வருகிறது.

## *பாடல் - 1*

***கருணாபூர்ணஸுதா⁴ப்³தே⁴ கப³லிதக⁴னவிச்வரூப***
***கிரணாவல்யா।***
***அருணாசலபரமாத்மன் அருணோ ப⁴வ***
***சித்தகஞ்ஜஸுவிகாஸாய॥***

***அருள் நிறைவான அமுதக் கடலே***
***விரிகதிரால் யாவும் விழுங்கும் - அருண***
***கிரிப் பரமான்மாவே கிளர்உளப் பூ***
***விரிபரிதி யாக விளங்கு.***

***பொ-ரை:*** *அருளின் முழுமையான தேவாமிர்தமான கடலே! தன் பெருகும் ஒளிக் கதிர்களால் உலகத் தோற்றம் அனைத்தையும் விழுங்கிவிடும் அருணமலையாகிய பரமான்ம வஸ்துவே! என் இதயமாகிய தாமரை மலரை மொட்டவிழ்த்து நன்றாக விரியச் செய்யும் ஆன்ம சூரியனாக விளங்குவாயாக! (விரியச் செய்தவரே என்றவாறு. இது இறந்த காலத்தை எதிர்காலமாகக் காட்டும் காலவழுவமைதி).*

***அ.ப-ரை:*** *கிளர் உளப் பூ - சூரியவொளியை எதிர்பார்த்து மலர்வதற்குத் தயாராக உள்ள தாமரை மலர் போன்று ஆன்ம ஞான ஒளியை கிரஹிக்கத் தயார் நிலையில் உள்ள மனம்.*

***வி-ரை: அருள்நிறைவான அமுதக் கடலே*** *என்றதாவது*

*பொதுவாக 'அருள் நிறைவு' என்பது விக்ரஹ ஆராதனை, மூர்த்தித் தியானம், மந்திரஜபம் ஆகியவற்றால் சிரவண, மனன, நிதித்யாசனங்களை வெகுகாலம் செய்து, தன்னுடைய இஷ்ட தெய்வத்தைத் தரிசனம் செய்வதேயென்று கருதப்படுகிறது.*

*தெய்வ தரிசனம் கிட்டியவுடன், அந்தத் தெய்வத்தொடு ஒன்று*

கலப்பது என்பதாகிய சாயுஜ்ய முக்தி நிலையை எய்துவது ''அருள் நிறைவு'' என்று அடுத்தக் கட்டமாக உருவெடுக்கிறது.

எல்லோரும் தெய்வ தரிசனம் பெறுவதில்லை; எல்லோருக்கும் முக்தி பதம் கிட்டுவதில்லை. எனவே இந்த இரண்டையும் எவ்வாறு அருளின் முழுமை என்று கூறமுடியும்? இறைவன் எல்லோருக்கும் எப்போதும் அருளிக் கொண்டிருப்பதைத்தான் அருளின் நிறைவு என்று கூற முடியும். 'நான்-நான்' என்னும் தன்னுணர்வாகிய அறிவின் பிரகாசம் ஒவ்வொரு ஜீவராசியிடமும் இறைவனின் அருளாகத் திகழ்வதால் அதையே அருளின் நிறைவாகக் கொள்வதே உசிதமாகப்படுகிறது. இதுவே அறிவுடைமையென்று பஞ்சரத்னத்திலுள்ள ஐந்து பாடல்களும் நிரூபிக்கின்றன.

இறைவனின் இந்த 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு இல்லையெனில் எந்த ஒரு ஜீவனும் செயல்பட இயலாது. இது மனிதர்களுக்கு மட்டுமன்றி விலங்குகள், பறவைகள், தேவர்கள், தாவரங்கள் (*e.g.* தொட்டாற்சிணுங்கி) என்று எல்லா ஜீவராசிகளுக்கும் எல்லாக் காலத்திலும் சமமாக, முழுமையாக இறைவனால் அருளப்பட்டுள்ளது. ஆகவே 'நான்' என்னும் ஸ்வப்பிரகாசமே அருள் நிறைவு; அதுவே இறைவனாகிய அருணாசலத்தின் சொரூபம்; அந்த 'நான்' என்னும் ஜோதி ப்ரகாசத்தையே ஸ்ரீபகவான் அருணாசலமாகக் காண்கிறாரென்பது ''அருள் நிறைவான அமுதக் கடலே'' என்று எடுத்த எடுப்பில் முதல் வரியிலேயே அவர் கூறுவதால் தெளிவாகின்றது.

இந்த 'நான்' என்னும் தன்னுணர்வு அவருடைய அனுபவமே! மதுரையில் 16-வயது பாலகனாக அவர் எதிர்பாராமல் பெற்ற ஆன்மானுபவத்தால் மரணத்தை வென்றார். பின்பு அவர் நம் முன் வாழ்ந்த 54 வருடங்களும் அவர் 'நான்-நான்' என்னும் ஜோதி சொரூபமாகவே வாழ்ந்தார். ஆகவே அவர் மரணத்தை வெல்ல உதவிய அருணாசலத்தைச் சாவாமருந்தாகிய தேவாமிர்தமாகவே காண்கிறார். அதனால் அருணாசலத்தை **'அமுதக் கடலே'** என்கிறார்.

மேலும், எங்கும் பரந்து, எதிலும் நிறைந்து எல்லாமாய்

விளங்கும் அருணாசல 'ஆன்ம வஸ்துவின் அளவிடற்கரிய (illimitable), எல்லையற்றத் (inexhaustible) தன்மையைக் குறிக்கக் 'கடலே' என்றார்.

இவ்வாறு 'நான்-நான்' என்னும் ஸ்புரிப்பாக அருணாசலம் எல்லா உயிர்களின் இதயத்திலும் ஸ்புரித்துக் கொண்டிருந்தாலும், ஜீவர்கள் எல்லோரும் அருணாசலத்தை (இறைவனை) அருளின் நிறைவாக ஏன் அறிந்து கொள்வதில்லையென்னும் ஐயப்பாடு நியாயமானதேயாகும். ஸ்ரீபகவான் குருவாசகக் கோவையில் இந்த ஐயத்தை நீக்கும் வகையில் விளக்கம் அளித்துள்ளார்.

ஒப்பு: உள்ளதே உள்ளமென ஓங்கும் திருவருளேல்
உள்ளுருகி உள்ளா உயிர்கட்கே – உள்ளதனை
எள்ளுகுறை ஏயுமலாது இன்னருள்செய் யாக்குறைஅவ்
உள்ளதனுக்கு எங்ஙன் உறும். – பாடல் 966

**பொருள்:** உள்ள பொருளாகிய ஆன்ம வஸ்து (இறைவன்) 'இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வாகப் பொங்கும் திருவருளாக எல்லோருக்கும் அனுக்கிரஹித்துக் கொண்டிருக்கிறது. உண்மை நிலை இவ்வாறிருக்க, அகமுகப்பட்டு அந்த உள்ளதனைக் (இறைவனை) கவனிக்காத குறை அத்தகைய உயிர்களைத்தான் சாருமேயன்றி, அருள் செய்யாத குற்றம் இறைவனுக்கு எவ்வாறு பொருந்தும்? (பொருந்தாது என்றவாறு).

'நான்-நான்' என்னும் தன்னுணர்வு எல்லோருக்கும் அனுபவம் ஆகும். ஆகவே இறைவன் 'இருக்கிறேன்' என்னும் உணர்வாக அனைவருக்கும் எப்போதும் அருள் செய்தவாறு இருக்கிறார். இந்தத் தன்னுணர்வின் பேருதவியினாலேயே ஜீவர் தம்முள் ஆழ்ந்து இறைவனை அறிந்து, முக்திபதம் உறுகின்றனர். எனவே இந்தத் 'தன்னுணர்வு' இறைவனின் 'அருள்நிறைவு' என்று போற்றப்படுகிறது. ஆனால் ஜீவர்களோ இந்தத் தன்னுணர்வை நாடாமல், முன்னிலை படர்க்கைகளை நாடி, புறமுகப்பட்டு ஸதா உலகாதி வெளி விஷய சுகங்களில் அலைவதால், ஜீவர்களுக்குத்தான் இறைவனிடம் கருணையில்லை யென்று சொல்ல வேண்டி வருகிறது. ஆகவே 'அருளாமை' என்னும் குற்றத்திற்கு ஜீவர்களே ஆளாவர்;

அன்றி இறைவன் ஒருக்காலும் ஆளாவதில்லையென்பது கருத்து. இதையே குருவாசகக் கோவையின் மேற்கண்ட பாடல் விளக்கி நிற்கின்றது.

பொதுவாக முரண்பாட்டை தெளிவுபடக் கூற மலைக்கும் மடுவிற்கும் உள்ள வேறுபாடு என்பர். இங்கே அதற்கு நேர் மாறாக, மலையென வானோங்கி உயர்ந்து நிற்கும் அருணாசலத்தைக் 'கடல்' என்று வர்ணிக்கிறார் ஸ்ரீபகவான். அக்ஷரமணமாலையிலும் இதே கருத்தை வலியுறுத்தியுள்ளார்.

ஒப்பு: கிரியுரு வாகிய கிருபைக் கடலே
கிருபை கூர்ந்தருளுவாய் அருணாசலா - பாடல்,17

***அ.ப-ரை:*** *கிரி - மலை, கிருபை - அருள்.*

***விரிகதிரால் யாவும் விழுங்கும் அருணகிரி பரமான்மாவே*** என்றதாவது

'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம் உலகத் தோற்றம் யாவற்றையும் முழுவதுமாக விழுங்கிவிட்டதென்ற தன் அனுபவத்தையே ஸ்ரீபகவான் இரண்டாவது வரியில் கூறுகிறார். ஒரு திரையரங்கில் மங்கலான வெளிச்சத்தில் திரைப்படக் காட்சியைக் காணுதல் சாத்யமாகிறது. அந்தத் திரைப்படக் காட்சி சூரிய ஒளியில் முற்றிலும் விழுங்கப்பட்டு

விடுவதைப் போன்று, 'நான்' என்னும் ஆன்மஜோதி ப்ரகாசத்தில் உலகக்காட்சி விழுங்கப்பட்டு விடுகிறது. ஜக, ஜீவ, ஈசுவரர்கள் (உலகு, உயிர், இறைவன்) ஆகிய காட்சிகள் 'மனம்' என்பதன் மங்கலான ஒளியில் சாத்யமாகிறது. ஒரு ஜீவனின் கவனம் அகம் திரும்பி 'நான்' என்னும் தன்னுணர்வில் குவிக்கப்படும்போது, 'நான்' என்னும் ஜோதி ப்ரகாசப் பெருக்கில் 'மனம்' என்னும் சிறிய ஒளி கரையவும், உலகு- உயிர்-கடவுளர் காட்சிகளும் அழிந்து போகின்றன. மதுரையில் மரண அனுபவத்தின்போது ஸ்ரீபகவானின் முழுக் கவனமும் தன்னுள் மூழ்கி 'நான்' என்னும் பேரொளிப் பிரகாசத்திற்குத் திருப்பப்பட்டது; உலகத் தோற்றமும் விழுங்கப்பட்டது.

***ஒப்பு (1):***

**உந்தப் படுவ உருப்பெயர்தாம் உண்ணின்றே**
**சிந்தைபொறி மூளைவழிச் சேருங்கால் - சிந்தை**
**இதயத்தே தங்கி இருக்குங்கால் மீளப்**
**புதைவனஆங் கேயவைஉட் புக்கு. - குருவாசகக் கோவை, 32**

***பொருள்:*** *மனம், ஐம்பொறிகள், மூளை வழியாக நாம, ரூபங்கள் ஒரு ஜீவனின் உள்ளிருந்தே உலகத் தோற்றமாக வெளித்தள்ளப்படுகின்றன. மனம் அகமுகப்பட்டு இதயத்தில் தங்கி இருக்கும்போது நாம, ரூபங்களாகிய உலகத் தோற்றம் மீண்டும் உள்ளே புதைந்து இதயத்தில் ('நான்' என்னும் ஜோதியில்) மறைந்துவிடும்.*

***அ.ப-ரை:*** *உந்தப்படுதல் - வெளித்தள்ளப்படுதல், உரு, பெயர்-நாம, ரூபங்கள், உண்ணின்றே -உள்ளிருந்தே, சிந்தை - மனம், ஆங்கே - இதயத்தில்.*

***குறிப்பு:*** *'நான்' என்னும் ஜோதி ப்ரகாசமே 'இதயம்' என்று அழைக்கப்படுகின்றதென்பதை இந்தப் பஞ்சரத்னத்தில் இரண்டாவது பாடலில் ஸ்ரீபகவான் குறிப்பிட்டுள்ளார்.*

ஒப்பு (2):

**'வாயு ளிருந்தே வலைநூல் வெளிப்படுத்தி**
**வாயுள்அதை மீள வயப்படுக்கும் - மாயச்**
**சிலந்திபோல் இவ்வுலகைச் சிந்தையும்தன் னுண்ணின்று**
**அலர்ந்தே அகப்படுக்கு மால். -குருவாசகக் கோவை, 31**

***பொருள்:*** *''சிலந்திப்பூச்சி எப்படித் தன்னிடமிருந்து வெளியில் நூலை நூற்று மறுபடியும் தன்னுள் இழுத்துக் கொள்ளுகிறதோ அப்படியே மனமும் தன்னிடத்திலிருந்து ஜகத்தைத் தோற்றுவித்து மறுபடியும் தன்னிடமே ஒடுக்கிக் கொள்கிறது'' என்று ஸ்ரீபகவான் நானார் அருண்மொழித் தொகுப்பில் கூறியுள்ளதன் செய்யுள் வடிவமே மேற்கண்ட பாடல் ஆகும்.*

*ஆகவே அகமுகப்பட்டு முழுக்கவனமும் 'நான்' என்னும்*

*தன்னுணர்வின்பால் திருப்பப்படும்போது, அந்த 'நான்-நான்' என்னும் ஜோதி ப்ரகாசம் வெளியுலகத் தோற்றம் அனைத்தையும் விழுங்கி விடுகிறது. இந்த சுவானுபவத்தைக் கூற வருவார் ''விரிகதிரால் யாவும் விழுங்கும் அருணகிரி பரமான்மாவே'' என்று குறிப்பிட்டார். இந்த அனுபவத்தை மேலும் விளக்கமாகக் கீழ்க்கண்ட வெண்பாவில் ஸ்ரீபகவான் எடுத்துரைக்கிறார்.*

ஒப்பு (3):

**ஆன்ம சொரூபத்தை ஆச்சா தனம்செய்து**
**தோன்றும் உலகுகனாத் தோற்றமே - தோன்றும்உலகு**
**தோன்றும் சொரூபத்தால் ஆச்சா தனம்எய்தின்**
**ஆன்ம சொரூபமே யாம்.** -**குருவாசக் கோவை, 47**

*(ஆச்சாதனம் - மறைப்பு)*

***பொருள்:*** *ஆன்ம சொரூப விளக்கமாகிய 'நான்' என்னும் தன்னுணர்வை மறைத்து, முன்னிலைப் பொருளாகத் தோன்றும் உலகம் ஒரு கனாத்தோற்றமேயாகும். எதிரில் தோன்றும் உலகம் 'நான்' என்னும் ஆன்ம சொரூபத்தால் விழுங்கப்படும்போது 'நான்' என்னும் சொரூபமே எஞ்சி நிற்கும்.*

***குறிப்பு:*** *'நான்-நான்' என்று ஸ்புரிக்கும் தன்னுணர்வே அருணகிரி பரமான்ம வஸ்து என்று ஸ்ரீபகவான் கூறுவதைப் பஞ்சரத்னத்தின் இரண்டாவது பாடலில் காண்க.*

*மனமாகிய சிறிய ஒளி ஆன்மப்பேரொளியில் கரைந்து போவதைக் குறிக்கும் கீழ்க்கண்ட பாடல் உள்ளி மகிழத்தக்கது.*

ஒப்பு (4):

**சின்னஒளி பேரொளியில் சேர்ந்தொழியில் அவ்வொளியில்**
**துன்னுபடக் காட்சி தொலைந்தாங்கே - மன்னியமெய்ச்**
**சித்தொளியில் சித்தவொளி சேர்ந்தொழியில் தீர்ந்தொழியும்**
**முத்திறப்பொய்க் காட்சி முடிந்து.** **- குருவாசகக் கோவை, 114**

***பொருள்:*** *திரையரங்கில் உள்ள சிறிய ஒளி, சூரியவொளி உள்ளே புகும்போது அந்தப் பேரொளியில் கரைந்து, மறைந்து போவதினால் அந்தச் சிறிய ஒளியில் தோன்றும் திரைப்படக் காட்சியும் அப்போதே*

மறையும். அதைப்போன்றே நிலைத்த சத்திய, சைதன்ய ப்ரகாசத்தில் பிரதிபலனச் சித்தமாகிய மனவொளி கரைந்து, அழிவதால் உலகு, உயிர், இறைவன் ஆகிய முத்திறப்பட்ட பொய்க்காட்சியும் மறைந்து போகும்.

ஸ்ரீபகவானின் அனுபவம் இத்தகையதொன்றாக விளங்கியது. 'நான்-நான்' என்னும் தன்னொளிப் பிரகாசமாகிய அருணகிரி பரமான்மாவின் பெருகிக்கொண்டேபோகும் ஆன்ம ஒளிக்கதிர்களால் உலகத் தோற்றமனைத்தும் விழுங்கப்பட்ட தம் அனுபவத்தை ஸ்ரீபகவான் ஆன்ம வித்தைக் கீர்த்தனத்திலும் குறித்துள்ளார்.

ஒப்பு: தன்னில் தனிலுணர மின்னும் தனுள் ஆன்ம
ப்ரகாசமே; அருள் விலாசமே; அக விநாசமே;
இன்ப விகாசமே. –சரணம் 3

***கிளர் உளப்பூ நன்றாய் விரிபரிதியாக விளங்கு*** என்றதாவது

விஷயாதி உலகத் தோற்றத்தால் கட்டுண்ட மனம் இங்கு மலராத தாமரை மொட்டுக்கு ஒப்பிடப்படுகிறது. உலகியல் ஆசாபாசங்களால் இறுக்கமாகப் பிணைக்கப்பட்டிருக்கும் மனம், முதிர்ச்சியின்மையால் மூடிக் குவிந்து கிடக்கும் ஒரு தாமரை மொக்காக உருவகிக்கப்படுகின்றது. பக்திப் பெருக்கத்தால் உலக சுகங்களில் விருப்பம் அகன்று, வைராக்கியமுற்று, படிப்படியாகப் பக்குவமேற்பட்டு உலகத் தோற்றத்திலுள்ள பிடிப்பு குறைந்து, அதன் இறுக்கம் தணிந்து, அந்த மொட்டு மலர்ந்து விரியத் தயார்நிலையை அடைகிறது. எவ்வளவுதான் முதிர்ந்து, கனிந்து, தயார்நிலையில் தாமரை மொட்டு இருந்தாலும், சூரியவொளி அதன்மேல் வீழாவிடில், தானாகவே மலர அதனால் இயலாது. அந்தச் சூரிய ஒளியே 'இறையருள் நிறைவு' அல்லது 'நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசம் ஆகும். உண்மையில், தாமரை மொட்டு பக்குவமுறவும்கூட சூரியவொளியே காரணமாவதைப்போல, மனமாகிய மொட்டு பக்குவப்பட 'நான்' என்னும் தன்னுணர்வுப் பேரொளியில் கவனம் திருப்பப்படுவதும் காரணமாகும். எனவே இவ்வாறு ஜீவன் சரியான முறையில் இறைவனைப் பிரார்த்திப்பதற்காக வேண்டியே, மனமலர்

மொட்டை, அதாவது, சித்ஜடக்ரந்தியாகிய அகந்தை முடிச்சை அவிழ்த்து, மலரச் செய்ய வேண்டுமென்று ஸ்ரீபகவான் இந்த வேண்டுதலை ஒரு திருப்பாட்டாக அக்ஷரமணமாலையில் வைத்தார்.

ஒப்பு:

**சகலமும் விழுங்கும் கதிரொளிஇன மன**
**சலச மலர்த்தியி டருணாசலா** -பாடல் 27.

இந்த உவமையின் மற்றொரு கோணத்திலிருந்து பார்க்கும்போது, பஞ்சகோசங்கள், சரீரத் திரயங்கள், முப்புடிகள், இரட்டைகள் ஆகியவற்றால் மறைக்கப்படுவதே ஜீவனின் இருப்புணர்வு மொட்டாக இருக்கும் நிலையாகும். அவ்வாறு ஆவரண மறைப்பால் உண்டாகும் அரையிருளில் உலகத் தோற்றம் சாத்யப்படுகிறது. சூரிய ஒளியாகிய 'அருள் நிறைவினால்' மொட்டு மலரும்போது, அரையிருள் அகன்று, விக்ஷேபத்தினால் தோற்றுவிக்கப்பட்ட நிழலுலகத் தோற்றம் 'நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசத்தினால் முழுவதுமாக விழுங்கப்பட்டு விடுகிறது.

ஒப்பு: **உள்ளத்து ஒளியை உணர்ந்த பொழுது**
**வெள்ளக் காரிருள் வெளியில் இருக்கிலென்**
**வெள்ளக் காரிருள் விளங்குமெய் யாம்அவ்**
**உள்ளத்து ஒளியை ஒளிக்கவொண் ணாதே.**
**- குருவாசகக் கோவை, 595.**

***பொருள்:*** உள்ளத்தில் ஸ்வஸ்வரூப இருப்புணர்வின் பேரொளியை அனுபவித்து அறியும்போது, வெளியில் உலகாதி நிழற்தோற்றங்கள் வெள்ளம்போல் எவ்வளவு இருந்தாலும் என்ன? அந்தக் கடல் வெள்ளம் போன்ற நிழற்கூட்டம், உள்ளத்தில் சுவானுபூதியால் பெருகும் 'நான்' என்னும் தன்னுணர்வுப் பேரொளியைச் சிறிதேனும் மறைக்க முடியாதே!

***குறிப்பு:*** ஒருவனது நிழல் எவ்வளவுதான் நீண்டு, கறுத்திருந்தாலும், சூரியனை மறைக்க இயலுமோ? அதுபோலவே, அண்டாண்ட கோடி அனாத்ம வெளியுலக நிழற்தோற்றங்கள் எத்துணைதான் விரிந்து, பெருகிக் காணப்பட்டாலும், அவை ஆன்மப் பிரகாசத்தை மறைக்க

இயலாதென்பது கருத்து. மேலும் ஆன்ம ஜோதிப் பிரகாசத்தில் அவை அத்தனையும் உடனே அழியுமென்பதும் தெளிவு! இதில் மறைந்து கிடக்கும் மற்றொரு உண்மையாவது, நிழல் சூரியனை ஊர்ஜிதப்படுத்துவது போன்றே, உலக நிழற்தோற்றம் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசத்தை மிக நிச்சயமான ஒன்றாக ஊர்ஜிதப்படுத்துகின்றதென்பதே!

இவ்வாறு ஸ்ரீபகவான் மரண அனுபவத்தினால் அவர்தம் கவனமனைத்தும் 'நான்' என்னும் தன்னுணர்வில் குவிந்து, அதனால் அகந்தையும், அதன் விளைவான உலகத்தோற்றமும் ஆன்ம ஜோதிப் பிரகாசத்தினால் விழுங்கப்பட்டு, அந்தத் தன்னுணர்வுப் பிரகாசமே 'அருணாசலம்' என்றும், அந்த அருணாசலம் உண்மையில் தன் சொரூபமேயென்றும் உணர்ந்தார். ஆகையினால், 'தாம்' மட்டுமே இருக்கிறோம் என்று கூறாமல், 'அருணாசலம் மட்டுமே உள்ளது' என்று கூறும் வகையில் ''அருணகிரி பரமான்மாவே! விரிபரிதியாக விளங்கு'' என்கிறார். அந்த அருணாசல ஜோதிப் பிரகாசத்தில் தம் ஜீவபோதம் அழியப் பெற்றமையால், தன்னை மறந்தவர் 'அருணாசலம் மட்டுமே உள்ளது' என்கிறார். அருணை ஜோதியாகிய 'நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசமே தம் சொரூபமாகிவிட்டவர், மலையுருவாகிய அருணாசலமும், மனிதனாகிய தாமும் தன்னுணர்வு ப்ரகாசத்தினால் 'ஒன்றே' என்று அக்ஷரமணமாலையில் அருணாசலனிடம் தெரிவித்துக் கொள்கிறார்.

ஒப்பு (1): அழகுசுந் தரம்போல் அகமும் நீயுமுற்று
அபின்னமாய் இருப்போம் அருணாசலா.
-பாடல் 2.

மேலும் அருணாசல அஷ்டகத்திலும் இதே கருத்தைக் கூறுகிறார்.

ஒப்பு (2): என்னையான் அறிவுற என்னுரு வேறேது
இருந்தனை அருணவான் கிரியென இருந்தோய்
-பாடல் 3.

**பொருள்:** என் உண்மையான சொரூபம் 'நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசமேயென அறிந்தபோது, எனக்கென்று வேறு தனி இருப்புணர்வு ஏது? அருணாசலா! நீயே நானாக இருந்தாய்.

இந்தப் பேருண்மையினுல் உந்தப்பட்டு ஸ்ரீபகவான் அருணுசலனே 'ரமணன்' என்று தன் பெயரையே வைத்து அழைக்கிருர்; அது சத்திய வாக்காகையினுல் தம் மீது கோபிக்கலாகாதென்றும் அருணே ஈசனேச் சமாதானப்படுத்துகின்ருர்.

ஒப்பு (3): ரமணனென்று உரைத்தேன் ரோசங் கொளாதெனே
ரமித்திடச் செயவா அருணுசலா. -பாடல், 90.

மற்றும் தைவராதர் இயற்றிய ஆரும் பாடலில் 'ஸ்ரீமத் ரமண மஹர்ஷே:' என்பதைத் தமிழில் 'அருணகிரி ரமணன்' என்று மொழிபெயர்த்து, அருணுசலமும் தாமும் வேறல்ல என்று ஸ்ரீபகவான் மீண்டும் உறுதி செய்கிருர்.

இனி, 'விரிபரிதியாக விளங்கு' என்பதனே அடியார்களின் வேண்டுதலாகக் கூறினுலும், அது ஸ்ரீபகவானேப் பொருத்த மட்டில் 'விளேவு கூறல்' ஆகும். ஏனெனில் அருணுசல அருள் நிறைவினுல் அவர் பெற்ற ஆன்மானுபவ முழுமையையே அது குறிக்கின்றது. 'விளங்கு' என்பது வினேத்தொகையாக ''விளங்கினுய்; விளங்குகின்ருய்; விளங்குவாய்'' என்று முக்காலம் பொருந்த விளங்குகின்றது. எனவே அன்பர்கள் கோணத்தில் வேண்டுதலாகவும், ஸ்ரீபகவான் நிலேயில் அவர்தம் விளேவு கூறலாகவும் ஒருங்கே ''விளங்கு'' என்னும் சொல் விளங்குகின்ற கவிதைநயம் ரசிக்கத்தக்கது. ''கிளர் உளப்பூ விரிபரிதியாக விளங்கு அருணகிரிப் பரமான்வே'' என்று கூட்டுக. 'அருணகிரிப் பரமான்மாவே' என்பது ''விரிகதிரால் யாவும் விழுங்கும்'' என்பதற்கும், ''கிளர் உளப்பூ விரிபரிதியாக விளங்கு'' என்பதற்கும் பொதுவில் அமைந்த 'மத்திமதீபகம்' என்னும் அணி அலங்காரம் ஆகும்.

இறுதியாக ஸ்ரீபகவானிடம் அன்பர்கள் வினவிய வினுக்களுக்கெல்லாம் அவருடைய பதில்கள் அவருடைய ஆன்மானுபவம் ஒன்றையே அடிப்படையாகக் கொண்டு வெளிப்பட்டிருக்கின்றன. ஒருமுறை வேத சாத்திர விற்பன்னர்கள் ''தங்கள் உபதேசங்கள் ஆதி சங்கரரின் அத்துவிதக் கோட்பாட்டை ஒத்திருக்கின்றன (your Teachings tally with Adisankara's)''

என்றபோது, ஸ்ரீபகவான் ''இந்த ஒப்பீடு நீங்களாகச் செய்வது; நான் என் அனுபவத்தையே கூறுகிறேன் (This is how you look at it; but I am speaking out only my experience)'' என்று விளக்கினார்.

இதையொட்டி காவ்ய கண்டர் ஏதாவது ஒரு ஸ்லோகம் ஆர்யாகீத விருத்தத்தில் அருளுமாறு வேண்டியபோது, ஸ்ரீபகவான் தம் ஆன்மானுபவம் ஒன்றையே இந்தப் பாடலாக எழுத்திற்கு எழுத்து, வரிக்கு வரி நிறைத்து, நிறைவாக வழங்கியுள்ளார். இந்தப் பஞ்சரத்னத்தில் இடம்பெற்றுள்ள அடுத்து வரும் நான்கு பாடல்களிலும் அவருடைய சுவானுபூதியே முழுவதுமாக நிறைந்துள்ளது.

இனி, உலகத் தோற்றம் அருணாசலத்தினால் முழுவதுமாக விழுங்கப்படுவதற்கான காரணத்தை இரண்டாவது பாடலில் விவரிக்கின்றார்.

முதல் பாடல் முற்றிற்று

## பாடல் – 2

**த்வையருணாசல ஸர்வம் பூ$^{4}$த்வா ஸ்தி$^{2}$த்வா**

**ப்ரலீனமேதச்சித்ரம் |**

**ஹ்ருத்$^{3}$யஹமித்யாத்மதயா ந்ருத்யஸி போ$^{4}$ஸ்தே**

**வத$^{3}$ந்தி ஹ்ருத$^{3}$யம் நாம ||**

**சித்திரமாம் இஃதெல்லாம் செம்மலையே நின்பாலே**
**உத்திதமாய் நின்றே ஒடுங்கிடுமால் – நித்தியமும்**
**நான்என்று இதய நடித்திடுவை யால்உன்பேர்**
**தான்இதயம் என்றிடுவர் தாம்.**

***பொ–ரை:*** *சிவந்த மலையே! உலகச் சித்திரமாகிய அனைத்தும் உன்னுள்ளே தோன்றி, நின்று, ஒடுங்கி லயப்படுகின்றது. நீயோ நித்தியமும் நான்-நான் என்னும் ஜோதி ப்ரகாசமாக ஒவ்வொரு ஜீவராசியினுள்ளேயும் நடனமிட்டுக் கொண்டிருப்பதால், பிரபஞ்சம் அனைத்திற்கும் இன்றியமையாத உன்னை 'இதயம்' என்று ஞானியர் கூறுகின்றனர்.*

***அ.ப–ரை:*** *நடித்திடுதல் - நடனமிடுதல் (இங்கே அஹம் -அஹம் ஸ்புரணம்).*

***வி–ரை: செம்மலையே நின்பாலே*** *என்றதாவது*

*செம்மலை என்றால் 'சிவந்த மலை' என்னும் பொருள் பிரசித்தமானது. 'அருணாசலம்' என்பதன் (வடமொழிச் சொல்லின்) தமிழாக்கமே செம்மலை ஆகும். 'அசலம்' என்றால் மலை; அருணன் என்பது விடியல் வேளையில் உதித்துக் கொண்டிருக்கும் இளஞ்சூரியன்; இளஞ்சூரியன் தகதகவென்று பொன்னிற ஆரஞ்சு நிறத்தில் பிரகாசிப்பதால் அண்ணாமலை வடமொழியில் 'அருணாசலம்' ஆகியது. பிரம்ம, விஷ்ணுக்களால் நெருங்க (அண்ணுதல்- நெருங்குதல்) முடியாத மலை என்பதால் தமிழில்*

'அண்ணுமலை' என்று அழைக்கப்படுகிறது. ஆனுல், இவையெல்லாம் சாமானியப் பொருள்களேயாகும். 'நான்-நான்' என்னும் ஜோதி ப்ரகாசத்திஞல் சிவந்து ஒளிர்வதால் ஸ்ரீபகவான் இங்கே அருணுசலனைச் 'செம்மலையே' என்று சிறப்புப் பொருளில் அழைத்தாராயிற்று. ஏனெனில் அந்த 'நான்' என்னும் ஜோதி ப்ரகாசத்தில் உலகத் தோற்றம் மட்டுமன்றி, அதைக் காண்கிற ஜீவனும் அந்த ஜோதியில் கரைந்து போகிருன். அந்த அளவு சிவந்து செக்கச் செவேலென்று ஒளிரும் அந்தப் பேரொளியில் கரைந்து போகும் அத்தனையும் அதன் சிவந்த தங்கமயமான நிறத்தையே பிரதிபலிக்கின்றன. அருணுசலத்தில் அதன் மண்ணும் சிவந்த நிறத்தில் காணப்படுவதும்கூட அதனுலேயேயாகும். ஆன்ம ஜோதியினுல் விழுங்கப்படும் அனைத்தும் அதன் செம்பொன் நிறமாகவே மாறிவிடுவதை ஸ்ரீமுருகனுர் ஸ்ரீரமணபுராணத்தில் கூறியுள்ளார். இதை வலியுறுத்திச் சொல்லும் விதமாக அண்டங்காக்கையை உதாரணமாகக் கூறுகிருர்.

***ஒப்பு:*** அம்பொன் மாமேரு அடைந்த பறைக்காக்கையும்அச்
செம்பொன் மயமாம் திறம்போலச் சிற்சொரூப
சந்நிதிவாய் ஏய்ந்த அதிசாமானிய உயிரும்
உந்நதமாம் அச்சொரூபம் உற்றுஒளிரும் மாண்பாலே
-ஸ்ரீரமணபுராணம், 311-314.

***பொருள்:*** *ஸ்ரீபகவானே! மேருமலையை அடைந்த மிகவும் கறுத்த நிறமுடைய அண்டங்காக்கையும் மேருமலையின் பொன்னெளியினுல் தனது நிறத்திற்கும் மேருமலையின் நிறத்திற்கும் சிறிதுகூட வித்தியாசமின்றி, தானும் தங்கமயமாய் ஜொலிப்பதைப்போல, உம்முடைய ஆன்ம சந்நிதியை அடைந்த அதி சாமானிய ஜீவனும் மேன்மை மிக்க ஆன்மஜோதியின் சொரூபத்தையே அடைகின்ருன்.*

***ஒப்பு (2):*** *இதே கருத்தைக் கூறும் ஸ்ரீமுருகனுரின் மற்ருெரு பாடல்:*

தெழிக்க வேற்புடைத் தொன்று நின்னெதிர்
சேர்ந்த மாத்திரத் தின்கண் வேங்கட
செழிக்க லாயது செம்பொன் மேருவைச்
சேர்ந்தகாக்கையும்திகழ்வதொக்குமே. -ஸ்ரீரமண சந்நிதிமுறை,466

***குறிப்பு:*** *நெருப்பில் வீழ்ந்த விறகு நெருப்பாகவே ஜொலிப்பதைப் போல என்றும் உதாரணம் காட்டுவர். 'தப்தாயப்பிண்டம்' என்று நெருப்பில் ஒளிரும் இரும்புக் குண்டையும் கூறுவர்.*

*'நான்' என்னும் ஜோதி ப்ரகாசமே உலகச் சித்திரமும், அதைக் காண்பவனும், அந்த உலகத் தோற்றம் சாத்யமாவதற்குரிய திரைச்சீலேயும், அதைக் காண்பதற்குரிய ஒளியும் ஆகிய அனைத்துமாம். ஸ்ரீரமணோபநிஷத் என்று போற்றப்படுகின்ற 'உள்ளதுநாற்பது' நூலின் முதற்பாடல் இதனை விளக்கி நிற்கின்றது.*

***ஒப்பு:*** **நாமவுருச் சித்திரமும் பார்ப்பானும் சேர்படமும்**
**ஆரொளியும் அத்தனையும் தானும் அவன்** *- பாடல் 1.*

*ஆன்ம ஜோதி ப்ரகாசத்தின் ஒளிக் கற்றைகளால் தோன்றும் அரைகுறை வெளிச்சத்தைப் பிரதிபலிக்கும் மனம் தோன்றும்போது 'நான்' என்னும் ஜோதியில் கவனம் செல்லாததினுல் அது தோன்றுவதில்லை. ஆனுல் அகமுகப்படுவதினுல் அந்த ஆன்மஜோதி பிரகாசிக்கும்போது மனமோ, தேகாபிமானமோ அல்லது அதனுல் உருவாக்கப்படும் உலகத் தோற்றமோ தோன்றுவதில்லை.*

***ஒப்பு:***

**ஜகம் தோன்றும்போது சொரூபம் (ஆன்மா) தோன்ருது ;**
**சொரூபம் தோன்றும் (பிரகாசிக்கும்)போது ஜகம் தோன்ருது.**
**- நானுர் அருண்மொழித் தொகுப்பு, ஸ்ரீபகவான்.**

*இவ்வாறு 'நான்-நான்' என்னும் ஜோதி ப்ரகாசத்தின் சிவப்புத் தன்மையை 'செம்மலேயே' என்றழைப்பதன் மூலம் விளக்குகின்ற ஸ்ரீபகவான்,* ***'நின்பாலே'*** *என்னும் சொல்லினுல் ஆன்ம வஸ்துவின் மற்றுமொரு இலக்ஷணத்தை வெளியிடுகிருர். 'நின்பாலே' என்ருல் நின்னுள்ளே (i.e. உனக்குள்ளேயே) என்பது பொருள். ஆகவேதான் 'நின்னுலே' என்று கூருமல்,* ***''நின்பாலே''*** *என்ருர். 'நின்னுலே' என்ருல் ஆத்மாவினுல் உலகத்தோற்றம் உருவாக்கப்படுகின்றது என்ருகிவிடும். இது முற்றிலும் அகர்த்தாவாக விளங்கும் ஆன்ம இயல்பிற்கு முரண்படுமாதலால் 'நின்பாலே (உனக்குள்ளே)'*

என்றார். அப்போது உலகத் தோற்றத்திற்கு யார் தான் காரணம் என்னும் கேள்வி தன்னிச்சையாக எழுமாதலால், அதற்குரிய காரணத்தைக் குருவாசகக் கோவையில் ஸ்ரீபகவான் கூறியுள்ளார்.

***ஒப்பு:*** **தானே உலகாய் சமைதலெனின் ஓர்பழுதை**
**தானே அரவாச் சமைதலாம் - காணுங்கால்**
**சர்ப்பமே இல்லையெனின் தான்சமைந்தாற் போல்உலக**
**உற்பவம்ஓர் காலும் இலை. - பாடல், 87**

***பொருள்:*** *ஒரு கயிற்றில் பாம்பைப் பார்ப்பவனே அந்தப் பாம்பை உருவாக்குகிறான். இதுவே படைத்தல்! அந்தப் பாம்பைக் கண்டு, அதை உண்மையென நம்பி, பயப்படுகிறான்; அவ்வாறு பயப்படுவதினாலே பாம்பு நிலைபெறுகிறது; இதுவே காத்தல்! பூரண வெளிச்சத்தில் அரையிருள் அகலவும், அது பாம்பல்ல; கயிறு என்று தெளிவுறுகிறான். இதுவே அந்தப் பாம்பை அழித்தல்! அதுபோலவே ஜீவனே அரையிருளாகிய மனவொளியில் ஆன்மாவை அனாத்மாவாகிய உலகமாகக் காண்கிறான்; இதுவே படைத்தல்! பின்பு அவன் உலகாதி சுகங்களில் மயங்கி, அவற்றில் லயித்துக் கிடப்பதே அவன் உருவாக்கிய அந்த உலகைக் காத்தல்! இறுதியில் 'நான்' என்னும் தன்னுணர்வாம் அருணாசல இறையருளால் நானாரென அகமுகப்பட்டு அவன் அந்த ஆன்ம ஜோதியில் கரையவும், உலகத் தோற்றமும் அழிந்துவிடுகிறது. இதுவே அழித்தல்!*

*ஆகவே பாம்பு என்றுமே இல்லவேயில்லையென்னும் போது, கயிறு ஒன்றே என்றும் உள்ள உண்மையாக ஆவதைப்போல், ஆன்மாவாம் தன்னுணர்வுப் பிரகாசமே என்றும் உள்ள உண்மை; உலகத் தோற்றம் ஒருக்காலும் இல்லையென்று மேற்கண்டப் பாடலில் ஸ்ரீபகவான் கூறுகிறார். எனவே ஜீவனே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலுக்கும் காரண கர்த்தாவேயன்றி, ஆன்மா நிமித்தகாரணன் ஆவது எங்ஙனம்? ஆன்மா அகர்த்தா என்னும் இந்தக் கருத்தை ஸ்ரீபகவான் சுவானுபூதியால் மேலும் வலியுறுத்தும் மற்றொரு பாடலைக் கீழே காண்க:*

***ஒப்பு (2):*** நானா விதமான நாமரூ பங்களோடு
தானே உலகாச் சமைதலால் – தான்ஓர்
நிமித்தனாய் அத்தை நிருமித்து அளித்துச்
சமித்தல் புரிவான் அலன். –குருவாசக்கோவை, 85

***பொருள்:*** *பலவித நாம, ரூபங்களோடு கூடிய பிரபஞ்சமாக ஜீவன் தானே உலகத் தோற்றத்தை உருவாக்கிக் கொள்வதால், அதைப் படைத்து, காத்து, அழிக்கும் முத்தொழில்களையும் புரிவது ஆன்மா அல்ல. முத்தொழில்கள் ஆன்மாவிலே நடைபெறுகின்றதே தவிர ஆன்மா அவற்றிற்கு நிமித்த காரணன் அல்ல. (சமித்தல் - அழித்தல்).*

*கயிறு தன்னில் பாம்புத் தோற்றம் உருவாகி, நிலைபெற்று, அழிந்துபடுவதைப் போன்றே உலகச் சித்திரம் அருணாசல ஆன்ம சொரூபத்தில் தோன்றி, நின்று, மறைகின்றதென்று கூற வருவார் ''சித்திரமாம் இஃதெல்லாம் செம்மலையே* ***நின்பாலே*** *உத்திதமாய் நின்றே ஒடுங்கிடுமால்'' என்றார். மேலும் ஆன்மாவாகிய தன்னுணர்வு ப்ரகாசம் ஸதா 'நான்-நான்' என்னும் அசல ஸ்புரிப்பாக நடனமாடிக் கொண்டிருப்பதால் அதன் பெயர் 'இதயம்' என்று பாடலின் பின்னிரண்டு வரிகளில் கூறுகிறார்.*

***தான் இதயம் என்றிடுவர் தாம்*** *என்றதாவது*

*மனித உடலிலும் கூட ஸதா துடித்துக் கொண்டிருப்பதால் அந்த உறுப்பு 'இதயம்' என்று அழைக்கப்படுகிறது. நுரையீரல், சிறுநீரகம், மூளை போன்ற மற்றைய எந்த உறுப்பு செயலிழந்தாலும் உயிர் பிரிவதில்லை. இதயம் துடிப்பது நின்று போனால் உடனே மரணம் சம்பவிக்கின்றது. அதுபோல் அண்டாண்ட கோடி அகில பிரபஞ்சமனைத்தும் செயல்பட இதயமாக விளங்குவது தன்னுணர்வாகிய ஆன்மாவே என்று ஞானிகள் பலரும் தம் அனுபவ அறிவால் உணர்ந்து கூறியுள்ளனர் என்று ஸ்ரீபகவான் கூறுகிறார். ஸ்ரீ பகவானும் தம் சுவானுபூதியால் இந்தப் பேருண்மையை இங்கே எடுத்துரைக்கிறார். வடமொழிச்சொற்கள் ஹ்ருத் (மையம், center)+ அயம் (இது) ஆகிய இரண்டும் ஒன்று சேர்ந்து 'ஹ்ருதயம்' என்று ஆகின. தமிழில் இதுவே 'இதயம்'*

எனப்படுகிறது. பிரபஞ்சமனைத்திற்கும் ஆன்மா மையமாக உள்ளது. *(Self has its centre everywhere & circumference nowhere)*. ஆகவே இதயம், ஆன்மா, பிரம்மம், கடவுள், முக்திபதம், மோக்ஷநிலை, பேருணர்வு, வீடுபேறு, கைவல்யம், ஞானம், இறையறிவு, வாலறிவு, பிரம்மஞானம், ஆன்மஞானம், சாந்தி, அருணாசலம் போன்ற பற்பல பெயர்களில் அழைக்கப்படுவது 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசமே!

ஆகவே அருணாசலம் 'நான்-நான்' என்னும் இருப்புணர்வு ஜோதியாக ஸதா ஸ்புரித்துக் கொண்டேயிருப்பதால் ஞானியர் அருணாசலத்தை 'இதயம்' என்று அழைக்கின்றனரென்று ஸ்ரீபகவான் இந்தத் திருப்பாடலை நிறைவு செய்கிறார்.

'இதயம்' என்பதைப் பற்றிய விவரங்களை மேலும் காண்க.

# இதயம்

'இதயம்' என்பதைப் பற்றிய அறிவுத் தெளிவை குருவாசகக் கோவையில் அறிவாராய்ச்சித் திறன், மற்றும் இதயத்திறன் என்னும் தலைப்புக்களில் ஸ்ரீ பகவான் விளக்கிக் கொடுத்துள்ளார்.

***ஒப்பு (1)***: **அயலாம் அவற்றை அறியப்போ காமெய்**
**இயல்பாம் அறிவே இதயம் – செயல்போம்**
**அறிவுக்குத் தன்மெய் அவிர்தலால் அத்தற்**
**குறிநிற்கும் அஃதே குலா. –குருவாசக் கோவை,435**

***பொருள்:*** அன்னிய புற விஷயங்களை அறிந்து கொள்ள வேண்டுமென்று எழாமல், அகமுகப்பட்டு தன் உண்மை இயல்பாகிய அறிவு மாத்திரமாக இருப்பதே ***'இதயம்'*** ஆகும். முற்றிலும் அகர்த்தாவாக எந்தவித செயல்பாடுகளுமில்லாத அமைதியில் திளைத்திருக்கும் அறிவிற்கே தன்னுடைய (அதாவது, ஆன்மாவினுடைய) பரம சத்திய இயல்பு 'நான்-நான்' என்னும் ஸ்புரணமாக அவிர்ந்தொளிருமாதலால், இதயத்தை ஸதா நாடி நிற்பதே (ஆன்ம நிஷ்டையே) ஒருவனுக்கு நிரந்தர மகிழ்ச்சியைத் தரும் (மற்றைய தேடல்கள் தராது என்றவாறு). (குலா - மகிழ்ச்சி).

***குறிப்பு: 'இதயம்'*** எண்ணங்களற்றது என்பது கருத்து. அருணாசலம் இதயம் என்று அழைக்கப்படுவதற்குக் காரணம் அது எண்ணங்களற்று, இருப்புணர்வு மாத்திரமாகத் திகழ்வதாலேயாகும். இக்காரணம் பற்றி ஸ்ரீபகவான் ''வெளி விடயங்கள் விட்டு விளங்கும் அருணாசலா'' என்று அருணாசலத்தை எண்ணங்களற்ற ***இதயமாகவே*** பஞ்சரத்னத்தின் நான்காம் பாடலில் பார்க்கிறார்.

***ஒப்பு (2):*** 'இதயம்' என்பது வெற்றுணர்வே என்னும் மற்றொரு பாடல்:

**அனைத்தும்தோன் றும்நிலைக்கண் ணாடியென லாகும்**
**இனைத்தெனலா காமெய் இதயம் – தனித்தொளிரும்**

வெற்றுணர்வாய் விஞ்சு விமலவெளி யாம்அஃதே
முற்றுமுழு மோன முதல். –குருவாசக் கோவை, 256

***பொருள்:*** *இது இப்படிப்பட்டதென்று எவராலும் கூறமுடியாத உண்மையான இதயம் (ஆன்மா), உலகத் தோற்றமனைத்தும் தோன்றும் ஒரு நிலைக்கண்ணாடி போன்றதாகும். இருப்பு மாத்திரமான வெற்றுணர்வாக மிஞ்சி நிற்கும் பரிசுத்த சிதாகாசமான அதுவே முழுமையான மோன ஆதி மூலப் பொருளாகும்.*

***வி–ரை: தனித்து ஒளிரும் வெற்றுணர்வு*** *- அது மாத்திரமாகத் தனித்து (ப்ரத்யக்) ஒளிரும் 'இருக்கிறேன்' என்னும் வெறும் (கேவலம்) உணர்வு; உபாதி எதுவும் கலவாது வெறுமனே பிரகாசிப்பது; தனக்கு அயலாக உள்ள ஒன்றைச் சுட்டி அறியும் அகந்தை மன சுட்டறிவு அல்ல; மாறாக, 'தன்னை அறிகிறேன்' என்பதுகூடத் தோன்றாமல் ''இருக்கிறேன்'' என்னும் வெறும் இருப்புணர்வாக மட்டுமே ஒளிர்வதால் எண்ணங்களற்ற இதயத்தை (ஆன்மாவை) 'வெற்றுணர்வு' என்றார். (சுட்டுணர்வு - relative knowledge; வெற்றுணர்வு - absolute knowledge).*

*''அநாதியிலே விளைந்ததோர் பாழை, பெற்ற* ***வெறும் தனியை*** *தெளிய விளம்பியவா'' என்று கந்தரலங்காரத்தில் அருணகிரியார் சுவானுபூதியில் கூறுவதும் இந்த வெற்றுணர்வையே!*

*''தானாயிருத்தலே தன்னை அறிதலாம்'' (உபதேச உந்தியார், 26) என்றும், ''உள்ளது உணர உணர்வு வேறின்மையால் உள்ளது உணர்வாகும்; உணர்வே நாமாய் உளம் (உபதேச உந்தியார், 23)'' என்றும் ஸ்ரீபகவான் 'நான்-நான்' என்னும் எண்ணங்களற்ற தன்னுணர்வு ப்ரகாசமாகத் தம் அனுபூதியில் கூறுவதும் இந்த வெற்றுணர்வையே!*

***ஒப்பு (3):*** இதயக் கருவே எவற்றிக்கும் ஆதி
இதயக் கருவே இடையும் – இதயக்
கருவே இறுதி கனவிசும் பாம்அஃது
உருவேஅன்று உண்மை ஒளி.

–குருவாசகக் கோவை, 257.

***பொருள்:*** *இதயமாம் அந்த மூலப் பொருளே அனைத்திற்கும் ஆதி, மத்தி, அந்தம் (முதல், இடை, ஈறு) ஆகும். ஆத்மாகாசமான அது உருவமற்றது; மேலும், அது உண்மை ஒளியாகிய 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசமே ஆகும்.*

***ஒப்பு (4):*** அன்னியம் ஒன்றின்றி அகண்ட பரிபூரணமா
மன்னியது உன்னாலே மதிப்பரிதால் - எந்நினைவும்
எண்ணாது இருந்துஒளிர்மெய் இன்பாம் இதயமே
அண்ணா மலைஎன்ஆன் மா.

-குருவாசக் கோவை, 259.

***பொருள்:*** *அன்னியம் எதுவுமன்றி அபின்னமாகத் திகழும் பரிபூரண வஸ்துவை உன்னல் அகந்தை மன அறிவைக் கொண்டு மதிப்பிடுதல் இயலாது. அந்த மனம் அழிந்து, எண்ணங்களற்று, உண்மை இருப்புணர்வு இன்பமாய் விளங்கும்* ***இதயமே*** *அண்ணாமலை எனப்படும் என் ஆன்ம சொரூபம்!*

***குறிப்பு:*** *ஆன்ம வித்தைக் கீர்த்தனத்திலும் (சரணம்-5) ஸ்ரீபகவான் 'அண்ணாமலை என் ஆன்மா' என்று கூறுகிறார். இந்தப் பஞ்சரத்னத்தின் ஆறும் பாடலிலும் 'அருணகிரி ரமணன்' என்று கூறிக் கொள்வதை முன்னமே பார்த்தோம்.*

***ஒப்பு (5):*** *இதயம் எண்ணங்களற்று விளங்குவதால் 'அதுவே அருணாசலம்' என்று ஸ்ரீபகவான் கூறுவதையே பிரம்ம கீதை 'இதயமே இறைவன்' என்று கூறுகிறது.*

***''விதம்படும் உ(ள்)ளம்தொறும் அவிசேடஅறி வாயுற்று***
***இதம்படுலால் இதயம் என்பர் இறைதன்னை....***

***-பிரம்மகீதை, 6.10.***

***பொருள்:*** *விசேஷ அறிவு என்பது சுட்டியறியப்படும் சுட்டறிவு; இது பற்பல வடிவங்களில் விதவிதமான ஜீவராசிகளைச் சுட்டி அறியப்படுவது; அவிசேட அறிவு எல்லா உயிர்களிலும் 'நான்' என்று ஒளிரும் இருப்பறிவை உணர்வதாகும். அவ்விதம் அனைத்து உயிர்களிலும் அவிசேஷ அறிவாய் ஒளிர்வதால் இறைவனை*

*'இதயம்' என்பர். 'அவிசேஷ அறிவு' என்னும் சொல் வேதாந்த இலக்கியத்தில் மிகவும் பிரசித்தமானதாகும்.*

*(அவிசேட அறிவு - அவிசேஷ அறிவு, விசேட அறிவு - விசேஷ அறிவு).*

*இறையுணர்வை அவிசேஷ ஞானமென்று ஸ்ரீரமண புராணத்திலும் ஸ்ரீ முருகனார் கூறுகிறார்.*

**அவிசார நோக்காம் அநேக விசேடத்தும்**
**அவிர் சாரமாம் மெய்அவிசேட ஞானமே**

-ஸ்ரீரமண புராணம், 439-440.

***பொருள்:*** *அகந்தை மன அவிசார நோக்கால் பல்வேறுபட்டுத் தோன்றும் பற்பல விசேஷப் பொருள்கள் யாவிலும் அவற்றின் உள்ளே நின்று அவிரும் பின்னப்படாத பூரண அவிசேஷ மெய்ஞ்ஞானமே!*

*பின்னப்பட்ட விசேஷ ஞானம் கைவல்ய நவநீதத்தில் நன்கு விளக்கப்பட்டுள்ளது.*

***ஒப்பு (6):*** **ஆதாரம் சமமாம் எங்கும் ஆரோபம் விசேடமாமே.**

-தத்துவ விளக்கப்படலம், 44.

***கருத்து:*** *ஆதார வஸ்துவாகிய ஆன்மா ஏற்றத் தாழ்வற்று எங்கும் சமமாக நிறைந்துள்ளது. அதன்மீது அகந்தையால் ஆரோபிக்கப் பட்டவை தனிப்பட விசேஷங்களாகத் தோன்றுகின்றன.*

***ஒப்பு (7):*** *இதயத்தை அகமுகப்பட்டு அடைந்தவர்களும் எண்ணங்களற்றுப் போகின்றனரென்பதைக் குறிக்கும் பாடல் இங்கு நினைவுகூரத்தக்கது.*

**அந்த இதயத்தை அறிந்தார் அவலமுறார்**
**பந்தமதி கெட்டார் பரமானார் - தொந்த**
**நினைப்பற்றார் உள்ளே நிஜபரமா னந்த**
**முனைப்புற்றார் மோக முசித்து.** -குருவாசக்கோவை, 260.

***பொருள்:*** *அந்த இதயத்தை அறிந்தோர் கேடுறார்; கட்டுண்டோமென்ற பொய்யுணர்வு (பந்த மதி) நீங்கப் பெற்றார்;*

பரவஸ்துவானுர்; இரட்டைகளோடு கூடி நிற்கும் எண்ணங்கள் முழுவதும் அகலப் பெற்றுர்; இவ்வாறு அகந்தை மனம் அழிந்ததினுல் ஆன்மப் பேரின்பப் பரமானந்த முனைப்பு தீவிரமடையப் பெற்றுர். அதாவது, ஆன்ம இன்பத்தில் மூழ்கினுர்; 'இன்புருவாம் உன்னில் ஆழ்ந்தே' என்று பஞ்சரத்னத்தில் ஐந்தாம் பாடலில் ஸ்ரீபகவான் கூறுவதும் இதுவே!

இத்தகைய வலிமையான காரணங்களினுலும், சுவானுபூதியினுலும் ஸ்ரீபகவான் அருணாசலத்தை ''பூமியின் இதயம்'' என்று அருணாசல மாஹாத்மியத்தில் குறிக்கப் பட்டுள்ளதைச் சுட்டிக் காட்டுகிருர்.

***ஒப்பு (8):***

**அதுவேதலம் அருணாசலம் தலம்யாவினும் அதிகம்**
**அது பூமியின் இதயம் அறி அதுவே சிவன் இதயப்பதியாம்...**

***பொருள்:*** *புண்ணிய க்ஷேத்ரம் அருணாசலம் ஆகும். மற்றைய எல்லா க்ஷேத்ரங்களிலும் தலையாயதும் அதுவே. அகில பிரபஞ்சத்திற்கும் அதுவே* ***இதயம்*** *என்பதை உணர்வாயாக! அதுவே ஸர்வேசுவரனின் இதயத் தலமும் ஆகும்.*

***குறிப்பு:*** *'பூமி' இங்கே பிரபஞ்சம் அனைத்திற்கும் ஆகுபெயராக நின்றது.*

***வி–ரை:*** *கனக சபாபதியாக நடராஜ* ***மூர்த்தி*** *எழுந்தருளியுள்ள 'கோயில்' என்பது சிதம்பரத்தையே குறிக்கும். 'தீர்த்தம்' என்றுல் கங்காநதியைக் குறிக்கும். அதுபோல் 'தலம்' என்பது அருணாசலத்தையே குறிக்கும்.* ***மூர்த்தி, தலம், தீர்த்தம்*** *ஆகிய மூன்றும் புண்ணிய க்ஷேத்ரங்களுக்கு மிக மிக முக்கியமானவை ஆகும்.*

*அருணாசல மாஹாத்மியம் பதினெண்புராணங்களில் மிகப் பெரியதாகிய ''ஸ்காந்தம்' எனப்படும் ஸ்கந்தபுராணத்தில் 'மஹேஶ்வர காண்டத்தில்' மூன்றுவது அதிகாரமாக அமைந்துள்ளது. இதில் உள்ள சம்ஸ்கிருத ஸ்லோகங்களை*

ஸ்ரீபகவான் தமிழில் மொழிபெயர்த்துள்ளார். இவை ஸ்ரீரமண நூல் திரட்டில் இடம் பெற்றுள்ளன.

இத்தகையதோர் அரும்பெரும் பொருள் நம் ஒவ்வொருவருள்ளும் இருப்புணர்வு ப்ரகாசமாக ஒளிர்ந்து கொண்டிருக்கின்றதெனின், அதை அறிந்து கொள்ள வேண்டுமென்ற இச்சை பிறப்பது இயற்கையேயல்லவா! ஆகவே அதற்கான வழிமுறை, மற்றும் உபாயம்தனை அடுத்து வரும் மூன்றும் பாடலில் ஸ்ரீபகவான் எடுத்துரைக்கிறார்.

இரண்டாம் பாடல் முற்றிற்று

### பாடல் 3

**அஹமிதி குத ஆயாதீத்யன்விஷ்யாந்த:**
**ப்ரவிஷ்டயாத்யமலதி⁴யா।**
**அவக³ம்ய ஸ்வம் ரூபம் சாம்யத்யருணாசல த்வயி**
**நதீ³வாப்தௌ⁴ ॥**

**அகமுகமார் அந்த அமலமதி தன்னால்**
**அகம் இதுதான் எங்குஎழும்என்று ஆய்ந்தே – அகவுருவை**
**நன்குஅறிந்து முந்நீர் நதிபோலும் ஓயுமே**
**உன்கண்அரு ணாசலனே ஓர்.**

*(முந்நீர் - கடல், அகவுரு - அகந்தை மனதின் மூல உருவாகிய ஆன்மா).*

***பொ-ரை:*** *அகமுகப்படும் பரிசுத்தமான மனத்தினால் எங்கிருந்து 'நான்' என்று அபிமானிக்கப்படும் தற்போதம் எழுகின்றதென்று தீர விசாரித்து, அந்தத் தன்மை உணர்வின் மூல சொரூப உண்மையை உணரும்போது, அந்த அகந்தை மனத் தன்மை உணர்வு, கடலில் ஒன்று கலந்துவிடும் நதியைப் போல், அந்த 'நான்-நான்' என்னும் ஜோதிப் பிரகாசப் பேருணர்வாம் உன்னிடத்தில் கரைந்து, மறைந்து, அழிந்து விடுகிறது. இதை நான் உன்னருளால் உணர்ந்து கொண்டேன். இதைத் தெரிந்து கொள்வாயாக!*

***வி-ரை: அகமுகமாரந்த அமல மதி தன்னால்*** *என்றதாவது*

*'அமல மதி' என்பதனால் பரிசுத்த, மலமற்ற, மாசற்ற மனத்தைக் குறித்தார். மனம் எந்த அளவு தூய்மையாக உள்ளதோ, அந்த அளவிற்கு 'நான்-நான்' என்னும் தன்னுணர்வின் ஜோதி ப்ரகாசம் தெளிவாகப் புலப்படும். மனத் தூய்மை குறையக் குறைய, அந்த ஜோதி ப்ரகாசமும் மங்கிவிடும். எனவே மனத்தூய்மையைப் பெருக்கிக் கொள்ள மிகச் சிறந்த வழி, தூய்மையற்ற மனத்தை அகமுகப்படுத்தி, கவனத்தை அந்தத் தன்னுணர்வின்மீது*

திருப்புதலேயாகும். இதுவே 'நானுர் விசாரம்' ஆகும். உலகத் தோற்றத்தை உண்மையென நம்பி, வெளியுலக விஷயாதி சுகங்களில் பற்று அதிகரிக்கும்போது அந்த அளவிற்கு மனம் தூய்மையற்றுப் போகின்றது. மனம் அகமுகப்படப்பட உலகத் தோற்றத்தின் பொய்மை பிடிபடுகிறது. 'நான்' என்னும் ஜோதி ப்ரகாசம் பெருகப் பெருக உலகத்தோற்றம் அதனுல் விழுங்கப்படுகிறது. ஆகவே அகம்திரும்பலே மனத்தூய்மையை உறுதி செய்கிறது. இதையே அருணுசலன் தமக்குக் கற்றுக் கொடுத்ததாக அக்ஷரமணமாலேயில் ஸ்ரீபகவான் கூறுகிறுர்.

***ஒப்பு:*** திரும்பி அகம்தனேத் தினம்அகக் கண்காண்
தெரியும்என் றனேஎன் அருணுசலா. -பாடல்,44

***பொருள்:*** *மனத்தை அகமுகப்படுத்தி தினமும் விடாது கவனத்தை 'நான்' என்னும் ஜோதியாகிய உன்னிடத்திலே குவித்தால், உன் சொரூபம் புலப்படுமென்று எனக்கு உபதேசம் செய்தாய் அருணுசலா!*

இங்கே மிக முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டிய கருத்து என்னவெனின், மனத்தை அகமுகமாகத் திருப்புவதே அதைத் தூய்மை செய்யும்; மனத்தைத் தூய்மைப்படுத்தி விட்டுத்தான் அகம் திரும்பலாகிய நானுர் விசாரம் மேற்கொள்ளப்படவேண்டுமென்ற அவசியமில்லே; மாருக, மனத்தை அகமுகப்படுத்தும் நானுர் விசாரமே அதைத் தூய்மைப் படுத்தவும் செய்யும். அதனுல்தான் 'அகமுகமார்ந்த' என்று அகம் திரும்பலே முதலில் கூறி, 'அமலமதி தன்னுல்' என்பதை பின்னுல் வைத்தார். 'அமலமதி தன்னுல் அகமுகமார்ந்து' என்று பாடலேத் தொடங்கவில்லே. அனேத்து முக்கியத்துவத்தையும் அகமுகமார்வதற்கே கொடுத்துள்ளார். நானுர் அருண்மொழித் தொகுப்பிலும் குருவாசகக் கோவையிலும் இதைத் தெளிவாக்கியுள்ளார்.

***ஒப்பு (1):*** மிக்க விசாரணேயை விட்டான்(ல்) மனமடக்கத்
தக்க சாதனங்கள் சற்றுமிலே - மற்றவற்ருல்
ஆளப் படின்அஃது அடங்கிறுற் போன்றிருந்து
மீளக் கிளம்பி விடும். -பாடல் 756

***ஒப்பு (2):*** வளியடக்கத் தாலும் மனம்அடங்கும் ஆனால்
வளியடங்கி நிற்கும்அம் மட்டே - வளிதான்
கழல்வாய் மனமும் கழன்றுபுறம் சுற்றும்
பழவா தனைவயப் பட்டு. -பாடல் 757

*மேற்கண்ட பாடல்களில் கூறப்பட்ட கருத்து நானார் அருண்மொழித் தொகுப்பில் ஸ்ரீபகவான் வசனநடையில் கூறியுள்ளதேயாகும். அதனை கீழே காண்க:*

''மனம் அடங்குவதற்கு (நானார்) விசாரணையைத் தவிர வேறு தகுந்த உபாயங்கள் இல்லை. மற்ற உபாயங்களினால் அடக்கினால் மனம் அடங்கினாற்போலிருந்து, மறுபடியும் கிளம்பி விடும். பிராணாயத்தாலும் மனமடங்கும்; ஆனால் பிராணன் அடங்கியிருக்கும் வரையில் மனமும் அடங்கியிருந்து, பிராணன் வெளிப்படும்போது தானும் வெளிப்பட்டு வாசனை வயத்தால் அலையும்.'' -நானார் அருண்மொழித் தொகுப்பு.

*எனவே மனம் தூய்மை அடைவதற்கு நானார் விசாரம் மூலமாக மனத்தை அகமுகப்படுத்துவதே மிகச் சிறந்த வழி என்று தீர்மானித்துக் கூறும் ஸ்ரீபகவான், மற்றைய வழிமுறைகளில் மிக உயர்ந்ததாகக் கூறப்படும் பிராணாயாமத்தை ஒரு உதாரணத்திற்காகக் குறிப்பிட்டு, அதுவும் பொதுவாக எல்லோரும் நினைக்கும் அளவிற்குப் பயன்மிக்க (effective) வழிமுறை அல்ல என்கிறார். மற்றைய வழிமுறைகளாகிய பூஜை, ஜபம், சிரவணம், மனனம், நிதித்தியாசனம், பொதுநலசேவை ஆகியவற்றால் முதலில் சுத்திகரிக்கப்பட்ட மனமே நானார் விசாரத்தை அப்யாஸிக்கத் தகுதிபெறுகின்றதென்று கூறுவது அகந்தை மனமே! அகம் திரும்பலால் தன்னழிவிற்கு உடன்பட மறுத்து, அதைத் தடுப்பதற்கு அது உருவாக்கும் ஒரு மாயையே இது! இந்த விஷயத்தை ஸ்ரீபகவான் நானார் அருண்மொழித் தொகுப்பில் மேலும் உறுதிபடத் தெளிவுபடுத்தியுள்ளார்.*

***ஒப்பு:*** ''ஒருவன் எவ்வளவு பாபியாயிருந்தாலும் (அதாவது, எவ்வளவு மனத் தூய்மையற்றவனாகயிருந்தாலும்), 'நான் பாபியிருக்கிறேனே! எப்படிக் கடைத்தேறப் போகிறேன்' என்று ஏங்கி

அழுது கொண்டிராமல், தான் பாபி என்னும் எண்ணத்தையும் அறவே ஒழித்து, சொரூபத் தியானத்தில் ('நான்' என்னும் ஜோதி ப்ரகாசத்தில் கவனத்தைக் குவிப்பதில்) ஊக்கமுள்ளவனுக விருந்தால் அவன் நிச்சயமாக உருப்படுவான்.''

– நானுர் அருண்மொழித் தொகுப்பு

*எனவே அகமுகமார்தலும், அமல மதியாதலும் ஒருசேர ஒருங்கே நிகழும் செயற்பாடு என்று கூறவே 'அகமுகமாரந்த அமலமதி தன்னுல்' என்ருர். எனவே அகமுகப்படுதலே, அதாவது நானுர் விசாரத்தை, சாதகர் காலந்தாழ்த்தாமல் உடனே ஆரம்பித்து விட வேண்டுமென்பது கருத்து.*

*இவ்வாறு இதயத்தில் 'நான்' என்று ஒளிரும் பேரறிவுப் பிரகாசமாகிய தன்னே மனம் கவனிக்க வேண்டும். இதற்கு வெளியுலக விஷயாதி தோற்றங்களில் புறமுகப்படுவதைக் கைவிட வேண்டும். இதுவே உண்மை உணர்ச்சி என்று உபதேச உந்தியாரிலும் ஸ்ரீபகவான் கூறுகிருர்.*

***ஒப்பு:*** வெளிவிடயங்களே விட்டு ***மனம்தன்***
***ஒளியுரு ஓர்தலே*** உந்தீபற
***உண்மை உணர்ச்சியாம்*** உந்தீபற. – பாடல் 16

*மனம் அகமுகப்படலின் முக்கியத்துவத்தை ஸ்ரீபகவான் குருவாசகக்கோவையில் 'அகமுகமாட்சித்திறன்' என்னும் தலேப்பின்கீழ் மிகவும் விரிவாக அருளியுள்ளார்.*

***ஒப்பு (1):*** அயலாம் புலம்சுட் டறிவான தன்மெய்
இயலே பிடிப்பாய் இருக்க – முயல்வார்
உழல்கின்ற வாறுமற் ருென்றுபற்றி வெற்று
நிழல்சென்று பற்றலே நேர். – பாடல் 184

***பொருள்:*** *புலன்களால் அன்னிய விஷயாதி புறப் பொருள்களேச் சுட்டி அறிவும் தற்போத அகந்தை மனத்திற்கு ஆதாரமாகிய உண்மை ஆன்ம சொரூபமே அதற்குப் பற்றுக்கோடாய் விளங்குகிறது. உள்முகப்பட்டு அதனேப் பற்றிக் கொள்வதை விட்டு, அயல் விஷயங்களில் ஏதேனுமொன்றைத் தியான லக்ஷியமாகப் பற்றிக்*

கொள்வது, நிஜத்தை விட்டு நிழலைப் பற்றிக் கொள்வதைப் போன்றதேயாகும்.

***ஒப்பு (2):*** பார்ப்பானைப் பாராமல் பார்க்கப் படுபொருளைப்
பார்ப்பதனால் என்றும் பரிதவிக்கும் - பார்ப்பாரே
நுந்தம் புறமேநீர் நோக்காதே உள்நோக்கித்
தொந்தம் அறுத்தல் சுகம். - பாடல் 186

***பொருள்:*** *பார்க்கின்ற ஆன்மாவைப் பார்க்க அகமுகப்படாமல், புறமுகப்பட்டு வெளிவிஷயங்களையே பார்ப்பதனால் துன்புறும் மாந்தரே! பஹிர்முகப்படுதலை விட்டு அகமுகப்பட்டு, அகந்தை அழிந்து இரண்டற்று, ஏகான்ம வஸ்துவாய்த் திகழ்வதே சுகம் என்பதை அறிவீராக! (உள், வெளி, அகமுகம், பஹிர்முகம் போன்ற சொற்கள் தேகத்திற்கு உள்ளே அல்லது வெளியே என்று குறித்தாலும், அகமுகப்படுதல் என்பது 'நான்-நான்' என்னும் ஜோதி ப்ரகாசத்தில் கவனத்தைக் குவிப்பது என்றே கொள்ள வேண்டும்).*

***ஒப்பு (3):*** வெளியிலே ஓடி விநோதமே நாடிக்
களியினால் ஆடிக் கழியாது - ஒளியினால்
ஓர்ந்துதன் உள்ளத்து உறுதிபெறத் தன்சொரூபம்
சார்ந்துவாழ் கிற்றல் சதிர். -பாடல் 188

***பொருள்:*** *புறமுகப்பட்டு, வியப்பைத் தரும் விநோத உலகப் பொருட்களை நாடி, அவற்றை அனுபவிப்பதால் உண்டாகும் இன்பத்தைத் துய்த்து வாழ்நாளை வீணாக்காது, தன்னுணர்வாம் ஜோதிப் பிரகாசத்தை ஓர்ந்து அகமுகப்பட்டு உறுதியுடன் அதில் திடமாக நிலைபெறுதல் சாமர்த்தியம் ஆகும்.*

***ஒப்பு (4):*** வளியால் அழிவெய்தும் வங்கத்தின் பாய்போல்
வெளியே பரந்து விடாமை - நளிகடல்வாய்த்
தாழப் படிந்து தரித்தநங் கூரம்போல்
ஆழப் புகுவது அறிவு. -பாடல் 191

***பொருள்:*** *கப்பலின் மேல் விரிக்கப்பட்ட பாய்மரம் காற்றால் அலைக்கழிக்கப் படுவதைப்போல் மனம் வெளியே பாய்ந்தால் உலகாதி சுகங்கள் என்னும் காற்றால் அலைக்கழிக்கப்படும். மாறாக*

அகமுகப்படும்போது, கடலின் ஆழத்தில் பாய்ச்சப்பட்ட நங்கூரத்தைப்போல், ஆடாது, அசையாது ஆன்ம சொரூபத்தில், கவனம் நிலைபெறும். இதுவே அறிவுடைமை (ஞானம்) ஆகும்.

### *ஒப்பு (5):*

**அன்னியமே சுட்டி அலையும் அகந்தைமதி**
**தன்னியலே சுட்டத் தலைப்படின்மற்று - அன்னியம்போய்**
**நெஞ்சத்து இயல்பா(ய்) நிறைந்தொளிர்தன் மெய்யுணர்வால்**
**கிஞ்சித் துவநான் கெடும்.** -பாடல் 193

***பொருள்:*** *வெளிவிஷயங்களையே குறித்து அலையும் அகந்தை மனம் 'நான்-நான்' என்னும் ஜோதி ப்ரகாசமாகிய தன் இயல்பை அகமுகப்பட்டு நாடப்புகுமாயின், அன்னியங்களாகிய உலகத் தோற்றம் கரைந்தழிந்து, இதயமாகிய தன் ஆன்ம இயல்பு முழுவதுமாக விரிந்தெழுந்து பரவும்; அற்ப அகந்தை மனம் இல்லாதொழியும்.*

இவ்வாறு அகமுகப்படுதலின் சிறப்பைச் சிலாகித்துப் பேசும் ஸ்ரீபகவான், மனத்தின் (தன்மை) உள்முகநாட்டத்தால் அதன் அழிவொடு, முன்னிலை படர்க்கைகளாகிய உலகத் தோற்றமும் மறையுமென்று, மேற்கண்ட பாடல்களில் மட்டுமன்றி, 'அகமுகமாட்சித் திறன்' தலைப்பில் அமைந்துள்ள அனைத்துப் பாடல்களிலும் விளக்கமாக எடுத்துரைக்கிறார். மேலும் நானுர் விசார நெறியின் உளவையும், செய்முறையையும், அதன் பயனையும் அவற்றில் விவரமாக அருளியுள்ளார். இவ்வளவு விவரங்களையும் சுருங்கக் கூறி விளங்க வைப்பதில் அதிசமர்த்தராம் ஸ்ரீபகவான் ''அகமுகமாரந்த அமலமதி தன்னுல் அகம் இதுதான் எங்கு எழும் என்றுய்ந்து'' என்று இந்த மூன்றும் திருப்பாடலில் நானுர் விசார ஞான மார்க்க நெறியைக் குறித்தாராயிற்று. இனி அடுத்து வரும் வரிகளில் விசார நெறியின் பயனைக் கூறுகின்றார்.

***அகவுருவை நன்கறிந்து முந்நீர் நதிபோலும் ஓயுமே*** என்றதாவது

உண்மை ஆன்ம சொரூபத்தை இங்கே 'அக உரு' என்கிறார்.

*(உரு - சொரூபம்). மனம் உள்நாடுவதால் 'நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம் பெருகவும், அது புலப்படத் தொடங்குகிறது. அப்போது இதுகாறும் 'நான்' என்று அபிமானிக்கப்பட்ட அகந்தை அழிய ஆரம்பிக்கிறது. எனவே 'அகவுருவை நன்கறிந்து' என்பது ஆன்ம உருவை நன்கு அறிந்து கொள்வதையே குறிக்கிறது.*

*'நன்கறிந்து' என்பதனுல் அகந்தை முற்றிலும் அழிந்து, ஆன்ம சொரூபமாகிய 'நான்' என்னும் ஜோதி ப்ரகாசம் உலகத் தோற்றத்தை முழுவதுமாக விழுங்கி விடுவதையே கூறுகிருர். அதாவது 'நான்-நான்' என்னும் தன்னுணர்வின் ஜோதி ப்ரகாசம் முழுமையாக உணரப்படுவதே* ***'நன்கறிவது'*** *ஆகும். அதற்கு முன்பு அகந்தை சிறிது சிறிதாகக் கரைய ஆரம்பிக்கையில், தன் பொய்மையை நினைத்து, அது நாணமுறுவதும் நிகழ்கிறது. இவ்வாறு நாணமுறுவதும் அகந்தை அழிவில் முற்றுப் பெறுகிறது; நாணமுறுவதைத் தொடர்ந்து செய்ய அகந்தை இல்லாமல் அழிந்து விடுகிறது. ஆயினும் அகந்தை நாணமுறுதல் அதன் அழிவின் ஆரம்பத்திற்கு ஒரு அறிகுறியாக விளங்குகிறது. இந்த ஆன்மானுபவங்களையெல்லாம் ஸ்ரீபகவான் கூறியுள்ளார்.*

***ஒப்பு (1):***

**நாஞரென மனம் உள்நாடிஉள(ம்) நண்ணவே**

**நாணும் அவன்தலை நாணமுற - நான்நானுத்**
**தோன்றும்ஒன்று தானுகத் தோன்றினும் நான்அன்றுபொருள்**
**பூன்றம்அது தானும் பொருள்.** –உள்ளது நாற்பது, 30

***பொருள்:*** *நானுர் என்று மனம் அகமுகப்பட்டுத் தன்னுள் ஆழ்ந்து இதயமாகிய 'நான்' என்னும் ஜோதி ப்ரகாசத்தை நெருங்கவும், அந்த அகந்தை மனம் தன் பொய்மையை உணர்ந்து நாணமுற்று அடங்கும்; அப்போது 'நான்' என்னும் தன்னுணர்வுப் பேரொளி ஆவிர்ப்பவித்து ஓங்கும்; புதிதுபோல் தோன்றினுலும் அதுவே தோன்றி மறையாது என்றும் பிரகாசிக்கும் பரிபூரண ஆன்ம வஸ்து ஆகும். (பூன்றம் - பூரணம், பொருள் - வஸ்து).*

***ஒப்பு (2):***

நானென்று எழும்இடம் ஏதுஎன நாடஉள்
நான்தலை சாய்ந்திடும் உந்தீபற
ஞான விசாரம் இதுஉந்தீபற. -உபதேச உந்தியார், 19

***பொருள்:*** *'நான்' என்று எழுமிடம் எதுவென்று அகமுகப்பட்டு அகந்தைமனம் உதிக்கும் இதயத்தை (ஆன்மாவை) நாடும்போது, அந்த அகந்தை மனம் நாணித் தலைசாய்கிறது. இதுவே அகந்தை மன அழிவின் ஆரம்பமாகும். இதுவே ஞான விசாரமும் ஆகும்.*

***ஒப்பு (3):*** ஆணித்தரமாய் நானாரென உள்ளாழ்ந்த அறிவால்
நாணித் தலைசாய்ந்து ஊன் 'நான்' எனும் அப்போலி
பரிச்சின்ன வீணகந்தை பாறுதலும் ஆங்கே
வெரிச்சென்ன லின்றி விளங்கு சிதாகாய
முழுமுதலாய் முப்புடியின் மோகஉணர்வு ஓய்ந்து
கெழுமிய ஆனந்தம் கிளரும் பரவசமே.
-ஸ்ரீரமண புராணம், 375-380

***பொருள்:*** *ஆணித்தரமாக (மிக உறுதியாகத் திடசித்தத்துடன்) நான் யார் என்று அகமுகப்படும் விசாரத்தால், தேகமே நான் என்னும் போலியான, பின்னப்பட்ட வீண் அகந்தை வெட்கப்பட்டுத் தலை சாய்ந்து அழிந்தவுடன், அதனால் என் உள்ளம் வெறுமைப்பட்டு சூனியமாகாமல், எங்கும் நிறைந்த 'நான்' என்னும் ஜோதிப்ரகாச சிதாகாச முழுமுதற் பொருளாக, முப்புடிகளின் மோக உணர்வு ஓய்ந்து, பரிபூரண ஆனந்தம் அடர்த்தியாக என்னுள் பொங்கிப் பெருகும் பரவசமே!*

***ஒப்பு:*** ஏய இளமக்கள் இதயத்து மெய்யன்பு
மேய விதநோக்கி வியப்பித்து வெம்பாசம்
தட்கும் திருச்சந்நிதானத்தில் என் அகந்தை
வெட்கும் பரிசாண்டோன் வீரக் கழல் வெல்க
- ஸ்ரீ ரமண புராணம்,135-138

***பொருள்:*** *ஆன்ம ஞானமுறாத அடியவர்களுக்கும் கொடிய பாச அகந்தை செயலற்று நிற்கும்படித் தம் திருக்கண்ணோக்கத்தால் அவர்களின் இதயத்தில் உண்மை ஆன்ம அன்பைப் பெருக்கி அருள்*

*பாலித்து, அதனால் அவர்களை வியப்படையச் செய்யும் தம் திருச்சந்நிதானத்தில் என் அகந்தை நாணமுறச் செய்த ஸ்ரீ பகவானின் வீரக் கழல்கள் வெல்க!*

*இனி, அகமுகப்படுதலின் முடிவு, நாணித் தலைசாய்ந்த அகந்தையின் அழிவே! அதனால் 'நான்' என்பதன் உண்மை இயல்பை அறிவதே! அந்த உண்மை இயல்பு 'நான்-நான்' என்னும் இருப்புணர்வின் ஜோதிப் பிரகாசமே என்பதை உலகத் தோற்றம் அதில் கரைந்து போகும்படிக்கு முழுமையாக உணர்வதே! அந்த இருப்புணர்வே பிரம்மம், ஆன்மா என்றெல்லாம் அழைக்கப்படுவதால் இதுவே பிரம்மஞானம், ஆன்மஞானம், இறையறிவு ஆகும். இந்த 'இருப்புணர்வு' தூக்கத்தில் துக்கக் கலப்பின்றி அனைவராலும் உணரப்படுகிறது; விழிப்பு நிலையிலும் அதை உணர்வதே ஆன்மஞானம் என்கிறார் ஸ்ரீபகவான்.*

***ஒப்பு:*** **நானென்றும் சொற்பொரு ளாம்அது நாளுமே**
**நானற்ற தூக்கத்தும் உந்தீபற**
**நமதின்மை நீக்கத்தால் உந்தீபற.**

**-உபதேச உந்தியார், 21**

***பொருள்:*** *'நான்' என்று நினைக்கப்படும் அகந்தை மனத்திற்கு, சொல்லிற்குப் பொருள்போல் (அதாவது, சொல்லுக்கு 'அர்த்தம்' போல்), அடிப்படை ஆதாரப் பொருளாக விளங்குவது 'நான்' என்னும் ஜோதி ப்ரகாச இருப்புணர்வே! அது மனமற்ற உறக்கத்தில் ஆனந்தமே சொரூபமாக நன்கு உணரப்படுகிறது. விழிப்பு நிலையிலும் அந்த மனமாகிய அகந்தை அழிவினால் அது நன்கு உணரப்படும்போது உலகத் தோற்றமும் அகந்தையொடு அழிந்து விடுகிறது. ஆகவே இதை 'முந்நீர் நதி போலும் ஒயுமே என்கிறார்.*

***'முந்நீர் நதி'*** *என்றதாவது*

*ஆற்றுநீர், மழைநீர், கிணற்றுநீர் ஆகியவை மூன்றும் நதியாக உருவெடுத்து இறுதியில் கடலில் சென்று கலக்கின்றன. அதன் பின்பு கடலே எஞ்சி நிற்கின்றது; நதி தன் தனித்தன்மையை இழந்து விடுகிறது. அதுபோல் அகந்தை மனத்தினால் உருவாக்கப்பட்ட ஜக,*

*ஜீவ, ஈசுவரர் என்னும் முந்நீரும் நாஞர் விசார அகமுகப்படலின் முடிவில் 'நான்' என்னும் ஜோதி இருப்புணர்வு என்னும் கடலில் ஒன்று கலந்து, தத்தம் தனித் தன்மைகளே இழந்து விடுகின்றன; 'நான்' என்னும் ஜோதி ப்ரகாசமே இறுதியில் எஞ்சி நிற்கின்றது.*

இந்த உவமையில் கிணற்று நீர்: ஜீவன்; ஆற்று நீர்: உலகம் (*socieity*); மழை நீர்: கடவுள் (மேலிருந்து இறங்கி வருவது) என்று மிகப் பொருந்தும் மற்ருெரு அம்சமும் காண்க.

*'நான்' என்று எழும் அகந்தையும் (ஜீவன்), அதனுல் உருவாக்கப்படும் உலகத் தோற்றமும் (ஜகம்) அழிந்து விடுவதைப் புரிந்து கொள்ள முடிகிறது. ஆனுல் கடவுள் காட்சியும் அவ்வாறே என்று ஸ்ரீபகவான் கூறுகின்ருர்.*

***ஒப்பு (1):***

காணும் தனேவிட்டுத் தான்கடவுளேக் காணல்
காணு மஞேமயமாம் காட்சிதனேக் - காணுமவன்
தான்கடவுள் கண்டானும் தன்முதலேத் தான்முதல்போய்த்
தான்கடவுள் அன்றிஇல தால். –உள்ளதுநாற்பது, 20

***பொருள்:*** *'நான்-நான்' என்று பிரகாசிக்கும் தன்னுணர்வு ஜோதி ப்ரகாசத்தை கவனியாது, தான் கடவுளேத் தரிசனம் செய்தோமென்று நினேத்துக் கொள்வது மஞேமயக் கற்பனேக் காட்சியே! தனக்கு ஆதார முதற்பொருளே (தன்முதலே) இதுநாள்வரையில் தனக்கு ஆதாரமென்று நினேத்துக் கொண்டிருந்த தன் அகந்தை மனம் அழிந்து (தான் முதல் போய்) பார்ப்பவனுகிய தான் 'நான்' என்னும் இருப்புணர்வு ஜோதியை முழுமையாக உணர்வதே தன் உண்மை ஆன்ம சொரூப இயல்பைக் காண்பதாகும்; ஏனெனில் தானுகிய 'நான்' என்னும் இருப்புணர்வுப் பிரகாசமும் கடவுளும் வேறல்லவே!*

*ஆகவே 'உள்ளது' (அல்லது இருப்பது) 'நான்' என்னும் அந்த ஆத்மப் பிரகாசமேயன்றி ஜக, ஜீவ, ஈசுவரர்கள் அல்ல என்ற உண்மையை ஸ்ரீபகவான் வசனநடையிலும் கூறியுள்ளார்.*

**ஒப்பு (2):** " யதார்த்தமாயுள்ளது ஆத்ம சொரூபம் ஒன்றே. ஜக, ஜீவ, ஈசுவரர்கள், சிப்பியில் வெள்ளிபோல், அதில் கற்பனைகள். இவை மூன்றும் ஏக காலத்தில் தோன்றி ஏக காலத்தில் மறைகின்றன. சொரூபமே ஜகம்; சொரூபமே நான்; சொரூபமே ஈசுவரன்; ***எல்லாம் சிவ சொரூபமாம்''***.

- நானுர் அருண்மொழித் தொகுப்பு.

*எனவே மும்முதல்களாகிய ஜக, ஜீவ ஈசுவரர்களின் (உலகு, உயிர், இறைவன்) தோற்றம் உண்மையாவது அகந்தை மனம் இருக்குமட்டே; அந்த அகந்தையை அழித்து தன் உண்மை இருப்புணர்வில் நிலைப்பதே தலையாயது என்று ஸ்ரீபகவான் வலியுறுத்தும் மற்றொரு பாடல்:*

***ஒப்பு (3):***

மும்முதலை எம்மதமும் முற்கொள்ளும் ஓர்முதலே
மும்முதலாய் நிற்கும்என்றும் மும்முதலும் - மும்முதலே
என்னல்அகங் காரம் இருக்குமட்டே யான்கெட்டுத்
தன்னிலையில் நிற்றல் தலை. -உள்ளது நாற்பது, 2

*ஆகவே, ''நதி கடலில் கலப்பதைப் போல்'' என்று வெறுமனே கூறுமல், 'முந்நீர்' என்ற பதத்தைக் கடலுக்கு உபயோகிப்பதன்மூலம், மும்முதல்களாகிய ஜக, ஜீவ ஈசுவரர்களை ஸ்ரீபகவான் குறித்தாராயிற்று.*

*இனி, அகமுகப்படல் இன்றியமையாதது; ஏனெனில் அதனுல் மனம் தூய்மையுறும்; அதனுல் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ஜோதி ப்ரகாசம் பெருகி முழுமையுறும்; அதனுல் அந்த ஜோதி ப்ரகாசத்தில் மும்முதல்களும் முந்நீரில் நதிபோல் விழுங்கப்படும் என்னும் தாம் பெற்ற ஆன்மானுபவங்களை யெல்லாம் அருணாசலன் மீதேற்றி ''அருணாசலா! இவற்றையெல்லாம் நீ ஓர்வாயாக'' என்று கூறுவது, அவர் அருணாசலம் மாட்டுக் கொண்ட தமக்கே உரிய தனி உரிமையில் என்க.*

*இறுதியாக, அடுத்து வரும் நான்காம் திருப்பாடலில் பதஞ்சலி*

முனிவர் வகுத்துத் தந்த அஷ்டாங்க இராஜயோக அப்யாஸ முடிவில் ஆன்ம வஸ்துவில் ஒன்று கலக்கும் யோகியும் இந்த 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ஜோதி ப்ரகாசத்தையே தரிசிக்கிறாரென்று விளக்குகின்றார்; இந்தத் திருப்பாடலில் அஷ்டாங்க யோகத்தை ஞானாஷ்டங்கமாக ஸ்ரீபகவான் எடுத்துரைப்பது ஓர் அற்புதம்!

*மூன்றாம் பாடல் முற்றிற்று*

ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

## பாடல் - 4

**த்யக்த்வா விஷயம் பா³ஹ்யம் ருத்³த⁴ப்ராணேன**
**ருத்³த⁴மனஸாந்தஸ்த்வாம்|**
**த்⁴யாயன்பஶ்யதி யோகீ³ தீ³தி⁴திமருணாசல**
**த்வயி மஹீயந் தே||**

**வெளிவிடயம் விட்டு விளங்கும் அருணேசா**
**வளியடக்க நிற்கு மனத்தால் - உள மதனில்**
**உன்னைத் தியானித்து யோகி ஒளிகாணும்**
**உன்னில் உயர்வுறும் ஈதுஉன்.**

**பொ-ரை:** *புறமுகப்படுவதால் பார்க்கப்படுகின்ற திருசியங்கள் அனைத்தும் நீங்கப் பெற்ற அருணேசா! பிராணாயாமத்தினால் நிச்சலனமாக நிற்கும் மனத்தால் இதயத்தில் உன்னைத் தியானித்து யோகி 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு பிரகாசத்தைத் தரிசனம் செய்கிறார்; அதனால் உனக்கு நிகராக உயர்ந்து விளங்குகிறார். இதை உணர்ந்து கொள்வாயாக! (உன்னில்- உனக்கு நிகராக, சமமாக).*

**வி-ரை: வெளிவிடயம் விட்டு விளங்கும் அருணேசா** என்றதாவது

மனம் புறமுகப்பட்டு வெளியே பாய்ந்து ஓடுவதினாலே நாம, ரூபங்கள் சாத்யமாகின்றன; உலகத் தோற்றமும் சாத்யமாகின்றது. அகமுகப்பட்டு இதயத்தில் தங்க முயற்சிக்கும்போது, நாம, ரூபங்கள் புலப்படா. அங்கே 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே நாம, ரூபங்களற்று இதயமாக விளங்குகிறது. இந்த ஜோதிப் பிரகாசமே அருணாசலமாதலின், அருணாசலத்தின் உண்மை சொரூபம் அதன் மலைவடிவமோ, 'அருணாசலம்' என்னும் நாமமோ அல்ல. நாம, ரூபங்கள் பாஹ்யத்திற்குரியவை. மனம் பஹிர்முகப்படும்போதுதான் நாம, ரூபங்களற்ற, ஜோதிப் பிரகாச அருணாசலம் மலை ரூபத்தொடும், அருணாசல நாமத்தொடும் திகழ்கின்றது.

ஸ்மரணாத் அருணாசலம் (நினைக்க முக்தி திருவருணை)'

என்னும் அருணுசல நாமத்தின் மஹிமை அளப்பரியது. அதுபோல், சிவபெருமானே தன் சொரூபமாக அமையப் பெற்ற அதன் மலேவடிவம் (ரூபம்) ஞானத் தபோதனரை ஆண்டாண்டு காலமாக ஈர்த்து ஞானத்தை அருளிக் கொண்டிருப்பது இன்றைக்கும் கண்கூடு. இதை ஸ்ரீபகவானும் கூறியிருக்கின்ருர்.

**ஒப்பு:** பார்த்தனன் புதுமை உயிர்வலி காந்த
பருவதம் ஒருதரம் இதனே
ஓர்த்திடும் உயிரின் சேட்டையை ஒடுக்கி
ஒருதன தபிமுக மாக
ஈர்த்துஅதைத் தன்போல் அசலமாச் செய்துஅவ்
இன்னுயிர் பலிகொளும் இஃதுஎன்
ஓர்த்துஉய்மின் உயிர்காள் உளமதில் ஒளிர்இவ்
உயிர்க்கொலி அருணமா கிரியே.

-அருணுசல பதிகம், 10.

**பொருள்:** இந்த அருணுசலத்திலே ஒரு புதுமையைப் பார்த்தேன். காந்த மலேயாகிய இதைப் பக்குவமுற்ற மெய்யன்பர் ஒரே ஒருமுறை பார்த்தாலும் போதும்; அந்த மெய்யன்பரின் புறமுகப்படுகின்ற சேஷ்டைகளேயெல்லாம் ஒடுக்கி, அகமுகப்படவைத்து, அவர்தம் அகந்தையை விழுங்கி விடுகிறது. இது என்ன ஆச்சரியம்! அப்படிப்பட்ட இந்த மலேயைத் தியானித்து, மாந்தர்காள், உய்வீராக! ஏனெனில் இந்த மலேயின் உண்மையான சொரூபம் (வடிவம்) இதயத்தில் ஒளிரும், 'நான்' என்னும் தன்னுணர்வு ஜோதிப் பிரகாசமேயாகும். இதன் சுபாவம் (இயல்பு) அகந்தையையும், அது உருவாக்கும் உலகத் தோற்றத்தையும் அழித்து விழுங்குவதேயாகும்.

மேற்கண்ட பாடலில் வெளியே அது புறக்கண்களுக்கு மலே வடிவாகக் காட்சியளித்தாலும், 'உளமதில் ஒளிர் அருணுசலம்' என்று ஸ்ரீபகவான் குறிப்பிடுவது அதன் இருப்புணர்வுப் பேரொளி இயல்பையே!

''கருணேயால் என்னே ஆண்ட நீ எனக்கு உன் காட்சி தந்து அருளிலேயென்ருல் இருள்நலி உலகில் ஏங்கியே பதைத்துஇவ்

உடல்விடில் என்கதி என்னும் (அருணசல பதிகம், 1)'' என்று அருணசலத்தின் பஹிர்முக நாம, ரூபங்களை எண்ணி ஸ்ரீபகவான் நெஞ்சம் நைந்து உருகுவது உண்மையே! அத்தகைய அளவு கடந்த பக்தியினுல் அருணசலனும் உள்ளம் உருகி அவருக்கு ஸதா அருள்பாலித்துக் கொண்டிருந்ததும் உண்மையே! ஆயினும் ஸ்ரீபகவான் இந்தத் திருப்பாடலில் வெளிவிஷயங்கள் (நாம, ரூபங்கள்) விட்டு விளங்கும் அருணேசனையே குறிப்பிடுகிருர். அதாவது, 'மனம் புறப்பொருட்களை விட்டு விலகி, அகமுகப்படும்போது நாம, ரூபங்களற்று பிரகாசிக்கின்ற அருணேசனே' என்பது பொருள். மேலும் இந்த பஞ்சரத்ன பாடல்கள் ஐந்திலும் நாம, ரூபங்களற்று, 'நான்' என்னும் இருப்புணர்வு ஜோதிப் பிரகாசமாக ஒளிர்கின்ற அருணசலனையே குறிப்பிடுகிருர். இத்தகைய அருணசலனையே யோகி தியானித்து 'நான்' என்னும் ஜோதியைத் தரிசனம் செய்கிருரென்கிருர் ஸ்ரீபகவான். ''உளமதனில் (அகமுகப்பட்டு இதயத்தில்) உன்னைத் தியானித்து யோகி ஒளி ('நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம்) காணும்'' என்று ஸ்ரீபகவான் கூறுவது இதுவே!

**வளியடக்க நிற்கும் மனத்தால்** என்றதாவது

'வளியடக்க' என்பதினுல் பிராணுயாமத்தைக் குறிக்கிருர். பிராணனைக் கட்டுப்படுத்துவதால் மனமும், மனோநாசத்தால் பிராணனும் கட்டுப்படுவதால் இரண்டும் ஒன்றேயாகும். மனத்தை அழிப்பதே இந்த இரண்டின் தாத்பரியமுமாகும். சூக்ஷ்ம மனத்தின் ஸ்தூல சரீரமே பிராணன் ஆகும்.

***ஒப்பு(1):*** வளியுள் அடக்க வலைபடு புட்போல்
உளமும் ஒடுங்குறும் உந்தீபற
ஒடுக்க உபாயம்இது உந்தீபற.

–உபதேச உந்தியார், 11.

இராஜயோகப் பயிற்சியால் பிராணபந்தனமும், ஞான யோகத்தால் மனோநிக்ரஹமும் கைக்கூடும். மனத்திற்கும், பிராணனுக்கும் பிறப்பிடம் ஒன்றே. ஒன்றை அடக்க, மற்றொன்று தானகவே அடங்கும்.

**ஒப்பு (2):** உளமும் உயிரும் உணர்வும் செயலும்
உளவாம் கிளைஇரண்டு உந்தீபற
ஒன்று அவற்றின்மூலம் உந்தீபற.
-உபதேச உந்தியார், 12.

***பொருள்:*** *உணர்வாகிய மனமும் செயல்படும் பிராணனும் இரண்டு கிளைகளாம். அவற்றின் வேராகிய மூலம் ஆன்மாவே (அதாவது, 'நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசமே).*

*மனோலயம் (பிராணபந்தனம்) யோகாஷ்டாங்கத்தாலும், மனோநாசம் ஞானங்காஷ்டத்தாலும் எய்தப்படுகின்றன. 'நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசப் பெருக்கத்தால் அஹம் பிரம்மம் என்னும் ஆத்மாகார விருத்தி ஸஹஜமாகும். அப்போது மனச்சலனமும் உலகத் தோற்றமும் மெல்ல மெல்ல விலகும். தீவிர அகமுக நாட்டமென்னும் தியானத்தால் சூக்ஷ்மமும் நிச்சலனமுமான மனத்திற்கே (அதாவது அகந்தை மனம் இல்லாமல் போகையிலே) 'நான்' என்னும் தன்னுணர்வின் பேரின்பம் அனுபவமாகும். இதுவே ஜீவன்முக்தி எனப்படுகிறது. அவ்வாறு ஆனந்தத்தை 'அனுபவிக்கிறோம்' என்ற எண்ணமும் நீங்கி அந்த ஆனந்தமயமாகவே இருப்புணர்வு திகழ்வது விதேகமுக்தி எனப்படுகிறது. மனோலயத்தில் ஜீவன்முக்தி நிலையின் சுவை (taste) அறியப்படும். ஆயினும் மனோலயத்தின் நோக்கம் மனோநாசமே. மனோநாசம் தியானத்தினால் அடையப்படும். அதனால் யோகாஷ்டாங்கத்தில் 'சமாதி' என்னும் இறுதி நிலைக்கு முன்பாகத் 'தியானம்' சொல்லப்பட்டிருக்கின்றது. மனோலயம் மிகவும் திடப்பட்டுவிட்டால், மனோநாசம் தள்ளிப்போடப்படுகிறது. இது ஆன்ம பயணத்தில் ஒரு தடைக்கல்லாக மாறிவிடுகிறது. இவ்வாறு மனோலயத்தில் சிக்கிக் கொண்டவர் பலர்.*

*இங்கு ஸ்ரீபகவானின் தீவிர பக்தர் சங்கரானந்தர் குறிப்பிடத்தக்கவர். இவர் ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்தவர். அஞ்சல் அலுவலகத்தில் பணிபுரிந்தவர். மிகத் தீவிர பிராணாயாமப் பயிற்சியால் இவருக்கு தியானம் செய்ய ஆரம்பிக்கும்போதே மனோலயம் ஏற்பட்டு வேறு எந்த வேலையும் செய்ய முடியாமல்*

துன்பப்பட்டார். இந்தத் துன்பம் அதிகரிக்கவே விடுமுறை எடுத்துக்கொண்டு ஸ்ரீபகவானிடம் சரண் புகுந்தார். நிலைமையைப் புரிந்து கொண்ட ஸ்ரீபகவான் அவரை எங்கும் உட்கார விடாமல் நடத்திக் கொண்டும், லயத்திற்குப் போகாதவாறு விசார வழியில் பேசிக் கொண்டும் இருக்கும்படி குஞ்சுஸ்வாமி போன்ற அடியவர்களிடம் கூற, அவர்களும் அவ்வாறே செய்தார்கள். சங்கரானந்தரும் மனோலயத்திலிருந்து விடுபட்டு விசார ஞான மார்க்க புருஷரானார். பிற்காலத்தில் ஸ்ரீநிரஞ்சனானந்த ஸ்வாமிகளை ரங்கூனுக்கு அழைத்துச் சென்றவர் இந்தச் சங்கரானந்தர்தான். இவரை முதன் முதலில் பார்த்தவுடன், ஸ்ரீபகவான் ஆன்ம ஞானத்திற்கு லயம் (பிராணபந்தனம்), விக்ஷேபம் (பஹிர்முகப்படுதல்), காஷாயம் (அகந்தை மனத்தைத் துறக்காமல், மற்ற எல்லாவற்றையும் துறப்பதினால் ஏற்படும் கர்வம்) ஆகிய மூன்றும் தடைகள் என்று கூறினாராம். குஞ்சு ஸ்வாமிகள் இந்த விவரங்களையெல்லாம் தமது 'எனது நினைவுகள்' நூலில் குறிப்பிட்டுள்ளார். (முதற் பதிப்பு, பக்கம் 147).

இதனால் அறியப்படுவது, பிராணாயாமம் ஸதா பஹிர்முகப்பட்டு வெளியில் அலைபாயும் மனத்தை ஒரு கட்டுக்குள் கொண்டு வர உதவும் என்பதுதான். அவ்வாறு மனம் அகமுகப்பட ஆரம்பித்தவுடன், அகமுக நாட்டத்திற்கே முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும். பிராணாயாமத்தை ஒரு உபசாதனமாகத் தொடர்ந்து மன பரிபாகத்திற்குத் தக்கவாறு அனுஷ்டிக்கலாம். அகமுகநாட்டமாகிய தியானமே சிரேஷ்டம். இது சித்தியாகிவிட்டால் பிராணாயாமம், ஆஸனம் போன்ற மற்றவை எதுவும் தேவையில்லை. உண்மையில் தியானம் சித்திப்பதற்காகவே யோகாஷ்டாங்கத்தில் மற்றைய ஏழும் கூறப்பட்டன.

ஆகவே மனம் மிகவும் தூய்மையற்றிருக்கும் ஆரம்ப சாதகர்களின் இயலாமையைக் கருத்தில் கொண்டே ஸ்ரீபகவான் 'வளியடக்க நிற்கும் மனத்தால்' என்கிறார். உலகியல் பற்றுக்களினால், பந்த பாசங்களினால், குழப்பமடைந்துள்ள மனத்திற்கு எடுத்த எடுப்பிலேயே அகமுகப்படுதல் இயலாது. அதனால்தான் பதஞ்சலி முனிவர் **இயமம், நியமம், ஆஸனம்,**

***பிராணுயாமம், ப்ரத்யாஹாரம்,*** *(பஞ்சேந்திரியங்களை வெளியே செல்லவிடாமல் உள்ளே இழுத்துக் கொள்ளுதல்)* ***தாரணை*** *(concentration,* ***ஒருமுகப்படுத்துதல்), பின்பு இறுதியில் தியானம்*** *என்று கூறி, அவ்வாறு அகமுகப்படும் தீவிர தியானத்திஞல்* ***சமாதி*** *அடையப்படும் என்று யோகாஷ்டாங்கம்தனை வகுத்தார்.*

*கம்பீரம் சேஷய்யர் யோகாஷ்டாங்கத்தில் மிகுந்த பற்றும், தேர்ச்சியும் மிக்கவர். இவர் ஸ்ரீபகவானிடம் இராஜயோகத்தில் தமக்கு ஏற்பட்ட ஐயங்களைத் எழுத்துமூலம் கேட்டுத் தெளிவு பெற்ருர். அப்போது ஸ்ரீபகவான் அளித்த விளக்கங்கள் 'விசார சங்கிரஹம்' என்னும் தலைப்பில் ஸ்ரீரமண நூல் திரட்டில் இடம் பெற்றுள்ளன. இதில் ஸ்ரீபகவான் யோகாஷ்டாங்க விளக்கங்களை அளிக்கும்போது, சேஷய்யர் கவனத்தை ஞான விசார தியானத்தில் திருப்ப ஞானுஷ்டாங்கத்தை விளக்கியிருப்பதைக் காணலாம்.*

## ஞானுஷ்டாங்கம்

*இயம, நியமங்கள் யோகாஷ்டாங்கத்தைப் போன்றதேயாகும்.*

***பிராணுயாமம்:*** *(1) ரேசகம் (மூச்சை வெளிவிடுதல்): ஆன்ம வஸ்துவின் மித்யாம்ஸங்களான நாம, ரூபங்களை வெளியேற்றுதல்.*

*(2) பூரகம் (மூச்சை உள்ளே இழுத்தல்): ஆன்ம வஸ்துவின் மற்றைய மூன்று சத்யாம்சங்களான சத்து, சித்து, ஆனந்தத்தை உள்ளே இழுத்தல்.*

*(3) கும்பகம் (மூச்சை உள்ளே/வெளியே நிறுத்துதல்): கிரஹித்த சத்து, சித்து, ஆனந்தத்தை உள்ளே நிறுத்துதல்; வெளியேற்றிய நாம, ரூபங்களை உள்ளே வராமல் வெளியே நிறுத்துதல்.*

***பிரத்யாஹாரம்:*** *நீக்கப்பட்ட நாம, ரூபங்கள் மீண்டும் மனத்தில் கலவாமல் காத்தல்.*

***தாரணை:*** *மனத்தை வெளியே விடாமல் இதயத்தில், அஸ்தி,*

பாதி, பிரியம் ஆகிய குணங்களைக் கொண்ட 'ஆத்ம சொரூபமே நான்' என்று அனுசந்தித்தல்.

**தியானம்:** நாம, ரூப, பஞ்சகோச தேகம் நானல்ல என்று ஒதுக்கி, உண்மையான 'நான்யார்' என்று விசாரித்து, 'அஹம்-அஹம்' என ஸ்புரிக்கும் தான் அஹம் சொரூபமாய் இடைவிடாதிருத்தல்.

மேற்கூறப்பட்ட ஞானங்காஷ்டாங்கப் பிராணயாமாதிகளுக்கு ஆஸனாதி நியமங்கள் அவசியமின்று. எங்கேயும், எப்போதும் அப்யாஸிக்கலாம். இதயத்தில் ஸதா பிரகாசிக்கும் தன்னுணர்வுப் பேரொளியை (கடவுளை) மறவாதிருக்க வேண்டும். ஏனெனில் இந்த மறதியே (பிரமாதம் எனப்படுவது) ஸர்வானர்த்தத்திற்கும் காரணமாவதாலும், அதுவே ஆன்மப் பேரொளியை அடைவதற்கு விரும்பும் முமுக்ஷுவிற்கு எமன் ஆவதாலும் யோகாஷ்டாங்க பிராணயாமாதிகள் ஆரம்ப சாதகர்களுக்கும், ஞானஷ்டாங்க பிராணயாமாதிகள், எப்போதும் செய்ய ஸகாயமாயிருப்பதால், எல்லோருக்கும் அவசியமேயாகும். இவ்விரண்டின் தாத்பரியமும், குறிக்கோளும் மனத்தை இதயத்தில் (அதாவது, 'நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசத்தில் அல்லது அருணாசலத்தில்) நிறுத்துவதே! ஆகவே எதுவரையில் மனம் கேவல கும்பகத்தால் (யோகாஷ்டாங்கமாகவோ அல்லது ஞானஷ்டாங்கமாகவோ) இதயத்தில் நிலைபெறுகிறதோ அதுவரையில் ரேசக, பூரகங்கள் அவசியம்; அதற்குப் பின் அனவசியம். யோகாஷ்டாங்க கேவல கும்பகம் ஞானஷ்டாங்க (நானார்) விசாரமே. இது பிடிபடாததினால் யோகாஷ்டாங்க பிராணயாம கேவல கும்பகம் மனோலயத்தில் முடிகிறது; பிடிபட்டாலோ மனோநாசத்தைத் தருகிறது. எனவே மனத்தை அழிக்க, முரட்டுக் காளையை அடித்துக்கட்டுவது போல யோகமும், புல்லைக்காட்டி வசியப்படுத்துவது போல ஞானமும் என்பர். சாதகர்களோ யோகாஷ்டாங்கத்தையோ அல்லது ஞானஷ்டாங்கத்தையோ அல்லது இரண்டையுமே மாறி, மாறி எப்போது தமக்கு எது பிரியமாய்ப்படுகிறதோ அதைச் சமயோசிதமாய் அனுஷ்டிக்கலாம். இவை இரண்டுமே

மனோநாசத்திற்கு முக்கியமாய்த் திகழும் சாதனங்கள்; இரண்டுமே உயர்ந்தவை. ஒன்றனுக்கு மற்றொன்றைத் தாழ்த்திச் சொல்லுதல் அறியாமையே! யோகம் என்பது பிராண பந்தனம்; ஞானம் அனைத்தையும் 'நான்' என்னும் ஸ்வப்பிரகாசமாய்த் தெளிதல்; அவரவர் கர்மானுஷ்டானத்தின்படி இரண்டில் ஒன்றோ அல்லது அவ்வப்போதைய மனநிலைக்கேற்ப இரண்டுமோ சௌகரியமாய்த் தோன்றும். யோகாஷ்டாங்க பிராணாயாம கேவல கும்பகம் சித்திக்கும்போது அடுத்த நிலையாகிய தாரணை, தியானம் ஆகியவை ஞானாஷ்டாங்க கேவல கும்பகத்திற்குச் செல்வதற்கேயென்னும் லக்ஷியத்தை விட்டு நழுவாமல் ஜாக்ரதையாய் இருக்க வேண்டும். உத்தம சாதகர் அகமுகப்படுதல் என்னும் நானார் ஞான விசாரத்தாலும், மத்திம சாதகர் யோகாஷ்டாங்க பிராணாயாம கேவல கும்பகத்தொடு இதயத்தில் ஆன்மாவைத் ('நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசத்தை) தியானிப்பதாலும், மந்த சாதகர் யோகாஷ்டாங்க இயம, நியம, பிராணாயாமம், மற்றும் பூஜை, ஜபம், தியானாதிகளைக் கிரமமாக அப்யாஸிப்பதாலும் ஆன்ம சொரூபத்தில் நிலைபெறுகின்றனர். இது காரணம் பற்றியே பெரியோர் மனோநாசம் தரும் மார்க்கத்தை யோகாஷ்டாங்கம், ஞானாஷ்டாங்கம் என்று இரண்டாய் வகுத்திருக்கின்றனர். இந்த ஸம்பிரதாயத்தையொட்டியே ஸ்ரீபகவானும் இராஜயோகத்தில் யோகாஷ்டாங்க பிராணயமத்திற்கு அளிக்கப்பட்டிருக்கும் முக்கியத்துவத்தைக் கருத்தில் கொண்டு ''வளி அடக்க நிற்கும் மனத்தால்'' என்கிறார். அன்றி, யோகாஷ்டாங்க பிராணாயாமத்தால் மட்டுமே ஆன்மலாபம் கிட்டுமென்பது பொருளல்ல. அதாவது, யோகாஷ்டாங்க பிராணாயாமம் இன்றேல், ஆன்மலாபம் இன்று என்பது பொருளல்ல. அதனால்தான் யோகாஷ்டாங்கத்திலும் பிராணாயாமத்திற்கு அப்பால் தாரணை, தியானாதிகளைக் கூற வேண்டிய அவசியம் வந்துற்றது. மாறாக, யோகாஷ்டாங்க பிராணாயாமத்தினால் ஏற்படும் படுகுழியாகிய மனோலயத்தைத் தவிர்க்க வேண்டிய அவசியத்தைச் சுட்டிக் காட்டவே 'வளி அடக்க(யோகாஷ்டாங்கம்) நிற்கும் மனத்தால்' என்று கூறியவுடன் 'உளமனதில் உன்னைத் தியானித்து' (ஞானாஷ்டாங்கம்) என்று நிரந்தர சொரூப ஸ்மரணையை ஸ்ரீபகவான் நினைவுறுத்தினாராயிற்று. இதை

'உள்ளது நாற்பது, 28-ம் பாடலிலும் ஸ்ரீபகவான் குறிப்பிட்டுள்ளார்.

**ஒப்பு: கூர்ந்த மதியால்** (ஞானாஷ்டாங்கம்) பேச்சு மூச்சடக்கிக் கொண்டுள்ளே (யோகாஷ்டாங்கம்) ஆழ்ந்து அறிய வேண்டு அறி.

இறுதியாக **"உன்னில் உயர்வுறும் ஈது உன்"** என்றதாவது

'உன்னில்' என்னும் சொல்லிற்கு 'உன் உள்ளே' என்னும் பொருளை அனைவரும் அறிவர். இதற்கு "உனக்கு நிகராக அல்லது உன்னைப்போல்" என்று மற்றொரு பொருளும் உண்டு. இது நன்னூல் இலக்கணத்தில் கூறப்பட்டுள்ளது.

" ஐந்தாவதன் உருபு **இல்லும் இன்னும்**
நீங்கல் **ஒப்பு** எல்லை ஏதுப் பொருளே". - நன்னூல், 299.

'இல்', மற்றும் 'இன்' என்னும் ஐந்தாம் வேற்றுமை உருபுக்களுக்குக் கூறப்பட்டுள்ள நான்கு பிரயோகங்களில் **'ஒப்பு'** என்பதற்கு **'போல அல்லது நிகராக'** என்றும், அதற்கு உதாரணம் காட்டுகையில் **'காக்கையில் கரியது களம்பழம்'** என்றும் கூறி, 'காக்கையைப் போல' அல்லது 'காக்கைக்கு நிகராக' களம்பழம் கரிய நிறத்தை உடையது என்றும் விளக்கப்பட்டுள்ளது. இதில் களம்பழம் உபமேயம்; கரியது பொதுத்தன்மை; காக்கை உபமானம் அல்லது ஒப்புப் பொருள் (ஒப்பிடப்படும் பொருள்) ஆகும். அது போன்றே, 'உன்னில் உயர்வுறும்' என்பதில் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு பிரகாசத்தைத் தரிசனம் செய்யும் யோகி உபமேயம்; 'உயர்வுறும்' என்பது பொதுத்தன்மை; 'உன்' அதாவது அருணாசலம் உபமானம் அல்லது ஒப்புப் பொருள் ஆகும்.

இத்தகைய பிரயோகங்களைக் கையாளுவதில் ஸ்ரீபகவான் அதி சமர்த்தரானபடியால் இந்த அரிய இரண்டாவது பொருளில்தான் 'உன்னில்' என்கிறார். தன்னுணர்வு ப்ரகாச ஆன்ம ஒளியைத் தரிசனம் செய்யும் யோகி அருணேசற்கு நிகராக ஆன்ம சொரூபமாகவே உயர்ந்து விடுவார் என்று கூறவேண்டியே "உன்னில் உயர்வுறும்" என்றார்.

அருணாசல லிங்கோற்பவத்தில் 'உன்னில் உயர்வுறும்' என்பது உண்மையிலேயே நிகழ்ந்தது. அடியைக் காணவியலாத

உண்மையை அகமுகப்பட்டதினுல் பரிசுத்தமடைந்த மனத்தொடு மகாவிஷ்ணு ஒப்புக் கொண்டார். அடியைக் காணுதல் அகமுகப்படுதலே; அவ்வாறு அகமுகப்பட்டதினுல் மகாவிஷ்ணுவின் மனம் 'அகமுகமாரந்த அமலமதி'யாகியது. ஆன்ம ஞானமெய்திட இறைவனின் அருள் என்னும் சூரிய ஒளிக்காகக் காத்துக் கொண்டிருந்தது. அப்போது அருணுசலன் ஜோதியை தரிசனம் செய்து தன்னைத் தான் அறிதலே! ருசி, நீதி, மதி என்பவை சுருசி, சுநீதி, சுமதி என்று சிறப்பித்துக் கூறப்படுவதைப் போன்றே ஸ்வாத்ம தரிசனம் 'சுதர்சனம்' எனப்பட்டது. புராணங்கள் இதை ஈசுவரன் மஹாவிஷ்ணுவிற்குச் 'சக்ராயுதம்' வழங்கியதாக உருவகப்படுத்துகின்றன. அது மிக மிகச் சக்திவாய்ந்த ஆயுதமாகக் கருதப்படுவதற்குக் காரணம், தன்னைத் தானறிதலை அதைப் பெற்றவர் பெறுவதினுலேயே!

'நான்' என்னும் இருப்புணர்வு ப்ரகாசமாகிய அருணுசலனெடு மஹாவிஷ்ணு தன்னைத் தான் அறிந்து கலந்தார்; அருணுசலனுக்கு நிகரானுர். இதனுல் ஈசுவரனும் தனக்கு நடப்பதைப்போல் கோயில், பூஜை வழிபாடுகள் அனைத்தும் மஹாவிஷ்ணுவிற்கும் நடைபெற வேண்டுமென்று ஆணையிட்டார். சங்கர நாராயணன், ஹரிஹரன் என்னும் திருநாமங்களை ஏற்று மஹாவிஷ்ணுவிற்குப் பெருமை சேர்த்தார். பொய்யுரைத்த பிரம்மாவிற்கு கோயில் வழிபாடு கூடாதென்றுத் தடுத்தார். எனவே அருணேசற்கு நிகராக தன்னைத் தானறிந்த ஞானி உயர்வுறுகிருரென்ற ஸ்ரீபகவானின் வாக்கு மஹாவிஷ்ணுவைப் பொருத்தமட்டில் உண்மையாகிறது.

இதுபோலவே பராசக்தியும் நானுர் ஞான விசாரத்தால் அருணுசலனெடு ஒன்று கலந்து, 'உன்னில் உயர்வுறும்' என்னும் ஸ்ரீபகவானின் வாக்கிற்கொப்ப, அருணுசலனுக்கு நிகரானுர். அருணேசரும் அர்த்தநாரீஸ்வராகக் காட்சியளித்து இதை உறுதிப்படுத்தினுர்.

பஞ்சரத்ன ஸ்லோகங்களில் கோஹினூர் வைரம்போல் தனிப் படப்பிரகாசிக்கும் 'உன்னில் உயர்வுறும்' என்னும் இந்த அமர வாக்கியம் ஸ்ரீபகவானுக்கே மிகப் பொருத்தமாக

*அமைகின்றதல்லவா! அதனாலன்றோ இன்று அகிலம் முழுவதும் அருணாலசனின் மனித வடிவமாக ஸ்ரீபகவான் மதிக்கப்படுகிறார்.*

*இனி 'உன்னில்' என்பதை உள்ளபடியே 'உன்னுள்ளே' என்று பொருள்கொண்டு, 'உன்னில் உயர்வுறும்' என்பதற்கு 'உன்னுள்ளே பிரவேசித்து, ஒன்று கலந்து மேன்மையுறுகிறான்' என்னும் மற்றொரு பொருளும் காண்க. இந்தக் கருத்தை பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் கீதோபதேசத்தில் உறுதி செய்துள்ளார்.*

***ஒப்பு:*** **ப4க்த்யா மாமபி4ஜாநாதி யாவான்யஸ் சாஸ்மி தத்வத:|**

**ததா மாம் தத்வதோ ஞாத்வா விசதே தத3னந்தரம் ||**

– பகவத் கீதை, 18.55

***பொருள்:*** *நான் யார், எத்தன்மையன் என்று என் மீது வைத்த அன்பினால் ஒருவன் என்னை உள்ளபடி அறிகிறான்;* **நன்கறிந்தவுடன்** *என்னுள்ளே பிரவேசிக்கிறான்.**

*இறுதியாக, **'ஈது உன்'**, அதாவது, 'இதை உணர்வாயாக' என்று ஸ்ரீபகவான் அருணாசலேசுவரரிடம் தெரிவித்துக் கொள்வது அவர் மாட்டு ஸ்ரீபகவான் கொண்ட தனி உரிமையால் என்க; இதுவும் மூன்றாம் திருப்பாட்டில் 'உன்கண் அருணாசலனே ஓர்' என்று ஏற்கனவே செய்த கருத்துப் பரிமாற்றத்தைப் போன்றதே!*

**ஞானமும் யோகமும்** ஒன்றே; வேறல்லவென்று இந்த நான்காம் திருப்பாட்டில் விளக்கிய ஸ்ரீபகவான் **பக்தியும் ஞானமும்** ஒன்றேயென்று நிரூபிக்கும் அதிசயத்தை அடுத்து வரும் ஐந்தாம் பாடலில் காண்க.

*★குறிப்பு: 'ஹரித்வார்' என்னும் க்ஷேத்ரத் திருநாமம் இதையே குறிக்கிறது. (ஹரி - 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம்; துவார் - அதன் நுழைவாயில்). 'அகவுருவை நன்கறிந்து முந்நீர் நதி போலும் ஒயுமே உன்கண் அருணாசலனே ஓர்.' என்று பஞ்ச ரத்னத்தின் மூன்றாம் பாடல் விளக்கி நிற்பதும் இதுவே!*

நான்காம் பாடல் முற்றிற்று

## பாடல் - 5

**த்வையர்ப்பிதமனஸா த்வாம் பச்யன்ஸர்வம்**
**தவாக்ருதிதயா ஸததம் |**
**பஜதே$S$னன்யப்ரீத்யா ஸ ஜயத்யருணாசல த்வயி**
**ஸுகே மக்$^3$ன: ||**

**உன்னிடத்தில் ஒப்புவித்த உள்ளத்தால் எப்பொழுதும்**
**உன்னைக் கண்டுஎல்லாமும் உன்னுருவாய் - அன்னியமில்**
**அன்புசெயும் அன்னோன் அருணாசலா வெல்கும்**
**இன்புருவாம் உன்னில் ஆழ்ந்தே.**

***பொ-ரை:*** *அருணாசலா! உம்மிடத்தில் முழுமையாக சரணாகதி செய்து, ஒப்படைக்கப்பட்டு தூய்மையடைந்த மனத்தினால் ஸதாகாலமும் அனைத்துப் பொருள்களிலும், ஜீவராசிகளும் உம்முடைய சொரூபவிலாஸத்தையே தரிசனம் செய்து, அவை அனைத்தையும் நீரேயென்று உணர்ந்து, அனனிய பக்தி செலுத்தும் உண்மையான பக்தன் ஆனந்தமயமான உம் சொரூபத்தில் மூழ்கி (பெறற்கரிய பேறாகிய) பேரின்ப சாயுஜ்ய முக்தி நிலையை எய்தி வெற்றி பெறுகிறான்.*

***வி-ரை: உன்னிடத்தில் ஒப்புவித்த உள்ளத்தால்*** *என்றதாவது*

*இறைவனிடம் முழுமையாக ஒப்படைக்கப்பட்ட மனம் அகந்தை அழிந்த மனமேயாகும். அப்போது அதற்கு 'மனம்' என்னும் நாமமும் இல்லை. மறுபடியும் எண்ணங்களை வளர்த்துக் கொள்ள சக்தியற்றுப் போகின்றது. அதாவது, தன் தனித் தன்மையை இழந்து ஆன்ம வஸ்துவாகவே திகழ்கின்றது.*

*ஒப்பு:* மனம் என்பது உண்மையில் ஞான சொரூபமே; நிர்மலமாயிருப்பதால் அப்போது அதற்கு 'மனம்' என்னும் நாமமில்லை. ஒன்றை (ஆன்மாவை) ஒன்றாக (அனாத்மாவாக) அறியும் விபரீத ஞானமே மனமாகும் -விசார சங்கிரஹம்,ஐஐ.3 (மனம்).

*உதாரணத்திற்கு 'ஜித காமாய நம:' என்னும்போது, காமத்தை 'அழித்தவரே' என்பதே பொருளாகுமன்றி, ஜெயிக்கப்பட்ட காமத்தை உடையவரே என்பதல்ல. அதுபோல் 'உன்னிடத்தில் ஒப்புவித்த உள்ளத்தால்' என்பது அருணாசலம் என்னும் விரிகதிரால் விழுங்கப்பட்ட, முந்நீர் நதிபோல் ஓய்ந்து போன மனத்தையே குறிக்கின்றது. எனவே பக்தியோகத்தின் உச்சக் கட்டமான அகந்தை மன அழிவையே ஸ்ரீபகவான் இந்த ஐந்தாம் பாடலின் முதல் வரியாக வைத்துத் தொடங்குகிறார். இதை குருவாசகக்கோவையிலும் கூறுகிறார்.*

***ஒப்பு (1):***

**சொற்பதமாம் தொம்பொருளாய்ச் சூனியமாம் தன்னைஒளிர்**
**தற்பதமா(ய்) நின்ற சதாசிவமாம் – சிற்பதத்தே**
**ஆனவுப சாந்த அசிபதத்தால் மாய்க்கும் [பு**
**மானே சிறந்தபத்தி மான்.** –பாடல் 718.

*உன்னிடத்தில் ஒப்புவித்த உள்ளத்தால்...*

***பொருள்:*** *'த்வம்' (நீ) என்னும் சொல்லிற்குப் பொருளாகிய தன்னை (சூனிய அகந்தை மனத்தை) 'தத்' பதமாக விளங்கும் சதாசிவமாகிய ஆன்மாவில் சாந்தமே வடிவான 'இருக்கிறேன் (அஸி)' என்னும் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாச அனுபவத்தால் அழிப்பவனே மிக உயர்ந்த பக்திமான் ஆவான்!*

***குறிப்பு:*** *'தத் த்வம் அஸி' என்னும் வேதாந்த மஹாவாக்யத்தின் உண்மைப் பொருள் சித்தாந்த பக்தி மார்க்கத்தில் மிகச் சரியாகப் பொருந்தும் அற்புதத்தை இந்தப் பாடலில் ஸ்ரீபகவான் விளக்குகிறார். இதுவே 'பரபக்தி' எனப்படுவதாகும்.*

***ஒப்பு (2):***

**பக்தியால் உற்ற பரிபாக சித்தத்தால்**
**பத்திரசம் ஆற்றப் பருகினோர் – புத்தமுதாம்**
**பத்தியே பக்திப் பயனாக ஓங்குபர**
**பத்தியே காதலிப் பார்.** – பாடல் 720.

***பொருள்:*** *(பரபக்தி செய்வோர்) பக்தி மார்க்கத்தில் பக்குவம் முதிர்ந்து பக்தியின் சுவையை முற்றப் பருகி, புத்தமுதாகிய அந்த பக்தியையே தாம் செய்யும் பக்தியின் பயனாக அனுபவித்து (வேறு*

*பிரதிபலன் எதையும் நினையாமல்), அந்த உத்தம பரபக்தியையே மேன்மேலும் விரும்புவர்.*

*இதுவே அஹேதுக பக்தி (motiveless devotion) எனப்படுவதாகும். ஸ்ரீ பகவான் ஸ்ரீ அருணாசல நவமணி மாலையில் இப்படிப்பட்ட பக்தியை வெளிப்படுத்துவது இங்கே கவனிக்கத்தக்கது.*

***ஒப்பு:*** அண்ணா மலையாய் அடியேனை
ஆண்ட அன்றே ஆவி உடல்
கொண்டாய் எனக்கோர் குறை உண்டோ
குறையும் குணமும் நீ அல்லால்
எண்ணேன் இவற்றை என் உயிரே
எண்ணம் எதுவோ அது செய்வாய்
கண்ணே உன்தன் கழலிணையில்
காதல் பெருக்கே தருவாயே. - பாடல் 7

*இவ்வாறு மனம் அழிந்த நிலையில் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமாம் ஆன்மாவில் ஒன்று கலந்து தான் வேறு; ஆன்மா வேறு என்பதழிந்து, அன்னியமின்றி செய்யப்படும் அனனிய பக்தியே பரபக்தி எனப்படுகின்றது. மிக மிக உயர்ந்த இந்தப் பக்தியை 'ஓங்கு பரபக்தி' என்று ஸ்ரீரமண புராணத்தில் ஸ்ரீமுருகனார் கூறுகிறார்.*

***ஒப்பு (1):*** ***ஓங்கு பரபக்தி*** உருத்தெரிய பக்குவர்க்குப்
பாங்குபெற நீ போய் பயின்றுஒழுகிக் காட்டுகென
- ஸ்ரீரமண புராணம், 10,11.

***ஒப்பு (2):*** அனிய *பா*வத்தில் அவன் அகமாகும்
அனனிய பாவமே உந்தீபற
அனைத்தினும் உத்தமம் உந்தீபற.

***பா***வ ***ப***லத்தினால் ***பா***வனா தீதசற்
***பா***வத்து இருத்தலே உந்தீப
***பரபக்தி*** தத்துவம் உந்தீபற - உபதேச உந்தியார், பாடல் 8,9

இந்த பரபக்தி தத்துவத்தை அடுத்த வரியில் ''எப்போதும் உன்னைக் கண்டு எல்லாமும் உன்னுருவாம் அன்னியம் இல் அன்பு செ(ய்)யும் அன்னேன்'' என்று விளக்குகிறார்.

**எப்பொழுதும்** என்றதாவது

முதற்பாட்டின் அருள் நிறைவு, மற்றும் மூன்றாம் பாட்டிலுள்ள 'நன்கறிந்து' ஆகியவற்றின் விரிவாக்கமே இந்த ஐந்தாம் பாட்டில் குறிப்பிடப்பட்டுள்ள 'எப்பொழுதும்' ஆகும். ஏனெனில் ஒன்றை நன்கு முழுமையாக அறிந்து கொண்டுவிடின், அது எக்காலத்திலும், எப்பொழுதும், எந்த நிலையிலும் நழுவாது. கனவு, நனவு, உறக்கம் ஆகிய மூன்று அவஸ்தைகளிலும் (நிலைகளிலும்) ஞானி தன்னுணர்வுப் பிரகாசத்தை உணர்ந்தவராகத் தான் இருப்பார்; கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங்களிலும் உணர்ந்தவராகத்தான் ஒளிர்வார்; ஜீவதசையில் மட்டுமன்றி, உடலின் மரணத்திற்குப் பின்பும் உணர்ந்தவராகத்தான் இருப்பார்; மரண அனுபவத்திற்குப் பிறகு, 'நான்-நான்' என்னும் இருப்புணர்வுப் பிரகாசமாக சுமார் 54 வருடங்கள் நம் கண்முன் வாழ்ந்து காட்டிய ஸ்ரீபகவானே இதற்கு மாபெரும் உதாரண புருஷராக விளங்குகிறார். உறக்கத்திலும் அவர் ஆன்ம ஞாபகம் அகலாதவராக வாழ்ந்ததை அனைவரும் அறிவர். உண்மையில் அவர் உறங்கிய நேரம் மிகவும் சொற்பமே. சராசரி மாந்தரைப் போல் அவர் மல்லாக்கப் படுத்து உறங்கியதை எவருமே பார்த்ததில்லையென்று குஞ்சுஸ்வாமி போன்ற முதுபழம் பக்தர்கள் கூறியுள்ளனர். அவர் ஓய்வு எடுத்ததும் ஒருக்களித்து சாய்ந்த நிலையிலேயே (reclining posture).

மேலும், தன்மை-முன்னிலை-படர்க்கை ஆகிய **மூவிடங்களின்** பொய்மையையும் உணர்ந்தவராய், அவற்றிற்கு ஆதாரமாகிய 'நான்-நான்' என்னும் தன்னொளிப் பிரகாசமே தன் சொரூபமாக ஞானி நிலைத்திருப்பார்.

**ஒப்பு:**

பன்னிலையாய்த் தோற்றும் படர்க்கையொடு முன்னிலைக்கும்
முன்னிலையாம் தன்மைதன் மூலம்அறிந்து அற்றால்

அதனோடு அவையும்ஒருங்கு ஆங்கே அழிவுற்று
அதன்ஒளியே தன்உண்மை ஆகும் அகண்டமே.

-ஸ்ரீ ரமண புராணம், 425-428

***பொருள்:*** *பலவித நிலைகளைத் தோற்றுவிக்கும் படர்க்கை, முன்னிலை ஆகியவற்றிற்கு முன்னதாக முதலில் அறியப்படும் தன்னிலையாகியத் தன்மை தன் மூலத்தை ஆராய்ந்து (அகமுகப்பட்டு), அதனுடைய பொய்த் தன்மையை உணர்ந்து அழிந்துவிடும்போது, அதனோடு படர்க்கையும் முன்னிலையும் அழிந்துவிடுகின்றன; அப்போது தன்மை-முன்னிலை-படர்க்கை ஆகிய மூவிடங்களுக்கும் ஆதாரமாக விளங்கும் நான்-நான் என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே தன் உண்மை சொரூபமாக அறியப்படுகின்ற அகண்ட (பின்னப்படாத) பரிபூரணமே!*

***அ.ப-ரை:*** *அற்றால் - அழிவுற்றால் (அறுதல் - அற்றுப் போதல்), அதன் ஒளியே - தன்மை உணர்விற்கு ஆதாரமாக விளங்குகின்ற 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே.*

*இவ்வாறு ஞானி தன்னுணர்வுப் பிரகாசமான ஆன்ம நிலையிலிருந்து நழுவாமல் இருப்பதையே 'எப்பொழுதும்' என்றார். உற்றுநோக்குங்கால் ஜீவாத்மா 'எப்பொழுதும்' ஆன்மநிலையை விட்டு அகலாமல் இருப்பதே 'அருள் நிறைவு' ஆகும். இறைவன் (பரமாத்மா) 'நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமாக ஒவ்வொரு ஜீவராசியிலும் முழுமையாக ஒளிர்வது 'அருள் நிறைவு' என்று சொல்லப்படுவது இறை நோக்கிலிருந்தேயாகும். அதே சமயம் இந்த உண்மையே பக்தன் கோணத்திலிருந்து அந்த பக்தன் அகந்தை மனம் அழியப் பெற்றுத் தன்னுணர்வுப் பிரகாசமாக ஒளிரும்போது, அது அந்த பக்தனுக்கு இறைவன் ஆற்றுகின்ற 'அருள் நிறைவு' ஆகின்றது. இரண்டும் ஒன்றே! அதனால்தான் ஸ்ரீபகவான் 'அருள் நிறைவான அமுதக் கடலே' என்று பஞ்சரத்னத்தைத் தொடங்குகிறார். ஆகவே முதற்பாட்டிலுள்ள* ***'அருள் நிறைவு'****, மூன்றாம் பாட்டிலுள்ள* ***'நன்கறிந்து'****, ஐந்தாம் பாட்டிலுள்ள* ***'எப்போதும்'*** *ஆகிய மூன்றிற்கும் உள்ள சூக்ஷ்மத் தொடர்பு உற்றுநோக்கி உணர்ந்து மகிழத்தக்கது.*

**உன்னைக் கண்டு எல்லாமும் உன்னுருவாய்** என்றதாவது

காணுகின்ற கண்ணின் தன்மையைப் பொருத்தே காட்சி அமையும். மைக்ரோஸ்கோப், டெலெஸ்கோப் போன்ற விசேஷ சக்ஷுக்களைக் (special eyes) கொண்டு ஊனக் கண்ணால் காண முடியாத அருகிலிருப்பனவற்றையும், தூர தேசத்திலிருப் பவனவற்றையும் காண முடிகிறது. ஸ்ரீகிருஷ்ணர் தம் விஸ்வரூபத்தைத் தரிசிக்க உதவும் வகையில் பாண்டவ தூதின் போது திருதராஷ்டிரனுக்கும், யுத்த பூமியில் அர்ஜுனனுக்கும் திவ்ய சக்ஷு க்களை ஈந்ததாக மகாபாரதம் கூறுகிறது. ஆகவே கண்ணின் இயல்பையொட்டிக் காட்சி அமைவதை ஸ்ரீபகவான் உள்ளது நாற்பதிலும் கூறியுள்ளார்.

**ஒப்பு:** உருவம் தானுயின் உலகுபரம் அற்ரும்
உருவம் தான்அன்றேல் உவற்றின் – உருவத்தை
கண்ணுறுதல் யாவன்எவன் கண்ணலால் காட்சியுண்டோ
கண்அதுதான் அந்தமிலாக் கண். –பாடல் 4.

**பொருள்:** தான் ஒரு தேகமென்ருல், உலகமும் கடவுளும் உருவங்கள் ஆவர். தான் உடல் அல்ல (ஆன்மாவே) என்று (உணர்ந்த ஞானிக்கு அல்லது) உணராத அஞ்ஞானிக்கு உறக்கத்தில் உடலின்றி உலகத் தோற்றமோ, கடவுள் காட்சியோ எவ்வாறு சாத்யமாகும்? கண்ணின்றி காட்சி இன்ருவதால், ஒருவனுடைய உண்மையான கண் என்றும் அழிவற்ற ஆன்மாவேயன்றி, ஊனக்கண்ணோ, மனமோ அல்ல.

ஆகவே உலகத் தோற்றத்தை, கடவுளர் காட்சியைக் காண்கின்ற மனமாக இல்லாமல், அதாவது, அந்த அகந்தை மனம் அழிந்த நிலையில், 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமாகிய ஆன்மாவாகத் திகழும்போது, அதன் ஆன்ம இயல்பையொட்டி ஆன்மக் காட்சி ஒன்றே எங்கும், எப்பொழுதும் புலப்படும்; அகண்ட, அத்துவித சச்சிதானந்த ஆன்ம அனுபவமே எஞ்சி நிற்கும். இதையே ''உன்னைக் கண்டு (அருணாசலனை உள்ளபடி நாம, ரூபமற்ற தன்னொளிப் பிரகாசமாகவே கண்டு)

எல்லாமும் உன்னுருவாய் (காண்கின்ற அனைத்தையும் ஆன்ம உருவாய்)'' என்றார்.

**அன்னியமில் அன்பு செ(ய்)யும் அன்னேன்** என்றதாவது

'அன்னியமில்' என்னும் சொல் 'எல்லாமும் உன்னுருவாய்' என்பதற்கும், அதன் பின்னால் வருகின்ற 'அன்பு செயும் அன்னேன்' என்பதற்கும் ஒருங்கே பொருந்துவதால் மத்திமதீபகம்' என்னும் அணியலங்காரம் ஆகும்.

'எல்லாமும் உன்னுருவாய்' என்பதை மீண்டும் உறுதிபடக் கூறவேண்டி 'அன்னியமில்' என்றார். அதையே 'அன்பு செயும் அன்னேன்' என்பதனொடுக் கூட்டிப் பார்க்கையில், ஞானியின் நிலையை எடுத்துரைப்பாராயிற்று. ஜக, ஈசுவரக் காட்சிகள் அழிந்த அகந்தை ஒழிவில் அனைத்தையும் தானாகப் (ஆன்மாவாக) பார்க்கும் ஆன்மானுபவமே அனைத்தையும் அருணாசலமாகப் பார்த்தல் என்பதை 'எல்லாமும் உன்னுருவாய்' என்றார். இது பற்றி குருவாசகக்கோவையில் ஸ்ரீபகவான் கூறுவது:

***ஒப்பு (1):*** தன்னைத் தவிரமற்றோர் சத்தையைக்கா ணாமையினால்
பின்னம்அறப் பிறங்கும் பேரறிவே – உன்னதமாம்
முற்றுணர்வாம் அல்லாது முக்காலமும் உணரும்
மற்றுணர்வோ அல்ல மதி.

–குருவாசகக் கோவை, 926.

***பொருள்:*** தன்னுணர்வுப் பிரகாசமாகியத் தன்னைத் தவிர மற்றுமொரு உண்மை இருப்புணர்வை எங்கும் எந்தப் பொருளிலும் காணாமையினால் பின்னமற்று, அகண்டமாக ஒளிரும் ஆன்மப் பேரறிவே தலைசிறந்த முற்றுணர்வு (Absolute Consciousness) ஆகும். 'பிரஜ்ஞானம் பிரம்ம -Consciousness is Brahman' என்று வேத மஹாவாக்கியம் கோஷிப்பதும் இதுவே. அன்றி முக்காலம் உணர்தல் (தூர தேசத்தில் நடப்பன அறிதல், பிறர் கருத்தறிதல் etc) போன்றவை பேரறிவு ஆகா. இதை உணர்வாயாக!

*ஒப்பு (2):*

**தானன்றி யாருண்டு தன்னை யார் என்சொலின்என்**
**தான்தன்னை வாழ்த்துகினும் தாழ்த்துகினும் - தான்என்ன**
**தான்பிறரென்று ஓராமல் தன்னிலையில் பேராமல்**
**தான் என்று நின்றிடவே தான். -உள்ளது நாற்பது அனுபந்தம், 38.**

***பொருள்:*** *தன்னைத் ('நான்-நான்' என்னும் தன்னுணர்வைத்) தவிர வேறு எவர் உளர்? தன்னைத் தானே வாழ்த்தினாலும், இகழ்ந்தாலும் அதற்குப் பொருளேது? ஆகவே பிறர் தன்னை யாது கூறினாலும் என்ன? தன்னைப் பிறராக எண்ணாமல், தன்னிலையாகிய தன்னுணர்விலிருந்து அகலாமல் இருப்புணர்வாகவே இருந்துவிடின், அன்னியம் எங்கிருந்து வந்துற்றது?*

*ஸ்ரீபகவான் வசன நடையிலும் இதைக் கூறியுள்ளார்:*

***ஒப்பு:*** **பிறருக்கு ஒருவன் கொடுப்பதெல்லாம் தனக்கே கொடுத்துக் கொள்கிறான். -நானார் அருண்மொழித் தொகுப்பு.**

*ஆகவே **'அன்னியமில்'** என்றார். அகந்தைவயப்பட்ட ஒருவன் மற்றெல்லாவற்றையும்விடத் தன்னையே மிகவும் அதிகமாக நேசிக்கிறான். அதற்கு ஒப்பிடும்போது அனைத்தையும் தானாகக் காணும் ஞானி எந்த அளவிற்குப் பிறவுயிர்களை நேசிப்பாரென்பது அகந்தை மனத்தால் அளவிட முடியாத ஒன்றாகும். ஏனெனில் அகந்தை மனத்தின் அன்போ பின்னப்பட்டது. ஞானியினுடையதோ அன்னியமில்லாத அபின்ன, பரிபூரண அன்பு! ஞானியின் இயல்பு அபின்ன அன்பு செலுத்துவதே!*

***ஒப்பு (3):*** *ஸ்ரீ முருகனார் ஞானசொரூபமாகத் திகழும் ஈசுவரனை 'அன்னியமில் அன்பு' செய்பவராகக் கூறுகிறார்.*

**ஆருயிர்மாட்டு இன்ப அருளாற்றல் ஒன்றே தன்**
**காரியமாகக் கொண்ட அக் கண்ணுதலோன்......**

**-ஸ்ரீரமண புராணம், 15-16.**

*(இன்ப அருளாற்றல் - அன்பு செலுத்துதல்).*

***ஒப்பு (4):*** **இயல்பில் பேரன்புருவாய் ஏய்தலால் தன்னின்**
**அயல்களின் எல்லாம் மிகுமெய் அன்புசேர் உன்னை**
- ஸ்ரீ ரமணபுராணம், 483-484.

***பொருள்:*** *தன் உண்மை இயல்பு பேரன்பே சொரூபமாகத் திகழ்வதால், தனக்கு அன்னியமாக விளங்கும் அனைத்து உயிர்களின் மீதும் மிகுந்த அன்பு செலுத்தும் உன்னை...*

*இவ்வாறு அபின்ன அன்பு செலுத்தும் ஒருவரே தம் உள்ளத்தை முழுமையாக அருணாசலனிடம் (ஆன்மாவில்) ஒப்படைத்தவராவார். உண்மை நோக்கில் அன்னியமின்றி அபின்ன நேசம் (அன்பு) பயில்வதே பரபக்தி! எனவே இறைவனிடத்தில் அகந்தை மனத்தை முழுமையாக* ***ஒப்படைப்பதும்****, அவரை* ***எப்போதும்*** *காண்பதும், அனைத்தையும் தன்னுணர்வுப் பிரகாசமாம் தானாக* ***அன்னியமில்லாத அன்பு செய்வதும்*** *ஆகிய முத்தொழில்களும் தனித் தனிச் செயல்கள் அல்ல; அவை மூன்றும் ஒன்றே! அதாவது தன்னுணர்வுப் பிரகாச ஆன்மாநுபூதியே!*

*எனவே அகந்தை மனம் முற்றிலும் அருணாசலனிடம் ஒப்படைக்கப்பட்ட பிறகு, நாம, ரூபங்களற்ற 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசமாகத் தன்னை உணர்ந்து கொள்கின்ற ஞானியே மனிதப் பிறவி எடுத்ததினால் அடைய வேண்டிய வெற்றியை அடைந்தவராகிறார்.*

***அருணாசலா வெல்கும் இன்புருவாம் உன்னிலாழ்ந்தே*** *என்றதாவது*

*இவ்வாறு வெளிவிஷயங்கள் விட்டு விளங்கும் நாம, ரூபங்களற்ற தன்னுணர்வுப் பிரகாச அருணாசலனை எப்பொழுதும் தரிசனம் செய்து, ஸதா அவனையே தியானித்துக் கொண்டு, அந்த தன்னுணர்வு ஆன்ம சொரூபமாகவே திகழ்ந்து, தானாகிய தன்னையே (ஆன்மாவையே) அனைத்திலும் கண்டு, காண்கின்ற அனைத்து உயிர்களையும் அன்னியமில்லாத அபின்ன அன்பால் நேசிக்கும் அந்த தீரன் பேரின்பக்கடலே சொரூபமாக விளங்கும் அருணாசலனில் மூழ்கி ஸதா இன்புற்றவாறிருக்கிறான் என்பதைக் கூற வருவார் ''இன்புருவாம் உன்னிலாழ்ந்தே'' என்றார். அத்தகு ஞான*

*தீரனே மனித வாழ்க்கையில் உண்மையான வெற்றியைப் பெற்றவனாகிறான் என்பதைக் கூறவேண்டி* ***"அருணாசலா வெல்கும்"*** *என்றார்.*

*'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ஜோதிப் பிரகாசமானது இன்பம், சுகம் அல்லது ஆனந்தமே சொரூபமாக உள்ளதென்பதைப் பற்பல இடங்களில் ஸ்ரீபகவான் கூறியுள்ளார்.*

***ஒப்பு (1):*** தனாதியல் யாதெனத் தான்தெரி கிற்பின்
அனாதி அனந்த சத்து உந்தீபற
அகண்ட ***சிதானந்தம்*** உந்தீபற -உபதேச உந்தியார், 28

***பொருள்:*** *தன்னுடைய உண்மையான இயல்பு எதுவென அறிந்திடின், அது ஆதியந்தமற்ற* ***சத்*** *(இருப்புணர்வு), அபின்ன* ***சித்*** *(உணர்வு), முழுமையான* ***ஆனந்தம்*** *ஆகும்.*

***ஒப்பு (2):*** தன்னை அழித்தெழுந்த தன்மயானந்தருக்கு......
- உள்ளது நாற்பது, 31.

***பொருள்:*** *இதுநாள் வரை 'நான்' என்று அபிமானித்திருந்த அகந்தை மனத்தை தன்னுணர்வுப் பிரகாசத்தில் தன்மயமாய்க் கரைத்த பின், அந்த இருப்புணர்வுத் தன்னொளியாகப் பிரகாசிப்பவர் ஆனந்தமே தன் சொரூபமாகத் திகழ்வர் (அதனால் அத்தகைய ஞானியரைத்* ***தன்மயானந்தர்*** *என்றார்).*

***ஒப்பு (3):*** *ஆன்ம வித்தைக் கீர்த்தனத்தில் ஐந்து சரணங்களும் ஆன்மாவின் இயல்பாகிய ஆனந்தத்தைக் குறித்தே நிறைவெய்துகின்றன.*

*இன்பம் பொங்குமே (1), இன்பத் தானமே (2), இன்ப விகாசமே (3), இன்ப அம்போதியே (4), இன்பு தோணுமே (5).*

*ஸ்ரீ முருகனார் ஆன்ம இயல்பாகிய 'இன்பத்தை' ஸ்ரீபகவானின் மீதேற்றிக் கூறுகிறார்:*

***ஒப்பு (4):*** முன்பே முளைத்த முழுமுதலாம் இன்பப்
பேரன்பே சிவமாய் அமர்ந்த அனந்தமே
- ஸ்ரீ ரமண புராணம், 473-474

ஆகவே, இவ்வாறு ஆனந்தமே சொரூபமாக 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ஜோதி ப்ரகாசம், அதாவது, அருணாசலம் திகழ்வதால், அதில் தன் ஜீவத்துவம் கரைந்தொழிந்த ஞானி அந்த அருணாசல ஆனந்த, இன்ப சுகத்தில் மூழ்கி விடுகிறாரென்று கூறவே **''இன்புருவாம் உன்னில் ஆழ்ந்தே''** என்றார்.

பக்தியோகத்தை விளக்கி ஒரு பாடலை அருளுமாறு காவ்ய கண்ட கணபதி முனிவர் வேண்டிக் கொண்டதினால், அவ்வாறு பக்தியோகத்தைத் தழுவி எழுத நேர்ந்தபோதும், ஸ்ரீபகவான் பக்தியும் ஞானமும் ஒன்றே; ஒரே நாணயத்தின் இரு பக்கங்களே என்று இந்தத் திருப்பாடலில் நிலைநிறுத்தும் அற்புதத்தை இப்போது பார்ப்போம்.

ஆன்மாவின் இயல்பாக விளங்கும் அதன் சத்யாம்சங்களாகிய சத்து, சித்து, ஆனந்தம் ஆகிய மூன்றும் கொள்ளத்தக்கவை. மித்யாம்சங்களாகிய நாம, ரூபங்கள் இரண்டும் தள்ளத்தக்கவை. அதனால் ஆன்மா 'சச்சிதானந்தம்' என்று போற்றப்படுகின்றது. இந்த மூன்று சத்யாம்சங்களும் இந்த ஐந்தாம் திருப்பாடலின் முன்னிரண்டு வரிகளிலும், அதற்கு அப்பால் பின்னிரண்டு வரிகளிலும் தனித்தனியே நிரம்பி வழிகின்றன. எவ்வாறெனின்,

(1) அகந்தை மனம் முழுவதுமாக அருணாசலனிடம் ஒப்படைக்கப்பட்ட பின்பு எஞ்சி நிற்கும் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே **'சத்து'**! இதுவே **''உன்னிடத்தில் ஒப்படைத்த உள்ளத்தால்'** ஆகும்.

(2) அகந்தை மனம் கரைந்ததால் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வைத் தன் இருப்புணர்வாக அனுபவிப்பதே அதைத் தரிசனம் செய்வதாகும். எந்த அனுபவமுமே உணர்வு பூர்வமானதென்பதால், இந்த ஆன்மானுபவமும் உணர்வுமயமானது; உணர்வு சம்ஸ்கிருதத்தில் 'சித்' அல்லது சைதன்யம் (sentient, intelligence, consciousness) எனப்படுகிறது. ஆகவே **''எப்போதும் உன்னைக் கண்டு''** என்பதே **'சித்து'**!

(3) **'அன்னியம் இல் அன்பு செ(ய்)யும்'** என்பதே ஆனந்தம்! இது முன்னமே முழுவதுமாக விளக்கப்பட்டது.

இப்போது பின்னிரண்டு வரிகளைப் பார்ப்போம்.

*(1)* ***'வெல்கும்'*** *என்னும் சொல் உறுதித்தன்மையைக் காட்டுகிறது. இதுவே* ***சத்து!***

*(2)* ***'உன்னில் ஆழ்ந்தே'*** *என்பது அனுபவம்! இந்த அனுபவம் அகந்தை அழிவினால் ஏற்படுவது ஆகும். ஆகவே எந்த அனுபவமும் உணர்வுபூர்வமானதென்று முன்னம் பார்த்தபடி, இந்த அனுபவம் உணர்வுமயமானதாகையால் (consciousness) அகந்தை கரைந்தொழிந்து, 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசமாம் அருணாசலனில் ஆழ்ந்து, மூழ்கும் அனுபவமே* ***சித்து!***

*(3)* ***'இன்புருவாம் உன்னில் ஆழ்ந்தே'*** *என்பதே* ***'ஆனந்தம்'!***

*ஞானயோகம் தனது அடிப்படை உண்மையாகக் கூறுவது 'ஆன்மாவின் இயல்பு சச்சிதானந்தம்' என்பதே! இதை ஸ்ரீபகவான் தன் அனுபவமாக இந்தப் பாடலில் அருளியுள்ளார். அவர் வசன நடையில் கூறியுள்ளதைக் கீழே காண்க.*

***ஒப்பு:*** "தனித்து நிற்கும் ***அறிவே நான். அறிவின் (ஞானத்தின்) சொரூபம் சச்சிதானந்தம்".*** - நானார் அருண்மொழித் தொகுப்பு

*இவ்வாறு இந்த ஐந்தாம் திருப்பாட்டின் ஒவ்வொரு வரியிலும் ஸ்ரீபகவான் பக்தியும் ஞானமும் ஒன்றேயென்று தம் சுவானுபூதியால் ஓர் அற்புதத்தைப் படைத்துள்ளார்.*

*பக்தியும் ஞானமும் ஒன்றேயென்று குருவாசக் கோவையில் அவர் மேலும் ஐயம்திரிபு நீக்கி அருளியுள்ள பாடல்கள் இங்கே வாசித்துணரத்தக்கன.*

***ஒப்பு (1):*** அறிவுநெறி அன்புநெறி யான இரண்டும்
உறவுநெறி யாக உணர்க - பிறிவிலா
அவ்விரண்டுள் ஒன்றி னொன்றை அகற்றாமல்
ஒவ்வஒருங்கு உள்ளத்து ஒழுகு. -பாடல் 731.

***பொருள்:*** *ஞானயோகமும் பக்தியோகமும் ஆகிய இரண்டு யோகங்களும் ஒன்றினுக்கொன்று விரோதமில்லாத உறவு நெறிகளாக அறிவாயாக. பிரிவற்ற அந்த இரண்டினுள் ஒன்றை மற்றொன்றினிலிருந்து பிரித்துவிடாமல், அந்த இரண்டு யோகங்களையும் சமமாக உள்ளத்தில் ஏற்றுக் கடைப்பிடிப்பாயாக.*

***ஒப்பு (2):*** பரபக்தி ஞானம் பரிசோதிக் குங்கால்
சொரூபத்தில் ஒன்றாய்த் துலங்கும் - இருவிதத்துள்
ஒன்றுமற் றொன்றுக்கு உபாயமே யாம்எனல்அவ்
வொன்றன்மெய் ஓராமை யாம். -பாடல் 722.

***பொருள்:*** *ஆராய்ந்து பார்த்தால் ஆன்மாவில் பரபக்தியும், ஞானயோகமும் ஒன்றாய் விளங்கும் உண்மை அறியப்படும். எனவே அந்த இரண்டும் ஒன்றிற்கு ஒன்று துணையேயென்று கூறுவதும்கூட உண்மை நோக்கில் சரியல்ல. அந்த இரண்டினுள் ஏதாவது ஒன்றை சரியாக உணராததினால் அஞ்ஞானிகள் அவ்வாறு கூறுகிறார்கள்.*

***குறிப்பு:*** *பரபக்தி அன்னியமில்லாத நிலையாகையால், அது ஞானயோகம் முரசறையும் தன்னிழப்பே! ஆகவே பக்தியும் ஞானமும் வேறல்ல. முதலில் இந்த இரண்டையும் வேறாகப் பார்ப்பதும், பின்பு அவையிரண்டும் ஒன்றனக்கொன்று உபாயமேயென்று கூறுவதும் ஆகிய இரண்டு கூற்றுமே சரியல்ல என்பது கருத்து.*

***ஒப்பு (3):*** அறிந்தாரும் அந்த அதிகாரம் பற்றிச்
சிறந்ததா(ய்) ஒன்றைத்தாம் தேர்தல் - சிறந்ததா(ய்)
ஒன்றுபற்றிச் சென்றார்மற் றொன்றுநத்தித் தாம்பயின்ற
ஒன்றை எற்றிப் போகாமை உணர். -பாடல் 723.

***பொருள்:*** *பக்தி - ஞான அபதேத்தை அறிந்த ஞானிகளும் சில சமயம் பக்தியோகத்தையோ அல்லது ஞானயோகத்தையோ மிகச் சிறந்ததாக உயர்த்திக் கூறுதல் ஏனென்றால், அந்த இரண்டு யோங்களில் ஏதாவது ஒன்றை உயர்வாகக் கருதிப் பின்பற்றும் சாதகர்கள் தாம் பயிலும் ஒன்றை விட்டு மற்றொன்றை நாடி, தம்*

சாதனையிலிருந்து நழுவி விடாமல் இருப்பதற்காகவேயாகும்.

*குறிப்பு:* பக்தி ஞான யோகங்களின் அபேதத்தை உணர்ந்த ஞானி, அவ்விரண்டில் ஏதாவது ஒன்றைத் தீவிரமாகப் பயிலும் சாதகரும் அந்த உண்மையை இறுதியில் உணர்வரென்பதை அறிந்து, அவர்களிடம் கொண்ட அன்பினால் அவர்களை நடுவில் குழப்பாமல் பொறுமையைக் கடைபிடிக்கிறாரென்பது கருத்து.

***ஒப்பு (4):***

**மெய்ப்பொருளே உள்ளத்து விண்டால் அல்லாதுஉலகச்**
**சொப்பனமா மாயை தொலையாது - சொப்பனநோக்கு**
**உள்ள தான் ஆர்என்று உசாவும் உபாசனையே**
**விள்ளுமாறு ஆற்றும் திறம். -பாடல் 729.**

***பொருள்:*** மெய்ப்பொருளாகிய ஆன்மாவே இதயத்திலிருந்து உணர்த்தினாலன்றி உலகத் தோற்றமாகிய மகாமாயைக் கனவு அழியாது. உலகத் தோற்றமாகிய கனவைக் காணும் தான் யாரென்று விசாரிக்கும் ஆன்ம ஞான விசாரமே அந்த ஆன்மா (கடவுள்) நம் உள்ளத்திலிருந்து உண்மையை நமக்கு உணர்த்தும் அருளாகும்.

***குறிப்பு:*** ஆன்ம விசாரமே இறையருளைப் பெற ஒருவன் ஆற்ற வேண்டிய மேலான, மிக உயர்ந்த பக்தி என்பது பொருள்.

***ஒப்பு (5):***

**தனது சொரூபத்தைத் தான்அனு சந்தித்தல்**
**மனாதிகளுக்கு எட்டா மகேசன் - தனது**
**பராபக்தி என்ப பகரும் இருவோரும்**
**சொரூபத்தில் ஒன்றாத லால். - பாடல் 730.**

***பொருள்:*** தனது உண்மை சொரூபமாகிய ஆன்மாவை ('நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசத்தை) நாடி, அதைத் தியானிப்பதே மனம், வாக்கு, காயங்களுக்கு எட்டாத மகேசுவரனைத் தியானிப்பதாம் (பக்தியாம்). ஏனெனில் ஆன்மத் தியானம் செய்யும் விசாரியும், மகேசனை நாடும் பக்தனும் உள்ள பொருளாகிய 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமாகும் போது இரண்டற்ற ஏகான்ம வஸ்துவாய் ஒளிர்வதால்!

***குறிப்பு:*** விசாரி நாடும் தன்னுணர்வுப் பிரகாசமாம் ஆன்மாவும்,

*பக்தன் நாடும் மகேசனும் ஒன்றே என்பது அத்யாத்மப் பொருளாம். இதை ஸ்ரீபகவான் குருவாசகக் கோவையில் அழுந்தநந்திருத்தமாக அருளியுள்ளார்.*

***ஒப்பு:*** **ஆன்மாநு சந்தானம் அஃது பர மீசபக்தி**
**ஆன்மாவாய் ஈசன்உள ளுல். -ஸ்ரீபகவான் பாடல், 13.**

***பொருள்:*** *ஆன்மாவாக பரமேசுவரன் இருக்கின்றபடியால் ஆன்மாவை (தன்னுணர்வை) எப்பொழுதும் நாடி, அதுவே தியானமாக இருப்பதே பரமேசுவரனிடம் வைக்கப்படும் பக்தியாகும்.*

*மேலும்,* ***அனனிய பக்தி*** *(அனைத்தையும் தானுக உணர்ந்த நிலையில் செய்யப்படும் அன்னியமற்ற ஸ்வாத்ம பக்தி), நிரேதுக அல்லது* ***அஹேதுக பக்தி*** *(பிரதிபலனை எதிர்பாராத, காரணமற்ற பக்தி – motiveless devotion)****, பரபக்தி, அபின்ன பக்தி, பரிபூர்ண பக்தி*** *ஆகியவை அனைத்தும்* ***ஆன்ம ஞானம்*** *என்பதன் மறு சொற்களே (synonyms)****;*** *அனுபவத்தில் பேதமில்லை. பக்தியும் ஞானமும் ஒன்றே என்னும் இந்தப் பேருண்மையையே ஸ்ரீ பகவானின் மேற்கண்ட அனுபவாம்ருத உபதேசங்கள் வெள்ளிடை இமயமென விளக்கி நிற்கின்றன.*

*ஐந்தாம் பாடல் முற்றிற்று*

ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

## பாடல் 6

## (தைவராதர் இயற்றியது)

**ஸ்ரீமத்ரமணமஹர்ஷே: த³ர்சனம் அருணாசலஸ்ய தே³வகி³ரா |**
**பஞ்சகம் ஆர்யாகீ³தௌ ரத்னம் த்வித³ம் ஔபநிஷதம் ஹி ||**

***அருணகிரி ரமணன் ஆரியத்தில் கண்ட***
***அருமறை அந்தக் கருத்தே ஆகும் - அருணா***
***சல பஞ்சக மணியைத் தண் தமிழ் வெண்பாவால்***
***உலகுக்கு அளித்தான் உவந்து.***

***பொ–ரை:*** *அருணாசலமேயாகிய பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகள் ஆர்யாகீத விருத்தத்தில் வடிவமைத்தது வேதங்களில் அதி ரகஸ்யமாக மறைந்து விளங்கும் உட்கருத்தாகும். (அந்த உட்கருத்து ' நான்–நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே!) அந்தத் தன்னுணர்வுப் பிரகாசத்தைத் தம் அனுபவமாகப் பெற்றதால் கிளர்ந்தெழுந்த ஆனந்தப் பெருக்கால் அருணாசல பஞ்சரத்னம் என்னும் ரத்ன ஹாரத்தை, மனத்தைக் குளிர்விக்கும் இனிய தீந்தமிழ் வெண்பாக்களாகிய மலர்களால் தொகுத்து, உலகத்தவர் ஆன்மபதமுற்று உய்யும் பொருட்டு ஸ்ரீபகவான் பெருமகிழ்ச்சியொடு அருளினர்.*

***அ.ப–ரை:*** *அருணகிரிரமணன்– அருணாசலசிவமேயான ஸ்ரீரமணர்,ஆரியத்தில் கண்ட - 1) ஆர்யாகீத விருத்தத்தில் அமைத்த, 2) ஆரிய மொழியாகிய சம்ஸ்கிருதத்தில் அருளிய, அருமறை– வேதங்களின் சிகரமாகக் கருதப்படும் வேதாந்தம் (உபநிடதங்கள்), அந்தக் கருத்து -வேதாந்த ரகஸ்யமாகவும், அதி சூக்ஷ்மப் பொருளாகவும் விளங்கும் 'நான் – நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம்.*

## பஞ்சரத்னத்தின் மையக் கருத்து

*'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே பஞ்சரத்னப் பாடல்களின் மையக் கருத்தாகும். இதுவே* **உள்ளது** *(சத்து) என்று போற்றப்படுகிறது. ஸ்ரீரமணோபனிஷதம் என்று உலகம் புகழும்* **உள்ளது நாற்பது** *இந்தத் தன்னுணர்வுப் பிரகாசத்தையே பரிபூரணமாக விளக்கி நிற்கின்றது. இந்தத் தன்னுணர்வுப் பிரகாசம் ஸ்ரீபகவானின் நிரந்தர ஆன்மானுபவமே! பஞ்சரத்னப் பாடல்கள் ஐந்தும் ஸ்ரீபகவானின் தன்னுணர்வுப் பிரகாச அனுபவத்தையும், அதை ஒவ்வொரு ஜீவனும் அறிந்து கொள்வதற்கான வழிமுறையையும் வெளிப்படுத்துகின்றன.*

*'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே ஆன்மா, இறைவன், சற்குரு, இதயம், அஹம்-அஹம் ஸ்புரணம் முதலான பற்பல திருநாமங்களுடன் விளங்குகின்றது. இறைவனின் திருநாமங்களில் 'நான்-நான்' என்னும் இந்தத் திருநாமமே தொன்மையானதென்று குருவாசகக்கோவையில் ஸ்ரீபகவான் கூறியிருக்கிறார்.*

***ஒப்பு (1):***

**உள்ளம்எனும் மெய்ப்பொருள்தான் உள்ளத்தினின்று உணர்வாய்**
**மெள்ளவெளி வந்து விரியுங்கால் - உள்ளபொருட்கு**
**ஆன அபிதானம் பல்லாயிரத்துள் ஆயுங்கால்**
**நான்என்பதே முதலா நாடு.** - பாடல் 712.

***பொருள்:*** *'இதயம்' எனப்படும் மெய்ப்பொருளாம் 'நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம் மெள்ள உள்ளத்திலிருந்து வெளிவந்து பரவும்போது, அதற்கு இடப்பட்ட பற்பல பெயர்களுள் 'நான்-நான்' என்பதே தலையாயத் திருநாமம் என்பதைத் தெரிந்து கொள்வாயாக!*

***குறிப்பு:*** *அகமுக நாட்டத்தால் தன்னுணர்வுப் பிரகாசம் மேன்மேலும் நன்கு புலப்பட்டு, விரிந்து பெருகுவதை ''மெள்ள*

*வெளிவந்து உணர்வாய் (consciousness) விரியுங்கால்'' என்றார்.*

***ஒப்பு (2):*** முதன்மை உறுபெயரா முன்சொனஅவ் யானோடு
அதன்மெய்ப் பொருள்விளக்க மாக - நிதநான்
இருக்கின்றேன் என்ன இயைதலால் அந்த
இருக்கின்றேன் என்(ற)பெயரும் ஆம்.-பாடல் 713.

***பொருள்:*** *முன் பாடலில் முதற்பெயராகக் கூறப்பட்ட 'நான்-நான்' என்னும் அந்தப் பெயரொடு, அந்த 'நான்-நான்' என்னும் இருப்புணர்வின் விளக்கமாக 'இருக்கின்றேன்' என்று எப்பொழுதும் அந்த உள்ள பொருள் (ஆன்மா) இயல்வதால் 'இருக்கின்றேன்' என்னும் பெயரும் அந்த மெய்ப்பொருளுக்கு முதற்பெயராக மிகப் பொருந்துவதே!*

***ஒப்பு (3):***

இந்தப்பேர் போல் ஆயிரக்கணக்காம் பல்பெயருள்
எந்தப்பேரும் உண்மை ஏற்புடைத்தாய்ச் - சிந்தை
கழிய உளம்சேர் கடவுட்கு மெய்ம்மை
அழகு பெறஅமைந்தது அன்று. - பாடல் 714.

***பொருள்:*** *ஆயிரக் கணக்கான திருநாமங்களுள் எண்ணங்களற்று இதயத்தில் விளங்கும் இறைவனுக்கு இந்த 'நான்-நான்' என்னும் பெயர்போல் வேறு எந்தத் திருநாமமும் அழகுற அமைந்ததில்லை.*

***ஒப்பு (4):*** அகமுகநாட் டத்தோர்க்கு அறிபடும்யா வற்றும்
அகமுகம்என்ற ஆண்டான் பெயரே - அகந்தைஅழி
வானஇத யாகாயத்து ஆர்ந்து முழங்குமே
மோனபரா வாக்காய் முனைந்து. -பாடல் 715.

***பொருள்:*** *'அஹம் அஹம் (நான்-நான்)' என்னும் திருநாமமே ஆண்டவனின் திருநாமங்களாக அகமுக நாட்டமுடையோரால் அறிப்படும் திருநாமங்கள் அனைத்திலும் முதன்மைப் பெயராக, அகந்தை கரைந்தொழிந்த இதயாகாசத்தில் நிறைந்து, மோன பராவாக்காக ஸ்புரித்து முழங்கும்.*

***ஒப்பு (5):*** நான்என்று உரைக்கும் நவிற்சிக்கு நேர்பொருளாம்
ஊன்உயிர்தான் தோன்றி ஒடுங்கலால் - ஊன்உயிர்க்கு

ஆர்ந்தஅதிட் டானமாம் ஆன்மாவே ஆயும்கால்
தீர்ந்த பொருளாகத் தெளி. -பாடல் 717.

**பொருள்:** *தேகத்தை 'நான்' என்று அபிமானிக்கும் அகந்தை மனம் தோன்றி, அழிவதால், நன்கு ஆராய்ந்து பார்க்கும்போது, 'நான்' என்னும் சொல்லிற்கு அது பொருள் ஆகாது. மாருக, அந்த அகந்தைக்கு அஸ்திவாரமாக (மூலமாக) விளங்கும் ஆன்மாவே மிகச் சரியான நேர் பொருளாக (முடிந்த முடிவான பொருளாக) விளங்குகின்றதென்பதை அறிந்து தெளிவாயாக!*

**குறிப்பு:** *'நானெனும் சொற்பொருளாமது நாளுமே*
*நானற்ற தூக்கத்தும் உந்தீபற*
*நமதின்மை நீக்கத்தால் உந்தீபற.*

*-உபதேச உந்தியார், 21*

*என்னும் பாடல் இங்கு வாசித்துணரத்தக்கது.*

*'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே ஆன்மா, பிரம்மம், கடவுள், முக்தி, மோக்ஷம், பேரறிவு, பேருணர்வு, கைவல்யம், ஞானம், சொரூபம், விபூதி, அருள், குரு, அன்பு, அமைதி, சத்து, சித்து, ஆனந்தம், கடவுளறிவு, வாலறிவு, பிரஹ்மஞானம், ஆத்மஞானம், சாந்தி, இதயம், ஈசுவரன், மஹாவிஷ்ணு, பராசக்தி, விநாயகர், முருகப்பெருமான், ஸ்ரீகிருஷ்ணர், ஸ்ரீராமபிரான், அருணுசலம், அல்லா, இயேசு கிறிஸ்து, பரமபிதா, யஹோவா போன்ற கணக்கற்ற பற்பல பெயர்களில் அழைக்கப்படுகின்றது. சுருங்கக் கூறின், இதுவே அனைத்து மதங்களிலும் கடவுளாகக் கூறப்படுகின்றது. யூத மதத்தின் கடவுள் 'யஹோவா' என்பர். இதன் பொருள் 'நான் என்னும் நான்' (I am that I am -Exodus III.3) என்பதே. இயேசு கிறிஸ்துவும் ''அகமுகப்பட்டு எண்ணங்களற்ற அமைதியில் பார்; 'நான்' என்பதே கடவுள் என்பதை அறிவாய் (Be still and know that 'I am' is God)'' என்று கூறுகிருர். தன்னுணர்வுப் பிரகாசமாகத் தன்னை அவர் தேர்ந்ததால், அவர் தம் தகப்பனுர் என்று சுட்டிக் காட்டும் பரமண்டலத்திலிருக்கும் பரமபிதாவும் தாமும் ஒருவரே (I and my father are one and same - St. John X.30) என்று கூறியுள்ளார்.*

''கடவுளின் சாம்ராஜ்யம் உனக்குள்ளே இருக்கின்றது –(Kingdom of God is within you -Luke 17:21)'' என்பதும் அவர் கூற்றே!

இஸ்லாம் மதத்தில் அல்லாவின் சொரூபம் ''அனல் ஹக்'' அதாவது ''நானே கடவுள் (I am God)'' என்று ''ஸுபி (Sufi)'' பிரிவைச் சேர்ந்த ஹுசேன் மன்சூர் அல்ஹலாஜ் என்னும் மதகுருவால் வெளிப்படுத்தப்பட்டது. அதாவது, 'நான்-நான் என்னும் தன்னுணர்வே' கடவுளின் சொரூபம் என்பது பொருளாகும். இந்த மதகுரு இவ்வாறு 'நானே கடவுள்' என்று கூறியதற்காக சாக்ரடீஸைப்போல் மரண தண்டனை விதிக்கப்பட்டு இறந்தாரென்றாலும், இன்று ஸுபி பிரிவிற்கு 'அனல் ஹக்' என்னும் கொள்கையை வகுத்துக் கொடுத்த மாபெரும் மதத்தலைவராக மதிக்கப்படுகிறார். ஜீவனாகிய தாமும், பரம்பொருளாகிய இறைவனும் நான்-நான் என்னும் தன்னுணர்வே என்பது இவருடைய கோட்பாடு; அந்த கோட்பாடே அவருடைய நேரடி அனுபவமும் ஆகும். இதையே ஸ்ரீபகவான் உபதேச உந்தியாரில் அருளியுள்ளார்.

***ஒப்பு (1):*** **இருக்கும் இயற்கையால் ஈச ஜீவர்கள்**
**ஒரு பொருளே ஆவர் உந்தீபற**
**உபாதி உணர்வே வேறுஉந்தீபற**

***ஒப்பு (2):*** **தன்னை உபாதிவிட்டு ஓர்வது தான்ஈசன்**
**தன்னை உணர்வதாம் உந்தீபற**
**தானாய் ஒளிர்வதால் உந்தீபற**

–உபசேத உந்தியார், 25, 26.

பார்ஸி மதத்தில் இறைவன் நெருப்பு வடிவமாக வணங்கப்படுகிறார். எனவே பகவானின் பார்ஸி மதத்தைச் சேர்ந்த அன்பர்கள் அக்னி ஸ்தம்பமாக நின்ற அருணாசலத்தையும், அருணாசலமே மனித வடிவில் தோன்றிய ஸ்ரீபகவானையும் வழிபடுவதால் தாம் தங்கள் மத இறைவனையே வழிபடுவதாக மகிழ்கின்றனர். உண்மையில் பார்ஸி மதத்திலும் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே அவர்களின் நெருப்புக் கடவுளாகத் திகழ்கின்றது.

அதுபோலவே வேத மதத்தில் நெருப்புக் கடவுளாக விளங்குபவர் ஸ்ரீமுருகப் பெருமானே! ஏனெனில் அவர் சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து ஜோதி சொரூபமாக வெளிப்பட்டாரென்று ஸ்காந்தம் கூறுகின்றது.

வேதமதத்தில் மற்றொரு பெருங் கடவுளான ஐயப்ப ஸ்வாமி சபரிமலையில் பொன்னம்பலமேட்டில் வருடந்தோறும் தம் சொரூபமாக பக்தர்களுக்குக் காட்டிக் கொடுப்பது ஜோதி சொரூபத்தையே! நாம, ரூபங்களோடு கூடிய வடிவத்தை அவர் காண்பிப்பதில்லை. மகர சங்கரந்தி அன்று அவர் ஜோதி வடிவத்தில் தோன்றுவதால் இது 'மகர ஜோதி' என்று வழங்கபடலாயிற்று. இவ்வாறு ஜோதி வடிவில் தோன்றுவதன் மூலம் ஐயப்ப ஸ்வாமி தம் சொரூபம் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ஜோதிப் பிரகாசமேயென்று கூறாமல் கூறுகிறார்.

அரசுக் கட்டிலைத் துறந்து, சுகமான இல்லற வாழ்க்கையைத் துறந்து, வீட்டைத் துறந்து, நாடு, நாடாகத் திரிந்த புத்த பகவான் இறுதியில் போதி மரத்தடியில் கடவுளைக் கண்டது தன்னுள் அகமுகப்பட்டாழ்ந்து 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசத்தைத் தரிசனம் செய்த பின்பே! எனவே அனைத்து மதங்களிலும் இந்த 'நான்-நான்' ஒன்றே அந்தந்த மதங்களில் கடவுளாக விளங்குகின்றது.

இந்த அஹமஹம் ஸ்புரணம் அல்லது நான்-நான் என்னும் தன்னுணர்வுப் பிரகாசம் பேருணர்வு (Consciousness) என்றும் கூறுப்படுகிறது. 'பிரஜ்ஞானம் பிரம்ம (Consciousness is Brahman)' என்னும் வேத மஹாவாக்கியம் 'நான்-நான்' என்னும் பேருணர்வே பிரம்மம் என்கிறது.

**இவையனைத்திற்கும் கட்டியம் கூறுவதுபோல், ஸ்ரீபகவான் தம்மை ஜோதிஸ்வரூபராகவே உலகில் அவதரித்தபோதும், பின்பு நம்மிடமிருந்து உடலால் விடைபெற்றுக் கொண்டபோதும் வெளிப்படுத்தியிருக்கிறார். அவர் அவதரித்தபோது கண் தெரியாத மூதாட்டி ஜோதி தரிசனம் செய்தரென்பது பிரசித்தம்! அதுபோலவே, அவர்**

***மானிடவேடத்தைக் களைந்தபோது, ஆகாயத்தில் ஒரு ஜோதி எழும்பி, மெல்ல மெல்ல மேலே சென்று அருணாசலமலையின் முகட்டில் ஒன்று கலந்ததை டெல்லி முதல் கன்னியாகுமரி வரை அடியவர் தரிசித்தனர். மறுநாள் ஹிந்து பத்திரிக்கையிலும் இந்த விவரம் வெளிவந்தது. ஸ்ரீபகவான், தம் வாழ்க்கை வரலாற்றில் ''நானும் அருணாசலமும் நான்-நான் என்னும் ஜோதிப் பிரகாசமே'' என்று கூறுமல் கூறிய இந்த நிகழ்ச்சி மிக மிகப் பிரசித்தமானதாகும்.***

*இவ்வாறு ஒவ்வொரு ஜீவருள்ளும் ஒளிர்கின்ற இந்தத் தன்னுணர்வுப் பிரகாசம் ஒன்றையே மீண்டும் மீண்டும் ஐந்து பாடல்களிலும் அருணாசலமாக ஸ்ரீபகவான் போற்றுகின்றார். 'அருள் நிறைவு' என்றும், அது பேரின்ப 'அமுதக் கடல்' என்றும் எடுத்த எடுப்பிலேயே அதன் அளப்பரிய பெருமைகளை முதற்பாட்டில், முதல் வரியிலேயே விளக்கி பஞ்சரத்னத்தைத் துவங்குகிறார். அருள் நிறைவாகத் திகழ்வதால், அது ''விரிகதிரால் யாவும் விழுங்கும் அருணகிரிப் பரமான்மா'' என்றார்.*

*மேலும் 'அஹம்-அஹம் (நான்-நான்)' என்று ஸதா ஸ்புரித்துக் கொண்டேயிருப்பதால் இரண்டாம் திருப்பாட்டில்* ***'நான் என்று இதயம் நடித்திடுவையால்'*** *என்றார்.*

*அகமுகப்பட்டு கவனத்தை அதன்மீது திருப்பும்போது, அதன் 'அருள் நிறைவு' நன்கு உணரப்படுவதால்* ***'நன்கறிந்து'*** *என்றும், அதனால் அகந்தை மனம் தன்னிச்சையாகவே அதில் கரைந்தொழிவதை* ***'முந்நீர் நதி போலும் ஓயுமே'*** *என்றும் மூன்றும் திருப்பாட்டில் குறித்தார்.*

*வெளிவிஷயங்கள் அனைத்தையும் அகமுக தன்னாட்டத்தால் தவிர்த்துத் தன்னுணர்வுப் பிரகாசத்தைத்* ***தியானிப்பது*** *அகந்தை மனம் எங்கிருந்து எழுகின்றதென்று செய்யப்படும்* ***ஆத்மவிசாரமே!*** *உண்மையில் இரண்டும் ஒன்றே! ''அகம் இதுதான் எங்கெழும் என்று ஆராய்ந்தே (மூன்றும் திருப்பாட்டு) அகவுருவை நன்கறிந்து, 'நான்-நான்' என்னும் தன்னொளியைக் காண்பதே உளமதனில் அருணாசலனைத் தியானித்து யோகி ஒளி காண்பதாகும்*

(நான்காம் திருப்பாட்டு). இதற்கு ஆரம்ப சாதக காலத்தில் பிராணுயாமம் அகமுகநாட்டத்தை திடப்படுத்தவும், புறமுக நாட்டத்தைத் தவிர்க்கவும் உதவியாக இருக்குமென்ற அப்யாஸ உளவினைக் கூற 'வளியடக்க நிற்கும் மனத்தால்' என்று நான்காம் திருப்பாட்டில் அறிவுறுத்தினுர். ஆனுல் சாதகத்தின் இலக்கு பிராணுயாமம் அல்ல; மாருக, 'நான்-நான்' என்னும் தன்னுணர்வு ப்ரகாசத்தை உணர்வதேயாகும். இதுவே ராஜயோகத்தின் இறுதி முடிவாகிய 'சாயுஜ்யம்', அதாவது, தியானத்தின் லக்ஷியமாகிய இஷ்ட தெய்வத்தோடு ஒன்று கலத்தல் ஆகும்; இதுவே யோகி ஒளியைக் காணுதல் என்றுக் கூறி, இராஜ, ஞான யோகங்களின் முடிவு அனுபவத்தால் ஒன்றேயென்று நான்காம் திருப்பாட்டில் விளக்குகிருர்.

ஐந்தாம் பாட்டிலும் 'உன்னிடத்தில் ஒப்படைத்த உள்ளத்தால்' என்று அகந்தையின் அழிவைக் கூறி, தூய பக்தியின் விளைவால் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே எஞ்சி நிற்பதைக் கூறுகிருர். எனவே பஞ்சரத்னத்தில் ஐந்து பாடல்களிலும் 'நான்-நான்' என்னும் தன்னொளியே முதல், இடை, ஈருக அனைத்து வரிகளிலும் ஸ்ரீபகவானின் சுவாநுபூதியாக வெளிப்படுகிறது; முன்னம் குறித்தபடி பஞ்சரத்னப் பாடல்களின் மையக் கருத்தாகப் பிரகாசிக்கின்றது.

ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

## பஞ்சரத்னப் பாடல்களில் அமைந்துள்ள கருத்துத் தொடர்பு

அருணாசலமே எப்பொழுதும் 'நான்-நான்' என்று ஸ்புரித்துக் கொண்டிருக்கும் பரமாத்ம வஸ்து (நானென்று இதய நடித்திடுவையால்)- பாடல் 2.

உலகத் தோற்றம் அதில் தோன்றி, நின்று, மறையும் வெறும் கனத் தோற்றமே (நின்பாலே தோன்றி நின்றே ஒடுங்கிடுமால்)- பாடல் 2.

இந்த உலகத் தோற்றம் இதயத்திலிருக்கும் பரமாத்ம வஸ்துவை மறைப்பதால் புறப் பொருள்களைக் கைவிட வேண்டும் - பாடல் 4.

வெளிமுக நோக்கு உலகாதி விஷயங்களில் பற்றுக்களை ஏற்படுத்தி, மனத்தூய்மையை நாசம் செய்கிறது. எனவே புறமுகப் படுதலை விட்டு மனத்தை அகமுகப்படுத்த வேண்டும் (அகமுகமார்ந்த அமலமதி தன்னால்) -பாடல் 3.

அதாவது, இதயத்தில் பிரகாசிக்கும் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வைத் தியானிக்க வேண்டும் (உளமதனில் உன்னைத் தியானித்து) -பாடல் 4.

இவ்வாறு அகமுகப்படுவதால் தன்னுணர்வுப் பிரகாசத்தை நன்கு அறியலாம்(நன்கறிந்து) - பாடல் 3.

நன்கு அறிவதன் மூலம், நதி கடலில் கலப்பதுபோல் அகந்தை மனம் தன்னுணர்வுப் பிரகாசத்தில் கரைந்து போகும் (முந்நீர் நதிபோலும் ஓயுமே) - பாடல் 3.

இதுவே அருணாசலனிடம் உள்ளத்தை ஒப்படைப்பதுவுமாகும் - பாடல் 5.

அகந்தை அழிவில் அருணாசலனின் 'அருள் நிறைவு'

*உணரப்படும். அந்த அருள் நிறைவால் உலகத் தோற்றம் விழுங்கப்படும் (- பாடல் 1).*

*இதுநாள்வரை அனைத்துமாகக் காணப்பட்டது அன்னியமின்றி எல்லாம் தானாகத் தோன்றும் (அன்னியமில்) -பாடல் 5.*

*தானனைத் தன்னை பலவாகப் பார்ப்பதினாலே துன்பம் ஏற்படுகின்றது. தானன்றி வேறெதுவுமில்லை என்பது அனுபவமாகும் போது துன்பம் மறைந்து, தன் இருப்புணர்வாகிய இன்பம் புலப்படுகிறது.*

*'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம் பெருகப்பெருக, இந்த இன்பமும் மேன்மேலும் பெருகிக் கொண்டே போகிறது. உண்மையில் சத்தாகிய இருப்புணர்வும், சித்தாகிய ஆன்மப் பிரகாசமும், ஆனந்தமும் ஒன்றே! ஆகவே ஆன்மானுபவத்தின் இறுதியில் எஞ்சி நிற்பது பரிபூரண ஆனந்த ஸாகரமே! (இன்புருவாம் உன்னில் ஆழ்ந்தே)-பாடல் 5.*

*எஞ்சி நிற்கும் பரிபூரண ஆனந்த ஸாகரம் இருவேறின்றி ஏக வஸ்துவாய் எங்கும் நிறைந்துள்ள பரப்பிரம்மமே (ஆன்மாவே); இதுவே* **பூரணப்பொருள்** *என்று குருவாசகக்கோவையில் ஸ்ரீபகவான் அருளியுள்ளார்.*

***ஒப்பு:*** பூரணமே யாம்அதுவும் பூரணமே யாம்இதுவும்
பூரணத்தோ டும்புணர்ந்தும் பூரணம்அப் – பூரணமே
பூரணத்தி னின்றுபரி பூரணமே போயினும்அப்
பூரணமே மிஞ்சுவ தாம். –பாடல் 888.

***பொருள்:*** *அதுவும் (அந்த பிரம்மமும்) பூரணம்; இதுவும் (ஜீவனும், உலகத் தோற்றமும்) பூரணம்; இந்த இரண்டும் ஒன்று கலந்த பின்னும் பூரணம்; மாறாக ஜீவனும், அவனால் உருவாக்கப்படும் உலகத் தோற்றமும் பிரம்மத்திலிருந்து பூரணமாகப் பிரிந்து சென்றாலும் எஞ்சி நிற்பது பூரணமே!*

*மேற்கண்ட பாடல் ஈசாவாஸ்யஉபநிஷத்தில் பிரம்மத்தின் இலக்ஷணத்தை விவரிக்கும் மிகப் பிரசித்தமான ஸ்லோகத்தின் மொழி பெயர்ப்பாகும்.*

***ஒப்பு (2):*** பூர்ணமத: பூர்ணமிதம் பூர்ணாத் பூர்ணமுதச்யதே |
பூர்ணஸ்ய பூர்ணமாதாய பூர்ணமேவா வசிஷ்யதே ||

*ஆக, பிரம்மத்தின் (ஆன்மாவின், அதாவது, 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசத்தின்) அருள் நிறைவு (பூரணம்) ஆன்ம லக்ஷணமாக நிலைநாட்டப்படுகிறது.*

*பூரணத்தைப் பற்றிப் பேசும்போது, அது ஸ்ரீ பகவானோடு சம்பந்தப்பட்ட ஒரு நிகழ்ச்சி உண்டு. ஸ்ரீபகவான் சமையற்கட்டிற்குச் சென்று தானும் அங்கிருப்பவர்களோடு பணிபுரிவது வழக்கம். ஒருமுறை விநாயக சதுர்த்திக்காக கொழுக்கட்டை தயாரிப்பில் சாந்தம்மா, சங்கரம்மா, லோகம்மா, சம்பூர்ணம்மா மற்றும் சிலர் ஈடுபட்டிருந்தனர். ''ஒருவர்: பூர்ணம் கொஞ்சமாக இருக்கு; மற்றொருவர்: எனக்கும் பூர்ணம் இல்லை; பின்னுமொருவர்: உன்னிடம் பூர்ணம் நிறைய உள்ளது'' என்றெல்லாம் பேசியபடியிருந்ததை ஸ்ரீபகவான் கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார். ''நீங்கள் எல்லாம் பூர்ணம் கொஞ்சம், அதிகம் என்று பலவாறு கூறினாலும் பூர்ணம் எப்பொழுதும் பூர்ணமாகத்தான் இருக்கின்றது. இதுதான் என்றும் மாறாமல் உள்ள பூர்ண வஸ்துவின் லக்ஷணம்'' என்று கூறினார். ஸ்ரீபகவான் ஆன்ம நிலையிலிருந்து நழுவாத ஸ்தித பிரக்ஞராகத் திகழ்வதால் அவரால் இவ்வாறு பேசமுடிகிறது; மிகப்பெரிய வேதாந்தத் தத்துவத்தை படிப்பறிவில்லா பாமர மக்களும் புரிந்து கொள்ள முடிகிறது என்று வியந்து போகிறார் ஸ்ரீமதி T.R. கனகம்மா. அவர் எழுதிய 'நினைவில் நிறைந்தவை' நூலில் பக்கம் 206-ல் (முதற்பதிப்பு) இந்த விவரத்தைக் காணலாம்.*

## உலகின் பொய்மையும் ஸ்ரீபகவானின் சுவானுபூதி மகத்துவமும்

*பஞ்சரத்னத்தில் முதல் இரண்டு பாடல்களிலும் உலகின் பொய்மையை 'உலகம்' என்னும் சொல்லையும் தவிர்த்து, மிக மென்மையாக (in a subtle manner) ஸ்ரீபகவான் சுட்டிக்காட்டியுள்ள விதம் அவருடைய சுவானுபூதி மகத்துவத்திற்கோர் எடுத்துக்காட்டு; அறிவிற்கு விருந்து; உலகப் பற்றினை அழித்து, ஆன்மப் பற்றினைப் பெருக்க முயலும் மெய்யன்பர்களுக்கு உதவும், இன்பம் பயக்கும் மருந்து!*

*முதற்பாடலில் தமிழ் மொழிபெயர்ப்பில் 'விரிகதிரால் யாவும் விழுங்கும்' என்று கூறியுள்ளதை மூலநூலில் 'கபலிதகன விஸ்வரூப கிரணாவல்யா' என்று விரித்துரைத்துள்ளார்.* ***கபலிதம்*****,** ***கனம்*** *ஆகிய சொற்களுக்கு இணையாகத் தமிழ் மொழிபெயர்ப்பில் சொற்கள் காணப்படவில்லை.*

***உலகம்*** *என்ற சொல் மூலத்திலும், மொழிபெயர்ப்பிலும் இடம்பெறவில்லை; அதற்கு பதிலாக (*in substitution*), வடமொழியில்* ***'விஸ்வரூபம்'****; தமிழில்* ***'யாவும்'*** *என்னும் சொற்கள் உள்ளன.* ***'கிரணாவல்யா'*** *தமிழில் உள்ளபடியே* ***'விரிகதிரால்'*** *என்றுக் காணப்படுகிறது.*

***'விழுங்கும்'*** *என்பது சாதாரணமாகத் (*as a matter of fact*) தமிழில் கூறப்பட்டுள்ளது. ஆனால் வடமொழியில்* ***'கபலிதம்'*** *என்று சற்று விரிவாக, மிக அழுத்தமாகக் காணப்படுகிறது.* ***'கபலிதம்'*** *என்றால் 'ஒரு வாய்க் கவளம்' (*a mere mouthful*) என்பது பொருளாகும். 'கபளீகரம்' எனப்படுவதும் இதுவேயாகும். அருணாசலம் தன்னுடைய விரிகதிரால் விழுங்குவது சாதாரண வஸ்து அல்ல; செறிந்த (*dense*), அடர்த்தியான (*impenetrable*),*

*புலன்களால் உறுதியாக (concrete) அறிபடுவதாகிய (tangible)* ***'கனம்'*** *பொருந்திய* **உலகம்** *ஆகும். இந்த கன விஸ்வரூப உலகத்தை ஒருவாய்க் கவளமாக (a mere morsel) அனுயாஸமாக விழுங்கிவிடும் ஆன்மப் பிரகாசமே 'அருணுசலம்' என்று உலகின் பொய்மையை எடுத்துரைக்கிறுர் ஸ்ரீ பகவான். இந்த உண்மை இந்நூலில் குருவாசக்கோவை பாடல் (595) மூலம் பக்கம் 21-ல் விளக்கப்பட்டுள்ளது.*

*முதற்பாட்டில் உள்ளதுபோலவே, இரண்டாம் பாடலிலும் 'உலகம்'* ***'சித்திரமாம் இஃதெல்லாம்'*** *என்றே குறிக்கப்பட்டுள்ளது.* ***'சித்திரமாம்' என்றதிஞல் உலகத்தோற்றம் அநித்ய ஓவியமென்பதும், அந்த ஓவியத்தைத் தாங்கி நிற்கும் ஆதாரத் திரைச்சீலையாகிய அருணுசல ஆன்ம வஸ்துவே நித்ய வஸ்து என்பதும் வெளிப்படை. 'யாவும்'*** *(பாடல் ஒன்று),* ***'இஃதெல்லாம்'*** *(பாடல் இரண்டு) என்னும் சொற்கள் கண்ணுல் காணவியலாத, பிரம்மாண்டமான கனவிஸ்வரூப உலகத்தை, அதாவது பிரபஞ்சத்தைக் (universe) குறித்தே நிற்கின்றன; கண்ணெதிரே தோன்றுகின்ற இந்த உலகத்தை மட்டுமன்று.*

*எனவே அண்டாண்ட கோடி சராசரங்களே உள்ளடக்கிய பிரபஞ்சத்திற்குத் தனிப்பட்டதோர் உண்மை இருப்பைத் தர அறவே மறுத்தவராய், தம் அகண்ட, அத்துவித, நிரதிசய, ஸகஜ நிஷ்ட ஸ்வரூபானந்த அனுபவ பாத்தியதையால் 'உலகத்தை' வாங்மாத்திரம் கூடத் (அதாவது, பேச்சளவிலும்கூட) தவிர்த்து, 'உலகம்' அகந்தை மனக் கற்பனையால் உருவாக்கப்படும் ஒரு கனுத்தோற்றமே என்பதை வலியுறுத்தும் ஸ்ரீபகவானின் சுவானுபூதி மகத்துவம் மகோன்னதமானது!*

## பஞ்சரத்னமும் காயத்ரி மந்திரமும்

*ஜெபிக்கத்தக்க மந்திரங்களுள் தலை சிறந்ததாகக் கருதப்படுவது காயத்ரி மந்திரமே! ஸ்ரீபகவான் ஒரு அன்பருக்கு 'அதைவிட சிறந்த மந்திரமில்லை' என்று கூறியுள்ளார். இதற்குக் காரணம் காயத்ரி மந்திரம் ஜெபிப்பவர் கவனத்தை உள்நோக்கி அவருள் ஒளிரும் தன்னுணர்வுப் பிரகாசத்திற்குத் திருப்புவதினாலேயேயாகும்.*

## காயத்ரி மந்திரமும், அதன் பொருளும்

*ஓம் பூ$^4$ர் பு$^4$வ ஸ்வ: தத் ஸவிதுர் வரேண்யம்*
*ப$^4$ர்க்கோ தே$^3$வஸ்ய தீ$^4$மஹி*
*தி$^4$யோயோந: பிரசோத$^3$யாத்*

***ப-ரை:*** *ஓம்* - *பிரணவ மந்திரம்*

*பூர்* - *பூலோகம்*

*புவ* - *ஆகாயம்*

*ஸ்வ:* - *மேல்லோகம் (சுவர்க்கம்)*

*தத்* - *அந்த*

*ஸவிதுர்* - *தெய்விக ஒளி (Self-luminous Divine Light நான்-நான் என்னும் தன்னொளிப் பிரகாசம்)*

*வரேண்யம்* - *மிகச் சிறந்தது (Best of the best)*

*பர்க்கோ* - *பரிசுத்தமானதும், பரிசுத்தப்படுத்துவதும் (Pure & Purifier of all our imperfections)*

*தேவஸ்ய* - *(அத்தகைய) ஆத்ம தேவனை*

*தீமஹி* - *தியானிக்கிறேன்*

*தியோயோந: பிரசோதயாத்* - *அவர் என்னை முழுவதுமாக வழி நடத்திச் செல்வாராக (ந:-முழுவதுமாக, without exclusions).*

***பொ–ரை:*** *பூலோகம், சுவர்க்கம் முதலான அனைத்து லோகங்களிலும் எந்த ஸ்வயம்பிரகாச, ஆன்ம ஒளி ('நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம்) மிக, மிகச் சிறந்ததாக விளங்குகின்றதோ, தான் பரிசுத்தமாகத் திகழ்வதொடு, தன்னைச் சார்ந்தவரையும் பரிசுத்தப் படுத்துகின்றதோ, அந்த ஆத்ம தேவனைத் தியானிக்கிறேன். அவர் என்னை முழுவதுமாக வழி நடத்திச் செல்வாராக!*

***வி–ரை:*** *ஜபிப்பவரின் கவனத்தை ஒவ்வொரு ஜீவராசியினுள்ளும் சதா ஒளிரும் 'நான்- நான்' என்னும் தன்னுணர்வு பிரகாசத்திற்குத் திருப்புவதே காயத்ரி மந்திரத்தின் நோக்கமும் பயனும் ஆகும். ஏனெனில் 'நான்-நான் ' என்று எப்பொழுதும் கருதிக்கொண்டிருப்பதே சாதகரை ஆன்ம பதத்தில் கொண்டு போய்ச் சேர்த்து விடும். காயத்ரி மந்திரத்தின் இந்தத் தனிப்பெரும் சிறப்பை ஸ்ரீ பகவான் நாஞர் அருண்மொழித் தொகுப்பில் வசனநடையிலும், குருவாசகக் கோவையில் செய்யுள் நடையிலும் நவின்றுள்ளார்.*

***ஒப்பு: (1)*** **"நான் என்கிற நினைவு தேகத்தில் முதலில் எந்த இடத்தில் தோன்றுகின்தென்று விசாரித்தால் ஹ்ருதயத்திலென்று தெரியவரும். அதுவே மனதின் பிறப்பிடம். நான்-நான் என்று கருதிக் கொண்டிருந்தாலும்கூட அவ்விடத்தில் கொண்டுபோய் விட்டுவிடும்." – நாஞர் அருண்மொழித் தொகுப்பு.**

***ஒப்பு (2):*** **நான் எனஅகத்து நாட்டமாய் அப்பேரை**
**ஆனது அனுசந்தித் தாலுமே – ஊனர்**
**கருவகந்தை மாயக் கருத்துஉதிக்கு(ம்) மூலத்து**
**ஒருவனைக்கொண்டு உய்த்து விடும்.**

**–குருவாசகக் கோவை, 716.**

*'ஸவிதுர்' என்பது இங்கே ஆன்ம சூரியனைக் குறிக்கின்றது. சூரிய பகவானை அல்ல. ஸவிதா என்பது சூரிய பகவானின் திருநாமங்களில் ஒன்று. நாம, ரூபமற்ற தன்னுணர்வுப் பிரகாசத்தை ஆன்மதேவனாக உருவகப்படுத்துவது மரபாகும். எந்த ஒரு மந்திரத்தையும் ஜபிக்கு முன்னர், அதை இயற்றிய ரிஷி, அதன் சந்தஸ், அதற்குரிய தேவதையை மனதில் தியானிப்பது சாலச்*

சிறந்ததாகும். இந்தப் பழமையான மரபை ஒட்டி காயத்ரி ஆவாஹன மந்திரம் கூறுவது:

''ஸாவித்ரியா ரிஷி: விஸ்வாமித்ர: (காயத்ரி மந்திரத்தை இயற்றியவர்) நிச்ருத் காயத்ரி சந்த: ஸவிதா தேவதா (ஆன்ம சூரியனே தேவதை)''.

இங்கே ஆன்ம சூரியனாக விளங்கும் 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே 'ஸவிதா' என்று குறிக்கப்பட்டு, காயத்ரி மந்திரத்திற்குரிய தேவதையாக உருவகப்படுத்தப்பட்டுள்ளது. காயத்ரி தேவி, காயத்ரி மந்திரத்திற்குரிய தெய்வமாக குறிக்கப் படாதது கவனிக்கத் தக்கது. நாம ரூபங்களற்ற ஆன்ம வஸ்துவே தியானிக்கப்படவேண்டியது என்பது அத்யாத்மப் பொருளாம்.

ஸ்ரீபகவானும் ஆதி சங்கரரின் விவேகசூடாமணியைத் தமிழில் மொழிபெயர்க்குபோது அதன் மங்கல வெண்பாவில் ஆன்ம சூரியனை 'ஆன்மதேவனாக' உருவகப்படுத்தியுள்ளார்.

***ஒப்பு:*** அகமெனும் மூல அவித்தை அகன்றிட
அகமக மாக அல்லும் பகலற
அகம்ஒளிர் ***ஆத்ம தேவன்*** பதத்தினில்
அகமகிழ் வாக அனிசம் ரமிக்கவே.

***பொ-ரை:*** அகந்தை என்னும் மூல அறியாமை அகலவும், 'நான்-நான்' (அகமகம்) என்னும் தன்னுணர்வுப் பிரகாசமாக, இரவு-பகல் என்னாதபடி, இதயத்தில் ஒளிர்ந்து கொண்டிருக்கும் ஆன்மதேவன் திருவடிகளில் 'அகம்' பதார்த்தமான இருப்புணர்வு (ஆன்மா) எப்பொழுதும் ரமித்து, இன்புறுவதாக!

***அ.ப-ரை:*** அல்லும்-இரவும், அனிசம்-எப்பொழுதும், அகம்-1) அகந்தை, 2)இதயம், 3) ஆன்மா, அகமகம் - நான்-நான்.

எனவே காயத்ரி மந்திரத்தின் உட்பொருளாக விளங்குவது 'நான்-நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே! அதனாலேயே மந்திரங்கள் அனைத்திலும் அதுவே மிக உயர்ந்ததாகப் போற்றப்படுகிறது.

இறுதியாக, பஞ்சரத்னத் திருப்பாடல்களின் இலக்ஷியம், இறுதிமுடிவு, அடையப்பட வேண்டிய பரமகதி, முடிந்தமுடிவான இடம் (பரந்தாமம்) ஆகிய அனைத்தும் 'நான்-நான்' என்று ஒவ்வொரு ஜீவராசியினுள்ளும் இருட்டிலும் ஒளிரும் தன்னுணர்வுப் பிரகாசமே!

ஆகவே ஆன்மிக நாட்டம் வாய்க்கப்பெற்ற மெய்யன்பர்கள் புறமுகப்படுதலைத் தவிர்த்து, தன்னாட்டத்தில் ஊக்கமுள்ளோராய், அகமுகப்பட்டு தன்னுணர்வுத் தன்னொளியில் கவனத்தைச் செலுத்தி, முந்நீர் நதிபோல் தம் அகந்தை மனம் கரைந்தொழிய அகஉருவை நன்கறிந்து, அந்த அருணாசல ஆன்ம சூரியனில் ஒன்று கலந்து,

''நான்என்னும் சொற்பொருளை நாடி இதயத் தடத்து
நான்கெட நன்காடி நயவேலோர் எம்பாவாய்''

-ஸ்ரீரமண சந்நிதிமுறை, 1474

என்னும் ஸ்ரீ முருகனார் ஸ்வாமிகள் வாக்கிற்கிணங்க, அருணாசல ஆன்மப் பேரின்பத்தை எப்பொழுதும் துய்த்தவாறு ஸ்ரீபகவானருளால் நிரந்தர சுகமுற்றுய்வராக!

*திங்கள் சூடி திருவருணை ரமணேசர் திருத்தாள் வாழி!*
*அவரருளிய அருணாசல பஞ்சரத்னம் வாழி! வாழி!!*
*பஞ்சரத்னத்தில் பொங்கிப் பெருகும்*
*பரமானந்தத்தைப் பருக வல்லார் நீடூழி வாழி!!!*

ஓம் ஸ்ரீரமணார்ப்பணமஸ்து.

# ஸ்ரீ அருணாசல பஞ்ச ரத்னம்

### (ஆர்யாகீத விருத்தம்)

*கருணாபூர்ணஸுதா4ப்3தே4 கப3லிதக4னவிஶ்வரூப*
*கிரணாவல்யா |*
*அருணாசலபரமாத்மன் அருணோ ப4வ*
*சித்தகஞ்ஜஸுவிகாஸாய || 1*

*த்வய்யருணாசல ஸர்வம் பூ4த்வா ஸ்தி2த்வா*
*ப்ரலீனமேதச்சித்ரம் |*
*ஹ்ருத்3யஹமித்யாத்மதயா ந்ருத்யஸி போ4ஸ்தே*
*வத3ந்தி ஹ்ருத3யம் நாம || 2*

*அஹமிதி குத ஆயாதீத்யன்விஷ்யாந்த:*
*ப்ரவிஷ்டயாத்யமலதி4யா |*
*அவக3ம்ய ஸ்வம் ரூபம் சாம்யத்யருணாசல த்வயி*
*நதீ3வாப்தௌ4 || 3*

*த்யக்த்வா விஷயம் பா3ஹ்யம் ருத்3த4ப்ராணேன*
*ருத்3த4மனஸாந்தஸ்த்வாம் |*
*த்4யாயன்பஶ்யதி யோகீ3 தீ3தி4திமருணாசல*
*த்வயி மஹீயந் தே || 4*

*த்வய்யர்பிதமனஸா த்வாம் பச்யன்ஸர்வம்*
*தவாக்ருதிதயா ஸததம் |*
*பஜதேऽனன்யப்ரீத்யா ஸ ஜயத்யருணாசல த்வயி*
*ஸுகே மக்3ன: || 5*

*ஸ்ரீமத்ரமணமஹர்ஷே: த3ர்சனம் அருணாசலஸ்ய*
*தே3வகி3ரா |*
*பஞ்சகம் ஆர்யாகீ3தௌ ரத்னம் த்வித3ம் ஔபநிஷதம் ஹி || 6*

ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

# ஸ்ரீ அருணாசல பஞ்ச ரத்னம்

*(வெண்பா)*

*அருள் நிறைவான அமுதக் கடலே*
*விரிகதிரால் யாவும் விழுங்கும் - அருண*
*கிரிப் பரமான்மாவே கிளர்உளப் பூ நன்றாய்*
*விரிபரிதி யாக விளங்கு.* 1

*சித்திரமாம் இஃதெல்லாம் செம்மலையே நின்பாலே*
*உத்திதமாய் நின்றே ஒடுங்கிடுமால் - நித்தியமும்*
*நான்என்று இதய நடித்திடுவை யால்உன்பேர்*
*தான்இதயம் என்றிடுவர் தாம்.* 2

*அகமுகமார் அந்த அமலமதி தன்னால்*
*அகம் இதுதான் எங்குஎழும்என்று ஆய்ந்தே - அகவுருவை*
*நன்குஅறிந்து முந்நீர் நதிபோலும் ஓயுமே*
*உன்கண்அரு ணாசலனே ஓர்.* 3

*வெளிவிடயம் விட்டு விளங்கும் அருணேசா*
*வளியடக்க நிற்கு மனத்தால் - உள மதனில்*
*உன்னைத் தியானித்து யோகி ஒளிகாணும்*
*உன்னில் உயர்வுறும் ஈதுஉன்.* 4

*உன்னிடத்தில் ஒப்புவித்த உள்ளத்தால் எப்பொழுதும்*
*உன்னைக் கண்டுஎல்லாமும் உன்னுருவாய் - அன்னியமில்*
*அன்புசெயும் அன்னோன் அருணாசலா வெல்கும்*
*இன்புருவாம் உன்னில் ஆழ்ந்தே.* 5

*அருணகிரி ரமணன் ஆரியத்தில் கண்ட*
*அருமறை அந்தக் கருத்தே ஆகும் - அருணா*
*சல பஞ்சக மணியைத் தண் தமிழ் வெண்பாவால்*
*உலகுக்கு அளித்தான் உவந்து.* 6



**பகவான் ஸ்ரீ ரமண மஹரிஷிகள்**

# பஞ்சரத்னத்தினமும் உள்ளது நாற்பதும்

ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

# பிற்பகுதி

## முன்னுரை

இந்நூலின்கண் அமைந்துள்ள அவதாரிகையில் மாந்தர் அனைவருக்கும் பொதுவான 'நான் இருக்கின்றேன்' என்னும் அனுபவத்தில் 'நான்', மற்றும், 'இருக்கின்றேன்' என்னும் இரண்டு சொற்களுக்குமிடையே உள்ள மிகப் பெரிய இடைவெளி விவரிக்கப்பட்டுள்ளது.

இந்த இரண்டு சொற்களில் 'நான்' என்னும் முற்பகுதி பொய்மையான அகந்தை என்றும், அது எழுவதற்கு ஆதாரமாக உள்ள 'இருக்கின்றேன்' என்னும் பிற்பகுதி இருப்புணர்வே உண்மையில் **"உள்ளது"** என்றும், ஸ்ரீபகவான் அருளிய, **ஸ்ரீரமணோபநிஷதம்** என்று போற்றப்படுகின்ற 'உள்ளது நாற்பது', பிற்பகுதியாகிய 'இருக்கின்றேன்' என்னும் உள்ள பொருளையே பேசுகின்றதென்றும் (நூலில் பக்கம் 2) குறிக்கப்பட்டுள்ளது.

இதைப் படித்த என் தாயார் ஸ்ரீமதி காந்தி கிருஷ்ணமூர்த்தி உள்பட அன்பர்கள் பலர் 'உள்ளது நாற்பது' முழுவதிலும் இந்த இரண்டு சொற்களுக்குமிடையே உள்ள வேறுபாடுகள் எவ்வாறு இடம் பெற்றுள்ளனவென்பதை எடுத்துக்காட்ட வேண்டுமென்று கேட்டுக் கொண்டனர். இது 'கூறியது கூறல்' என்னும் சொற்குற்றத்திற்கு வகை செய்யுமோவென்ற ஐயம் எழுந்தது. ஆயினும், ஸ்ரீரமண அன்பர்களின் மேன்மேலும் தொடர்ந்த வேண்டுகோள்களை மீண்டும் மீண்டும் மறுக்க அறவே அசக்தனாய் இந்த முயற்சியில் ஈடுபடுத்திக்கொண்ட அடியேனின் மூடத்துணிவை அறிஞர் பொறுக்கக் கடவர்.

**முகவைக் கண்ண முருகனடிமை**

# பஞ்சரத்னத்தினமும் உள்ளது நாற்பதும்

## பாயிரம்- பாடல்கள் 1,2

மெய்யின் இயல்பும் அதை மேவும்திறனும் எமக்கு
உய்யும் படிமுருகன் ஓதுகளனப் - பொய்யுலகின்
கள்ளம்அறும் ஆற்ருல் கனரமணன் கட்டுரைத்தான்
உ ள்ளது நாற்பது உ வந்து.

**பொ-ரை:** *முகவைக் கண்ண முருகனுர் மெய்ப்பொருளின் தன்மையையும், அதை அடையும் வழியையும் நாங்கள் உய்வடைய இயம்பியருள்கவென்று வேண்டவும், மாண்பு மிக்க ஸ்ரீரமண பகவான் பொய்யுலகின் சூழ்ச்சி அழிந்து போகும்படிக்கு 'உள்ளது நாற்பது' என்னும் ஞான நூலே உபதேசித்தருளினுர்.*

உள்ளதுஒன்று அன்றுபல என்பார்கள் உ ட்கொளுமாறு
உள்ளதுஒன்று என்றே தான்ஓதியஅவ் - வுள்ளது
நாற்பது வெண்பாக்களே ஓர்நல்கலிவெண்பா ஆக்கி
ஏற்பஅளித்தான் ரமணன் எண்.

**பொ-ரை:** *மெய்ப்பொருளாம் 'உள்ளது' ஒன்று அல்ல; பலவே என்பவர்களும் உணர்ந்து ஒப்புக்கொள்ளுமாறு, 'உள்ளது ஏக வஸ்துவே' என்னும் உண்மை நிலேக்கேற்ப, தாம் முன்னம் அருளிய 'உள்ளது நாற்பது' நூலிலுள்ள நாற்பது வெண்பாக்களேயும் ஒரு கலி வெண்பாவாக்கி அருளினுர் என்பதை உணர்வாயாக!*

## மங்கலம் - பாடல்கள் 1,2

உள்ளதுஅலது உள்ளஉணர்வு உள்ளதோ உள்ளபொருள்
உள்ளலற உள்ளத்தே உள்ளதால் - உள்ளமெனும்
உள்ளபொருள் உள்ளல்எவன் உள்ளத்தே
உள்ளபடி உள்ளல் உணர்.

*பொ-ரை: 'உள்ளது' என்பதாகிய மெய்ப்பொருளின்றி 'இருக்கின்றேன்' என்னும் இருப்புணர்வு இருக்க முடியுமா?*

*(முடியாது என்றவாறு). அந்த உள்ள பொருள் எண்ணங்களற்று இதயத்தில் உள்ளதால், அந்தப் பொருளை எண்ணுவதின் மூலம் எவ்வாறு நினைக்க இயலும்? அல்லது எவரால் முடியும்? இதயத்தில் அது எவ்வாறு உள்ளதோ, அவ்வாறே நாமும் இதயத்தில் எண்ணங்களற்று இருப்பதே அதை உள்ளபடிக்குத் தியானிப்பதாகுமென்பதை உணர்வாயாக!*

*வி–ரை: 'இருப்பதாகிய(*Existence - Absolute*)' 'உள்ள பொருள்' (சத்வஸ்து) இல்லாமல் 'இருக்கிறேன்' என்னும் உணர்வு இருக்கவியலுமாவென்று கூற வருவார் 'உள்ளது அலது உள்ள உணர்வு உள்ளதோ' என்றார். மேலும் 'நானென்று இதய நடித்திடுவையால்' என்னும் பஞ்சரத்னத்தில் இரண்டாவது பாடலில் மூன்றும் வரியின் பிரதிபலிப்பே 'உள்ள பொருள் உள்ளலற உள்ளத்தே உள்ளதால்' என்பதாகும்.*

2. **மரணபயம் மிக்குஉளஅம் மக்கள் அரணாக**
**மரணபவம் இல்லா மகேசன் – சரணமே**
**சார்வர்தம் சார்வொடுதாம் சாவுற்றார் சாவெண்ணம்**
**சார்வரோ சாவா தவர்நித்தர்.**

*பொ-ரை: மரண பயம் மிகுந்த சத்வ குண சீலர்கள் தமக்குற்ற பாதுகாப்பாக மரணம் என்பதே இல்லாத மகேச்வரனின் திருவடிகளைச் சார்வர். அத்தகைய சரணாகதியால் தம்மகந்தை அழியப் பெறுவர். ஆகையால் மரண பயத்தைத் திரும்பவும் அடைவரோ? (அடையார் என்றவாறு).ஏனெனில் அவர்கள் நித்ய முக்திபதமாம் சிரஞ்சீவத்துவத்தை அடைந்தார்கள்.*

*வி–ரை: பிறவிப் பிணியைத் தீர்க்கும் சாவாமருந்தாகிய 'தேவாமிர்தமே அருணாசலம்' என்று கூறும் பஞ்சரத்னத்தின் முதல்வரியிலே உள்ள 'அமுதக்கடலே' என்னும் சொற்களின் விரிவாக்கமே மேற்கண்ட பாடலின் கருத்தாகும்.*

ஓம் நமோ பகவதே ஸ்ரீரமணாய

# நூல்

*(கருத்துத்தொடர்பு கருதிப் பாடல்களின் வரிசை மாற்றப்பட்டுள்ளது.)*

## *பாடல் 1*

1. **நாம்உலகம் காண்டலால் நானாவாம் சக்திஉள
ஓர் முதலை ஒப்பல் ஒருதலையே - நாம உருச்
சித்திரமும் பார்ப்பானும் சேர்படமும் ஆர்ஒளியும்
அத்தனையும் தானாம் அவன்.**

*பொ-ரை: நாம் காண்பதினால் பற்பல நாம ரூப வேறுபாடுகளொடு கூடிய பலவிதமான சக்திகளைத் தன்னுள்ளே கொண்டுள்ள ஒரு முழு முதற் பொருளை ஒப்புக் கொள்வது அனைவருக்கும் சம்மதமானதேயாகும். நாம, ரூபங்களான உலகச் சித்திரமும், அதைப் பார்ப்பவனும், உலகமாகிய ஓவியத்தைத் தாங்கி நிற்கும் திரைச் சீலையும், உலகோவியத்தைப் பார்க்க உதவும் பிரகாசமும் அந்த முழு முதற் பொருளேயாகும்.*

*வி–ரை: 'நான்' என்னும் முற்பகுதியால் உலகத் தோற்றம் உருவாகுகின்றதென்பதைக் கூற 'நாம் உலகம் கண்டலால்' என்கிறார். உலகம் இருப்பதால், அதாவது, உலகிற்குத் தனி இருப்பு உள்ளதினால் அதை நாம் காணவில்லை; மாறாக, நாம் (அதாவது, அகந்தை) காண்பதினால் உலகத் தோற்றம் உருவாகுகின்றதென்பது கருத்து. இந்நூலில் பஞ்சரத்னத்தின் இரண்டாவது பாடலில் மேற்கண்ட கருத்து விளக்கப்பட்டுள்ளதை ஆங்கே காண்க.*

## *பாடல் 3*

3. **உலகுமெய் பொய்த் தோற்றம் உலகுஅறிவாம் அன்றுஎன்று
உலகுசுகம் அன்றுஎன்று உரைத்துஎன் - உலகு விட்டுத்
தன்னைஓர்ந்து ஒன்றுஇரண்டு தான்அற்று நான் அற்ற
அந்நிலை எல்லார்க்கும் ஒப்பாம்.**

*பொ-ரை: ''உலகம் சத்தியம்; அல்ல, பொய்த்தோற்றம், உலகம் அறிவுமயம்; அல்ல ஜடம், உலகம் இன்பவுருவானது; அல்ல துக்க சாகரமே'' என்று வாதமிட்டு என்ன பயன்? உலகத்தைப் பற்றிய*

வீண் ஆராய்ச்சியை ஒதுக்கி, தன்னை ஆராய்ச்சி செய்து, துவிதாத்துவிதம் நீங்கிய, 'நான்' என்னும் ஜீவபோதமற்ற அந்த மெய்ந்நிலை அனைவருக்கும் ஏற்புடையதேயாகும்.

வி–ரை:இந்தப் பாடலிலும் உலகத்தின் பொய்மை நன்கு விளக்கப்படுவதுடன், அதைத் தவிர்த்து, அகமுகப்பட்டு, பஞ்சரத்னத்தில் விளக்கப்பட்டுள்ள 'நான்' என்பதற்ற அந்த 'நான்–நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாச நிலையை அறிவதே எல்லோருக்கும் தகுந்ததென அறிவுறுத்தப்படுகிறது.

## பாடல் 4

**4. உருவம் தான்ஆயின் உலகுபரம் அற்றும்**
**உருவம் தான்அன்றேல் உவற்றின் - உருவத்தைக்**
**கண்ணுறுதல் யாவன்எவன் கண்அலால் காட்சிஉண்டோ**
**கண்அதுதான் அந்தம்இலாக் கண்.**

பொ-ரை: நாம் ஒரு தேகம் என்னும் உருவமானால், உலகமும் கடவுளும் உருவம் உள்ளவராவர். நாம் இந்தத் தேகம் அல்ல என்று உணர்ந்தால், உலகம், கடவுளர்களின் உருவத்தை காண்பது யார்? எவ்வாறு? கண்ணின்றி காட்சி சாத்யமாகுமோ? நம்முடைய உண்மையான கண் 'உள்ளதாகிய' எல்லையற்ற ஆன்ம வஸ்துவே!

வி–ரை: 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியே ஒரு உடலை 'நான்' என்று அபமிமானிக்கின்றது. இதுவே 'உருவம் தானுதல்' என்று இந்தப் பாடலில் கூறப்பட்டுள்ளது. 'நான்' என்னும் எழுச்சியினுலே 'உலகம்' என்பதும், அதைப் படைத்த 'இறைவன்' என்பதும் உருவாகுகின்றன. இதையே 'உருவம் தானுயின் உலகு, பரம் அற்றும்' என்று குறிக்கிறுர். எனவே பொய் அகந்தைக் கண்ணின் மனோ கற்பனைகளே உலகம், கடவுளர்களின் உருவங்களாகும். ஆனுல், 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதியே நமது உண்மையான இயல்பு என்றும், அதுவே சத்தான்ம வஸ்துவாகிய 'அந்தமிலாக் கண்' என்றும் இந்தப் பாடலில் ஸ்ரீபகவான் வலியுறுத்துகிறுர்.மேலும், காணும் கண்ணின் தன்மைக்கு வேருக காட்சிப் பொருளின் தன்மை இருக்க முடியுமா? ஆகவே ஆன்மக் காட்சியே உண்மைக் காட்சி என்னும் மற்ருெரு பொருளும் காண்க.

## பாடல் 5

5. உடல்பஞ்ச கோசஉரு அதனால் ஐந்தும்
உடல் என்னும் சொல்லில் ஒடுங்கும் – உடலன்றி
உண்டோ உலகம் உடல்விட்டு உலகத்தை
கண்டார் உளரோ கழறு.

*பொ-ரை: அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்னும் ஐந்து கோசங்களினால் உருவாகியது மனித தேகம்; எனவே தேகத்தில் ஐந்து கோசங்களும் அடங்கும். தேகமில்லாமல் உலகத்தைக் காணவியலுமா? உடலை கைவிட்டு விட்டு எவராவது உலகத்தைக் கண்டிருக்கிறார்களோ? நீயே சொல்!*

*வி–ரை: உடலின்றி உலகத் தோற்றம் இல்லை. உறக்கத்தில் உடல் இல்லாமல் போவதால் 'உலகம்' தோன்றாததே இதற்குத் தகுந்த சான்றாகும். 'நான்' என்னும் எழுச்சியில்லாமல் உடலபிமான மில்லை. அதுபோலவே, உடலபிமானம் இன்றேல், 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சி சாத்யமின்று என்பது கருத்து.*

## பாடல்கள் 6,7

6. உலகுஐம்புலன்கள்உரு வேறுஅன்று அவ்ஐம்
புலன் ஐம் பொறிக்குப் புலனாம் – உலகை மனம்
ஒன்றுஐம் பொறிவாயால் ஓர்ந்திடுதலால் மனத்தை
அன்றிஉலகு உண்டோ அறை.

*பொ-ரை: உலகம் ஐம்புல உணர்ச்சிகளாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகியவற்றால் உருவாகியது; வேறானதல்ல. ஐம்புல உணர்ச்சிகளை ஐம்புலன்களாம் மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவற்றின் மூலமாக மனம்தான் உலகை அறிந்து கொள்கின்றது. ஆதலால் மனத்திற்கு அப்பாற்பட்டு உலகம் என்ற ஒன்று இருக்க முடியுமா? நீயே கூறு!*

7. உலகுஅறிவும் ஒன்றாய் உதித்து ஒடுங்குமேனும்
உலகுஅறிவு தன்னால் ஒளிரும் – உலகுஅறிவு
தோன்றிமறைதற்கு இடனாய் தோன்றிமறையாது ஒளிரும்
பூன்றமாம் அஃதே பொருள்.

பொ-ரை: உலகத் தோற்றமும், தற்போத அறிவாகிய மனமும் ஒரே சமயத்தில் உதித்து, ஒரே சமயத்தில் ஒடுங்குகின்றன; எனினும் உலகத் தோற்றம் மனத்தினுல் சாத்தியமாகின்றது. உலகமும், மனமும் தோன்றி மறைவதற்கு ஆதார பீடமாகவும், தான் மட்டும் தோன்றி, மறையாமல் எப்பொழுதும் பிரகாசிப்பது எதுவோ, அந்த பூரணப் பொருளே 'உள்ளது' ஆகிய ஆன்ம வஸ்துவாகும்.

வி-ரை: 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியே மனமாக உருப்பெற்று, ஐம்புலன்கள் (மெய் , வாய், கண், மூக்கு, செவி என்னும் பஞ்ச ஞானேந்திரியங்கள்) மூலமாக, ஐம்பொறிகளாகிய கை, கால், வாய், குதம்,உபதஸ்ம் (பஞ்ச கர்மேந்திரியங்கள்) ஆகியவற்றைச் செயல்படுத்தி உலகத் தோற்றத்தை உருவாக்குகிறது. எனவே மனத்தை 'ஐம்புலன்கள் உரு' என்கிருர் (பாடல் 6).

மேலும், உலகமும் 'நான்' என்று எழும் அகந்தை அறிவும் ஒன்ருக எழுகின்றன; உறக்கம், மரணம், மூர்ச்சை காலங்களில் ஒன்ருக மறைகின்றன; இவ்வாறு இவையிரண்டும் தோன்றி மறைவதற்கு ஆதாரத்தானமாய் 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதியே உள்ளது; இதுவே தோன்றி, மறையாது 'நான்–நான்'என்னும் தன்னுணர்வுப் பிரகாசமாக என்றும், நித்ய வஸ்துவாக ஒளிரும் பூரணப் பொருளாகும் (பாடல் 7).

## பாடல்கள் 8, 20, 21

8. எப்பெயர் இட்டு எவ்வுருவில் ஏத்தினும் ஆர்பேர் உருவில்
அப்பொருளைக் காண வழிஅது ஆயினும் அம்-மெய்ப் பொருளின்
உண்மையில் தன் உண்மையினை ஓர்ந்து ஒடுங்கி ஒன்றுதலே
உண்மையில் காணல் உணர்.

பொ-ரை: எவர் எந்தப்பெயரில், எந்த வடிவத்தில் வழிபட்டாலும் அது நாம, ரூபங்களற்ற அந்த சத்திய வஸ்துவைக் காண்பதற்குரிய மார்க்கம் ஆகும். ஆயினும், அந்த மெய்ப்பொருளின் உண்மை இயல்பில் நாம, ரூபங்களற்றத் தன் உண்மை இயல்பை உணர்ந்து, அதில் ஒடுங்கி, ஒன்ருகி விடுவதே அதைக் காண்கின்ற உண்மையான சத்திய தரிசனம் என்பதை அறிவாயாக!

20. **காணும் தனைவிட்டு தான்கடவுளைக் காணல்**
**காணும் மனோமயமாம் காட்சிதனைக் - காணுமவன்**
**தான் கடவுள் கண்டாளும் தன் முதலைத் தான்முதல் போய்**
**தான்கடவுள் அன்றி இலதால்.**

*பொ-ரை: எதிரில் தோன்றும் அனைத்தையும் காண்பவனாகிய தன்னைப் பார்ப்பதை விட்டு, கடவுளைக் காண்பது தன்னுடைய மனோ கற்பனைகளையே காண்பதாகும். தன்னை விசாரித்து தன்னுள் ஒளிரும் தன் முழு முதற் பொருளை உணர்ந்து. 'தன் முதல்' என்று இந்நாள்வரை கருதிய அகந்தையை அழிப்பவனே உண்மையில் கடவுளைக் கண்டவன் ஆவான்.*

21 **தன்னைத்தான் காணல் தலைவன்தனைக் காணல்**
**என்னும் பன்னூல்உண்மை என்னைனின் - தன்னைத் தான்**
**காணல்எவன் தான்ஒன்றால் காண ஒணாதேல் தலைவன்**
**காணல்எவன் ஊண்ஆதல் காண்.**

*பொ-ரை: தன்னை ஆராய்ந்து அறிவதே தலைவனும் கடவுளை அறிவது என்று பற்பல சாத்திரங்கள் கூறுவதன் உண்மைப் பொருள் என்னவென்றால், தனக்கு அன்னியமாக கடவுள் இல்லைஎன்பதினாலேயே! ஒருவன் எப்பொழுதும் ஒருவனாகவே விளங்குவதால் தன்னைத் தானே தனக்கு அப்பாற்பட்டு எவ்வாறு காணவியலும்? ஒருவன் தன் ஜீவபோதத்தை சிவபோதமாம் இறைவனில் கரைத்து, அதைக் கடவுளுக்கு உணவாக்கி, இறைவனில் ஒன்று கலப்பதே இறைவனைக் காண்பதாகும்.*

*வி–ரை: 'நான்'என்னும் முற்பகுதி எழுச்சியினால் உருவாகும் மனமே கடவுட் காட்சிகளைத் தோற்றுவிக்கின்றது. ஆகவே கடவுட் காட்சிகள்அனைத்தும் மனோமயக் காட்சிகளேயாகும். எனவே தான் அந்த மெய்ப்பொருளாகிய 'நான்–நான்'என்னும் தன்னுணர்வுப் பிரகாசத்திற்குக் கவனத்தைத் திருப்பி, அதில் உள்ள தன் இயல்பாகிய உண்மையை உணர்ந்து, அதில் ஒடுங்கி, ஒன்றுதலே உண்மையில் சத்வஸ்துவைக் காண்பதாகுமென்று வலியுறுத்துகிறார்(பாடல் 8).*

*நான்–நான்'என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே 'நான்'*

*என்னும் முற்பகுதி எழுச்சிக்கும் (தன்மை), கடவுளுக்கும் (படர்க்கை) ஆதாரமாக இருப்பதால் 'தான்கடவுள் அன்றி இலதால்' என்கிறார் ஸ்ரீபகவான். 'நான்' என்று எழும் முற்பகுதியும், 'இருக்கிறேன்' என்று ஆன்ம உணர்வுமயமாகத் திகழும் பிற்பகுதியாம் கடவுளும் வேறல்ல என்பது கருத்து (பாடல் 20).*

*'இருக்கிறேன்' என்னும் தன் இருப்பை உணர்வதே தன்னைக் காண்பதாகும். அதுவே இறைவனைக் காண்பதுவுமாகும். தானாகிய(ஆன்மாவாகிய) தன்னைத் தனக்கு அப்பாற்பட்டு எவ்வாறு காணவியலும்? 'நான்' என்னும் முற்பகுதி 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதிக்கு உணவாகக் கரைவதே இறைவனைக் காண்பதாகும் (பாடல் 21).*

## பாடல் 9

9. **இரட்டைகள் முப்புடிகள் என்றும் ஒன்றுபற்றி**
**இருப்பவாம் அவ்வொன்று ஏதென்று - கருத்தினுள்**
**கண்டால் கழலும் அவை கண்டவரே உண்மை**
**கண்டார் கலங்காரே காண் .**

*பொ-ரை: மெய்-பொய், பிறப்பு-இறப்பு, சுகம்-துக்கம் போன்ற துவந்தங்களும். காண்பான்-காட்சி-காணப்படுபொருள், ஞாதுரு-ஞானம்-ஞேயம் பேன்ற முப்புடிகளும் எப்பொழுதும் அகந்தை என்னும் ஒன்றை ஆதாரமாகக் கொண்டு விளங்குகின்றன. அந்த அகந்தை எதுவென்று தம்முள் ஆழ்ந்து, விசாரித்தறிந்தால் அவை நீங்கிவிடும். அவ்வாறு அகந்தை அழியப் பெற்றவரே ஆன்மாவைத் தரிசனம் செய்தவராவர். பின்பு அவர்கள் துவந்த-திரிபுடி மாயைகளினால் சிறிதும் கலங்க மாட்டார்கள்.*

*வி–ரை: 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியே வெற்றி–தோல்வி, சுகம்–துக்கம் போன்ற இரட்டைகளும், காண்பான், காண்பது, காணப்படுபொருள் ஆகிய முப்புடிகளும் தோன்றக் காரணமாகும். எனவே அவைகள் 'நான்' என்னும் முற்பகுதியைப் பற்றி நிற்கின்றன. அந்த 'நான்' என்னும் முற்பகுதியின் பொய்மையை உணர்ந்தால், அவைகளும் தன்னிச்சையாகவே இல்லாமல் அழிந்துபோகும்.*

## *பாடல்கள் 10, 11, 12*

10. அறியாமை விட்டு அறிவுஇன்ரும் அறிவுவிட்டுஅவ்
அறியாமை இன்றுஆகும் அந்த - அறிவும்
அறியாமையும் ஆர்க்குஎன்று அம்முதலாம் தன்னே
அறியும் அறிவே அறிவு.

*பொ-ரை: அறியாமையினுல் உலகத்தை எதிரிட்டு அறியும் உலகஅறிவு உருவாகிறது. அதுபோலவே, உலகறிவாகிய தற்போதத்தை விட்டு அறியாமை இருக்க முடியாது. அந்த அறிவும், அறியாமையும் யாருக்கென்றுத் தீர விசாரித்து, அவற்றின் மூலமாகிய தன் உண்மை இயல்பாம் சத்து, சித்து, ஆனந்த இயல்பை அறியும் அறிவே உண்மையான அறிவாகும்.*

11. அறிவுஉறும் தன்னே அறியாது அயலே
அறிவது அறியாமை அன்றி - அறிவோ
அறிவு அயற்கு ஆதாரத் தன்னேஅறிய
அறிவு அறியாமை அறும்.

*பொ-ரை: அறிபடுபொருள்களே அறியும் தன்னே ஆராய்ந்துத் தன் உண்மை இயல்பை அறியாமல் தனக்கு அயலான அனேத்து அன்னியப் பொருள்களேயும் அறிவது அறியாமையாகுமேயன்றி அறிவுடைமை ஆகுமோ? அனேத்தையும் அறிந்து கொள்வதற்கு ஆதாரமாக விளங்கும் தன் உண்மை இயல்பை அறிந்து கொண்டால் உலகாதி அறிவு-அறியாமைகள் நீங்கும்.*

12. அறிவு அறியாமையும் அற்றது அறிவாமே
அறியும் அது உண்மை அறிவு ஆகாது - அறிதற்கு
அறிவித்தற்கு அன்னியம் இன்ருய் அவிர்வதால் தான்
அறிவாகும் பாழ்அன்று அறி.

*பொ-ரை: உலக அறிவாகிய ஜீவபோதமும், அறியாமையும் அற்ற நிலேயே அறிவாகும் (ஞானம்). ஜீவபோத மனத்தினுல் அறியப்படுவது உண்மை அறிவு(ஞானம்) ஆகாது. அறிவதற்கோ, அன்றி அறிவிப்பதற்கோ வேறென்று ஆகாமல் ஏக வஸ்துவாய் தானே பிரகாசிப்பதால் ஸ்வயம்பிரகாசமாகத் திகழ்கின்ற தன்*

உண்மை ஆன்ம இயல்பே அறிவாகும். அது சூனியம் அன்று (ஆனந்த மயமானது)என்பதை அறிவாயாக!

வி-ரை: சத் என்னும் தன்னுணர்வுப் பிரகாசம் அறிவு சொரூபமாக (Knowledge-Absolute--சித்) இருப்பதனுல் 'அறிதல்' சாத்யமாகின்றது. மனிதப் பிறவியில் இது நிகழ்வதினுல் மனித ஜென்மம் எல்லாப் பிறப்புகளிலும் மிக மிக உயர்ந்ததாகக் கருதப்படுகிறது. இந்த 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியே 'ஆறும் அறிவு' என்றும் போற்றப்படுகிறது.

'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதியிலிருந்து எழும் அறிவு–எழுச்சி 'நான்' என்னும் முற்பகுதிக்குத் திருப்பப்படுவதினுல் அகந்தை உருவாகின்றது. அகந்தையின் அறிவு பூரணமாகத் திகழ்கின்ற 'சித்(Knowledge-Absolute)' சொரூபத்திலிருந்து பெறப்பட்ட பின்னப்பட்ட அறிவேயாகும். இந்த பின்னப்பட்ட அறிவை மூலதனமாகக் கொண்டுதான் மனிதன் மற்றைய மருத்துவ, பொறியியல் அறிவுகள் எல்லாவற்றையும் உருவாக்குகின்ருன் . இத்தகைய அறிவுகள்(Medical, Engineering Sciences) இல்லாத நிலேயே 'அறியாமை' எனப்படுகிறது. எனவே இவ்வித அறிவும், அறியாமையும் யாருக்கு ஏற்பட்டனவென்று அகமுக தன்னுராய்ச்சியினுல் கவனத்தை 'இருக்கிறேன் (Existence - Absolute)'என்னும் உண்மையில் உள்ள பொருளுக்குத் திருப்பி, தன்னுடைய உண்மை இயல்பை உணர்வதே 'உண்மையான அறிவு' என்று இப்பாடலில் ஸ்ரீ பகவான் வலியுறுத்துகிருர்(பாடல் 10).

எல்லாவற்றையும் (மருத்துவ, பொறியியல் அறிவுகள் முதலான எல்லா அறிவுகளேயும்) உணர்ந்து கொள்கின்ற 'இருக்கின்றேன்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசத்தை உணர்ந்து கொள்ளாவிடில், 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியினுல் அறிந்து கொள்ளப்படுகின்ற அனேத்து அறிவுகளும் அறியாமையே யாகுமன்றி, அவை 'உண்மை அறிவு' ஆகுமோவென்று மீண்டும் இப்பாடலில் வலியுறுத்துகிருர் (பாடல் 11).

எவையெல்லாம் 'நான்' என்னும் முற்பகுதி அகந்தை அறிவினுல் அறியப்படுகின்றதோ, அவை அனேத்தும்

'உண்மையான அறிவு' அல்ல என்றும், 'இருக்கின்றேன்' என்னும் பிற்பகுதிப் பூரண அறிவு, அகந்தை அறிவினுல் உருவாக்கப்படுகின்ற அறிவு - அறியாமைகளுக்கு அப்பாற்பட்டதென்றும், அது ஸ்வயம் பிரகாசமாகத் 'தான்–தான்' என்று ஸதா ஸ்புரித்துக்கொண்டிருக்கின்றதென்றும், அது சூனியம் அல்ல; (மாருக ஆனந்தமயமானது-Bliss-Absolute)என்பதை அறியவேண்டுமென்று இப்பாடலில் அறிவுறுத்துகிருர் (பாடல் 12).

## பாடல் 13

13. ஞானமாம் தானேமெய் நாஞவாம் ஞானம்அஞ்
ஞானமாம் பொய்யாம் அஞ்ஞானமுமே – ஞானமாம்
தன்னைஅன்றி இன்று அணிகள்தாம் பலவும்பொய் மெய்யாம்
பொன்னைஅன்றி உண்டோ புகல்.

பொ-ரை: நம் உண்மை இயல்பாகிய சச்சிதானந்த ஆன்ம சொரூபமே சத்தியம்; மற்றைய அயல் பொருள்களைப் பற்றியதாகிய பற்பல ஞானங்களும் பொய்; அத்தகைய ஞானங்களாகிய அஞ்ஞானங்களும் ஆன்மாவைப் பற்றி நிற்கின்றனவேயன்றி வேறல்ல; பற்பல நாம, ரூபங்களையுடைய தங்க ஆபரணங்கள் அதிஷ்டானமான தங்கத்தினின்றும் வேருகுமோ? தங்கமே சத்தியம்; ஆபரணங்கள் பொய்; ஏனெனில் அவை மீண்டும் பல்வேறு நாம, ரூபங்களில் ஆக்கப்படுகின்றன. இதுபோன்றே நாமாகிய ஞானமே (ஆன்மாவே) மெய்; அதைப் பற்றி எழும் பற்பல உலகாதி அஞ்ஞானங்கள் பொய்யே!

வி–ரை: 'ஞானமாம் தானே மெய்' என்பதினுல் 'இருக்கிறேன்' என்பதாகிய பிற்பகுதி இருப்புணர்வையே 'மெய்வஸ்து' என்கிருர். அன்றி, 'நான்' என்னும் முற்பகுதி அகந்தை அறிவால் அறியப்படுகின்ற அறிவுகள்(All Sciences)அனைத்தும் அறியாமையே என்று கூற வேண்டி 'நாஞவாம் ஞானம் அஞ்ஞானமாம்' என்ருர். 'நான்' என்னும் முற்பகுதி அறிவிற்கு 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதி அறிவே ஆதாரமாக அமைவதால், அகந்தை அறிவால் அறியப்படும் மருத்துவ, பொறியியல் முதலான விஞ்ஞானங்களனைத்தும் 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதி அறிவிற்கு அப்பாற்பட்டு விளங்க

*இயலாதென்கிறார். தங்கம் இல்லாமல் தங்க நகைகள் இருக்க முடியுமாவென்று உதாரணமும் காட்டுகிறார்.*

## *பாடல் 14*

14. **தன்மைஉண்டேல் முன்னிலை படர்க்கைகள்தாம் உளவாம்**
**தன்மையின் உண்மையைத் தான் ஆய்ந்து - தன்மை அறின்**
**முன்னிலை படர்க்கை முடிவுற்று ஒன்றாய்ஒளிரும்**
**தன்மையே தன் நிலைமை தான்.**

*பொ-ரை: ஜீவபோத அகந்தை எழுவதினால் 'நான்' என்னும் தன்மையுணர்வு தோன்றுகின்றது. அதனால் 'நீ' (முன்னிலை), அவன் (படர்க்கை) ஆகியவை தோன்றுகின்றன. 'நான்' என்னும் தன்மையுணர்வை ஆராய்ந்து, தன் ஆன்ம இயல்பை உணரும்போது, தன்மையுணர்வு அழிந்து போகின்றது. அதனுடன் அதனால் எழுந்த முன்னிலை, படர்க்கைகளும் அழிந்துபோகின்றன. ஆன்ம சொரூபமே நமது உண்மை இயல்பாக மிஞ்சி ஏகவஸ்துவாக ஒளிர்கின்றது.*

*வி–ரை: 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியே தன்மை; இந்த அகந்தை அறிவின் எழுச்சியே முன்னிலை (நீ), படர்க்கைகள் (அவன், அது, அவைகள் ஆகிய உலகம்) எழுவதற்குக் காரணமாம். 'நான்' என்னும் தன்மையை ஆராய்ந்து, கவனத்தை 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதிக்குத் திருப்பி, அகமுகப்படின், 'நான்' என்பது அழியவும், முன்னிலை, படர்க்கைகளும் இல்லாமல் போகின்றன. 'இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே ஏகவஸ்துவாய்ப் பிரகாசிக்கின்றது. இதுவே ஒருவனின் உண்மை நிலையாகும்.*

## *பாடல்கள் 15, 16*

15. **நிகழ்வினை பற்றிஇறப்பு எதிர்வு நிற்ப**
**நிகழ்கால் அவையும் நிகழ்வே - நிகழ்வுஒன்றே**
**இன்று உண்மைதேராது இறப்புஎதிர்வு தேரஉனல்**
**ஒன்றுஇன்றி எண்ண உனல்.**

*பொ-ரை: நிகழ்காலத்தைப் பற்றிக் கொண்டுதான் இறந்த காலமும், எதிர்காலமும் இருப்பு பெறுகின்றன. நிகழும்போது அவையிரண்டும் நிகழ்காலமாகவேத் திகழ்கின்றன. ஆகவே*

நிகழ்காலம் ஒன்றே மூன்று காலமும் ஆகும். எனவே நிகழ்காலத்தைத் தெரிந்து கொண்டால் இறந்த, எதிர் காலங்களைத் தெரிந்து கொள்ளலாம். மாறாக, நிகழ்காலத்தைத் தெரிந்து கொள்ளாமல் மற்றைய இரண்டு காலங்களையும் அறிய முயற்சிப்பது, 'ஒன்று' என்னும் முதல் எண்ணைக் கைவிட்டு தொடர்ந்து மற்றைய எண்களைக் கணக்கிடுவதைப் போலாகும்.

**16. நாம்அன்றி நாள்ஏது நாடுஏது நாடுங்கால்**
**நாம்உடம்பேல் நாள்நாட்டுள் நாம்படுவம் – நாம் உடம்போ**
**நாம் இன்றுஅன்றுஎன்றும்ஒன்றுநாடு இங்குஅங்குஎங்கும் ஒன்றால்**
**நாம்உண்டு நாள்நாடு இல்நாம்.**

பொ-ரை: ஆராய்ந்து பார்க்கின், நாமாகிய உள்ள பொருள் இல்லையெனில் கால, தேசங்களாகிய நாளும், நாடும் ஏது? நாம் ஒரு தேகம்தான் என்று நம்புவோமானால் உடலளவில் கால, தேசங்களுக்கு நாம் கட்டுப்படுவோம். நாம் உடம்போ? அல்லவே! ஆன்மாவாகிய தனக்கு முக்காலங்களும் நிகழ்காலமே; ஏக வஸ்துவாகிய நமக்கு பிறிதொரு இடமின்மையால் எல்லா இடங்களும் ஒன்றே! நாம் எப்பொழுதும் இருக்கிறோம்; கால, தேசங்கள் கற்பனை மாத்திரமே!

வி–ரை: 'நான்' என்னும் முற்பகுதியில் இறந்த, எதிர், நிகழ் காலங்கள் உள்ளன. 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதியோ நிகழ்காலம் ஒன்றேயாக உள்ளது. நிகழ் காலத்தை அறிந்து கொள்ளாமல் இறந்த, எதிர்காலங்களை அறிந்து கொள்ள முயற்சிப்பது, 'ஒன்று' என்னும் முதல் எண்ணை ஒதுக்கி விட்டு கணக்கை ஆரம்பிப்பதற்கொப்பாகும்; அதாவது, அவ்விதம் கணக்கிடுவது இயலாது என்பது பொருள். நிகழ்காலமே இறந்த, எதிர் காலங்களாக மாறுபடுகின்றது. 'இருக்கிறேன்' என்னும் உள்ளதாகிய உணர்வில் கவனம் திருப்பப்பட்டு, அதைத் தன் இயல்பாக உணர்ந்து கொள்ளும்போது, நிகழ்காலம் ஒன்றே விளங்கும்; இறந்த, எதிர் காலங்கள் மறையும்; அப்போது நிகழ்காலத்தை மாத்திரம் எவ்வாறு ஒரு காலமாகக் கூற முடியும்? ஆகவே முக்காலங்களும் 'நான்' என்னும் முற்பகுதியில் உள்ளன. 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதியில் முக்காலங்களும்

*தோன்றுவதில்லை. இந்த உண்மை பாடல்15–ல் விளக்கப்படுகிறது. இப்பாடலில் காலத்தின் (Time) பொய்மையைக் கூறியவர், அடுத்த பாடலில் தேசத்தின்(Space) பொய்மையை விளக்குகிறார்(பாடல் 15).*

*'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியின்றி கால, தேசங்கள் எழா. 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியே ஒரு உடலை 'நான்' என்று அபிமானிப்பதற்குக் காரணமாகும். உடலையொட்டியே கால, தேசங்கள் தோன்றுகின்றன. 'நாம் உடம்போ' என்பதன் மூலம், 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சி நாம் அல்ல என்கிறார் ஸ்ரீபகவான். 'நாம் உண்டு' என்பதன் மூலம் 'இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே நாம் என்றும், கால, தேசங்கள் அதில் இல்லை என்றும் பாடலை நிறைவு செய்கிறார்(பாடல் 16).*

### பாடல்கள் 17, 18

17. **உடல்நானே தன்னை உணரார்க்கு உணர்ந்தார்க்கு
உடலளவே நான் தன்உணரார்க்கு - உடலுள்ளே
தன்உணர்ந்தார்க்கு எல்லைஅறத் தான்ஒளிரும் நான்இதுவே
இன்னவர்தம் பேதம்என எண்.**

*பொ-ரை: தன்னை உணராத அஞ்ஞானிக்கும், உணர்ந்த ஞானிக்கும் 'நான் ஒரு தேகம்' என்பது பொதுவானதோர் அனுபவமே! அஞ்ஞானிக்கோ 'நான்' என்னும் உணர்வு உடலளவில் அறியாமையால் குறுக்கப்படுகிறது. ஆனால் ஞானிக்கோ இதே 'நான்' என்னும் உணர்வு எல்லையற்று எதிலும் பரந்து, எங்கும் நிறைந்த ஆன்மாவாகப் பிரகாசிக்கின்றது. இதுவே இவர்கள் இருவருக்கிடையே உள்ள அனுபவ பேதமாகும்.*

18. **உலகு உண்மைஆகும் உணர்வு இல்லார்க்குஉள்ளார்க்கு
உலகளவாம் உண்மை உணரார்க்கு - உலகினுக்கு
ஆதாரமாய் உருவற்றுஆரும் உணர்ந்தார் உண்மை
ஈதுஆகும் பேதம் இவர்க்குளெண்.**

*பொ-ரை: அஞ்ஞானிக்கும், ஞானிக்கும் உலகம் உண்மையே! அஞ்ஞானிக்கு உலகம் மித்யாம்சங்களான நாம, ரூப அளவில்*

*சத்தியமாகும். ஞானிக்கோ தன் இருப்புண்மை ஆன்மாவின் சத்யாம்சங்களான சத்து, சித்து, ஆனந்தமாகவும், அதனால் உலகிற்கு ஆதாரமாக நாம, ரூபமற்று பிரகாசிக்கும் உள்ள பொருளாகவும் தோன்றும். இதுவே இவர்களுக்கிடையே உள்ள வேறுபாடாகும்.*

*வி–ரை: நான் இந்த 'உடலே' என்பது 'இருக்கிறேன்' என்னும் உணர்வை உணராத அஞ்ஞானிக்கும்,உணர்ந்த ஞானிக்கும் உள்ள ஒரு பொதுவான அனுபவமேயாகும். 'இருக்கிறேன்' என்னும் உணர்வை உணராத அஞ்ஞானி, தான் ஒரு 'உடலே' என்ற அளவோடு நின்று விடுகிறான். ஆனால் அதை உணர்ந்த ஞானியோ அண்டாண்ட கோடி சராசரங்கள் அனைத்திலும் எல்லாமாய் பரவி நிற்பதனால் தன்னுடைய உடலும் அதன் ஒரு பகுதியேயென்பதை உணர்ந்தவராகத் திகழ்கிறார். இதுவே இவர்களுக்கு கிடையேயுள்ள வேறுபாடாம் (பாடல் 17).*

*அதுபோலவே, அஞ்ஞானிக்கு உலகம் உண்மையாகத் தெரிகிறது. ஆனால் ஞானியோ எல்லையற்று ஒளிரும் 'இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே தனக்கும், உலகிற்கும் ஆதாரமாக இருப்பதை ஒருசேர உணர்ந்தவராக இருக்கிறார். எனவே அவருக்கு உலகம் தோற்றமாத்திரமே; உண்மை சத்வஸ்து அல்ல. இதுவே இவர்களுக்கிடையேயுள்ள வேறுபாடாகும் (பாடல் 18).*

### பாடல்கள் 19, 38

**19. விதி மதிமூல விவேகம் இலார்க்கே**
**விதிமதி வெல்லும் விவாதம் - விதிமதிகட்கு**
**ஓர் முதலாம் தன்னை உணர்ந்தார் அவை தணந்தார்**
**சார்வரோ பின்னும்அவை சாற்று.**

*பொ-ரை: விதி, மதிகள் இரண்டும் தோன்ற மூல காரணமாகிய அகந்தையைப் பற்றிய சரியானத் தெளிவு இல்லாதவர்களுக்கே 'விதி பெரிதா? அல்லது மதி பெரிதா?' என்னும் வாத விவாதங்கள் தோன்றும். அவை இரண்டினுக்கும் மூலமாகிய அகந்தையின் பொய்மையை உணர்ந்த ஞானிகளோ விதி, மதிகள் இரண்டையும் ஒருசேர நீக்கியவராவர். அவர்கள் மீண்டும் விதி, மதிகளைச் சார்ந்து, அவைகளால் பாதிக்கப்படுவரோ? நீயே கூறு!*

38. **வினைமுதல் நாம்ஆயின் விளைபயன் துய்ப்போம்**
**வினைமுதல்ஆர்என்று வினவித் -தனைஅறியக்**
**கர்த்தத்துவம் போய் கருமம்மூன்றும் கழலும்**
**நித்தமாம் முக்தி நிலை.**

*பொ-ரை: செய்யும் வினைகளுக்கு கர்த்தா நாமே என்று அகந்தை வயப்படுவோமானுல், அத்தகைய கர்மங்களினுல் விளையும் பாவ, புண்ணியங்களை அகந்தையாக நாமே அனுபவிக்க நேரிடும் (கர்த்தாவே போக்தாவாவான்). அந்த வினைமுதலாகிய அகந்தையை நாடி, அதை விசாரித்து நாம் உண்மையில் ஆன்ம சொரூபமேயென்று உணர்ந்தால், கர்த்தத்துவ புத்தியாகிய அகந்தை அழிந்துபட, மூவித சஞ்சித, ஆகாமிய, பிராரப்த கர்மங்கள் நம்மை விட்டு விலகும்; நித்தமும் பிரகாசிக்கும் நமது சுபாவ முக்தி நிலை இதுவே!*

*வி–ரை: விதி பெரிதா அல்லது மதி பெரிதா என்னும் விவாதம் 'நான்' என்னும் முற்பகுதியிலேயே சாத்யமாகின்றது. ஏனெனில் அவையிரண்டும் 'நான்' என்னும் முற்பகுதி அகந்தை அறிவினுலே விளைபவை. விதியும் மதியும் முற்றிலும் ஒன்றுக்கொன்று வேறுபட்டவை அல்ல. மதி ஒருவன் செயல்படுதில் உள்ள பூரண சுதந்திரத்தைக் குறிக்கின்றது; விதியோ அவ்வித பூரண சுதந்திரம் இல்லாத்தன்மையைக் குறிக்கின்றது.'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியினுல் உந்தப்பட்ட மனிதன் பூரண சுசந்திரத்துடன் செயல்பட்டு வினைகளை ஆற்றுகிறுன். அத்தகைய வினைகள் பாவ, புண்ணியங்களாகிய வினைப்பயன்களைத் தோற்றுவிக்கின்றன. வினைப்பயன்கள் அனுபவித்தே தீருமாகையால் , மனிதன் மீண்டும் பற்பல பிறவிகளை எடுத்து சம்சார ஸாகரத்தில்(பிறவிச் சுழலில்) அகப்பட்டுக்கொள்கிறுன். அவ்வித வினைப்பயன்களின் தொகுப்பு சஞ்சிதம் (செய்யப்பட்டவை – செய்வினை), ஆகாமியம் (எதிர்காலத்தில் சேர இருப்பவை – சேர்வினை) பிராரப்தம் (செய்வினையின் ஒரு பகுதி– ஊழ்வினை) என்று மூன்ருக வகுக்கப்படுகின்றன. சேர்த்துவைக்கப்பட்ட சஞ்சித வினைப்பயன்களின் ஒரு பகுதியே இன்றைய பிறவியில் அனுபவிக்கப்பட்டுக் கரைந்து போகின்றது; இதுவே பிராரப்தம்*

*(ஊழ்வினை) எனப்படுகிறது. ஒரு ஜீவன் பிறந்தவுடன் அது அதன் ஜீவித காலத்தில் செய்யப்போகும் வினைகளின் வினைப்பயன்கள் ஆகாமியம் (சேர்வினை) எனப்படுகிறது. எனவே ஆராய்ந்து பார்க்கின், மனிதனின் பூரண சுதந்திரமே அவன் ஆற்றும் அனைத்து வினைகளுக்கும் ஆரம்ப வித்து ஆவதால், அந்த பூரண சுதந்திரமே, அதாவது மதியே, காந்த சக்தி (*Magnetic Power*) மின்சார சக்தியாக (*Electric Power*) மாறுவதைப் போல, வினைகளாகவும், அவற்றின் வினைப்பயன்களாகிய பாவ, புண்ணியங்களாவும் (சஞ்சித, ஆகாமிய, பிராரப்தங்கள்) மாறுபடுகின்றது. ஆகவே விதியும், மதியும் ஒன்றனுக்கொன்றின் வேறுவேறு வடிவங்களே! இவையிரண்டிற்குமிடையே பேதம் கற்பித்து அவற்றினுள் எது பெரிது என்னும் விவாதம் வீண் மனோ கற்பனையே! ஒவ்வொரு மனிதனின் உண்மையான இயல்பு 'இருக்கிறேன்' என்பதாகிய ஞானமே (அறிவு)! அறிவின் இயல்பு சத், சித், ஆனந்தமே! சச்சிதானந்தத்தின் இயல்பு பரிபூரண சுதந்திரமே! அந்த பூரண சுதந்திரம் ஒவ்வொரு ஜீவனுக்கும் இப்போதும் உள்ளது; ஊழ்வினையினால் (விதியினால்) கட்டுப்பட்டிருந்தாலும் கூட! ஆகவே ஒவ்வொரு மனிதனும் தற்போது தனக்குள்ள சுதந்திரத்தைப் பயன்படுத்தி, அகமுகப்பட்டு, தன்னுள் ஆழந்து, 'நான்' என்னும் முற்பகுதியிலிருந்து கவனத்தைத் திருப்பி, 'இருக்கிறேன்' என்னும் தன் உண்மை இயல்பை உணர்ந்து கொண்டுவிடின், விதி, மதிகளுக்கு மூலமாகிய 'நான்' என்னும் முற்பகுதி அகந்தை அறிவு அழிந்துவிடும்; பின்னர் விதி, மதிகளைப் பற்றிய விவாதம் பேச்சிற்கு கூட இடமின்றி அவசியமற்றதாக மறைந்துவிடும்(பாடல் 19).*

*'நான்' என்னும் முற்பகுதி அகந்தை அறிவே 'வினைமுதல்' ஆகும். இதில் ஒருவன் தன் கவனம் முழுவதையும் செலுத்தி 'வினைமுதல்' ஆகும்போது, அத்தகைய அகந்தை அறிவினால் ஆற்றுகின்ற வினைகளினால் விளைகின்ற வினைப்பயன்களை (பாவ, புண்ணியங்களை) அனுபவித்தே ஆகவேண்டுமென்பதை 'வினைமுதல் நாம்ஆயின் விளைபயன் துய்ப்போம்' என்றார். 'வினைமுதல் ஆர் என்று வினவித் தனைஅறியக் கர்த்தத்துவம் (நான்' என்னும் முற்பகுதி அகந்தை அறிவு)போய்க் கருமம் மூன்றும்*

(சஞ்சித, ஆகாமிய, பிராரப்தங்கள்)கழலும்; நித்தமாம் (என்றும் இருக்கும்) முக்தி நிலை(இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசம்) சுடர் விட்டு ஒளிரும்' என்று இந்தப் பாடலை நிறைவு செய்கிருர்(பாடல் 38).

ஒப்பு: சஞ்சித ஆகாமியங்கள் சாராவா ஞானிக்குஊழ்
விஞ்சமெனல் வேற்ருர்கேள்விக்கு விளம்பும் - சொல்லாம்
பர்த்தாபோய்க் கைம்மையுருப் பத்தினி எஞ்சாததுபோல்
கர்த்தாபோ மூவினையும் காண். -உள்ளது நாற்பது அனுபந்தம்,33

பொருள்: சஞ்சித, ஆகாமியங்கள் இல்லையெனினும், ஞானிக்கு உடல் இருப்பதினுல் அதையொட்டிய பிராரப்தம்(ஊழ்வினை) உண்டு என்பது ஒரு சமாதானத்திற்குச் சொல்லப்படுவதாகும். உண்மையில் கணவன் இறந்தவுடன் அவனுடைய மூன்று மனைவியரும் விதவைகள் ஆவதைப்போலவே, அகந்தை இறந்தவுடன் சஞ்சித, ஆகாமிய, பிராரப்தங்கள் மூன்றும் ஞானிக்கு இல்லாதொழியும்.

## பாடல் 22

22. மதிக்கு ஒளிதந்து அம்மதிக்குள் ஒளிரும்
மதியினை உள்ளே மடக்கி - பதியில்
பதித்திடுதல் அன்றி பதியை மதியால்
மதித்திடுதல் எங்ஙன் மதி.

பொ-ரை: மனத்திற்கு ஒளி தந்து, அதற்குள் பிரகாசிக்கும் இதயப்பதியாம் ஆன்மாவில் மனத்தைத் திருப்பி, ஒன்றுபடுத்துவதே சாத்யம்; அன்றி மனத்திற்கு ஆதாரமாக விளங்கும் ஆன்மாவை மனத்தால் கண்டு அளவிடுதல் எவ்வாறு சாத்யமாகும்? இதை உணர்வாயாக!

வி–ரை: 'இருக்கிறேன்' என்னும் உள்ளதாகிய தன்னுணர்வுப் பிரகாசமே 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியின் அகந்தை அறிவுக்கு ஒளி தந்து, அதற்குள் அறிவுக்கு அறிவாக ஒளிர்கின்றது. எனவே அதுவே அகந்தை அறிவிற்குப் பதி(தலைவன்) ஆகும். ஆகவே அகந்தை அறிவைப் புறமுகப்பட வொட்டாமல் தடுத்து (மடக்கி), அகமுகப்படுத்தி பதியில், அதாவது, அந்த அகந்தை அறிவு எங்கேயிருந்து எழுந்ததோ, அங்கே, மீண்டும் ஆழ்ந்துக்

*கரைந்துப் போகச் செய்ய வேண்டுமேயன்றி, 'நான்' என்று எழும் முற்பகுதியால் அதன் ஆதாரமாம் 'இருக்கிறேன்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமாகிய அதன் எஜமானனை அளவிட்டு வெற்றி பெற இயலுமோ? (இயலாது என்றவாறு).*

*அகந்தை மதியால் ஆன்மப்பதியை அளவிடவே இயலாதென்று அழுத்தந்திருத்தமாக இப்பாடலில் கூறி, அடுத்து வரும் எட்டு பாடல்களிலும்(30–வது பாடல் வரை) அகமுகப்படுதலின் முக்கியத்துவத்தை உணர்த்தி, எவ்வாறு அதைச் செய்யவேண்டுமென்கிறச் செய்முறை உளவுகளையும் விவரிக்கின்றார்.*

## பாடல்கள் 23,24,25,26,27,28,29,30

23. நான் என்று இத் தேகம் நவிலாது உறக்கத்து
நான்இன்று என்றுஆரும் நவில்வதுஇலை - நான் ஒன்று
எழுந்தபின் எல்லாம்எழும் இந்தநான் எங்கு
எழும்என்று நுண்மதியால் எண்.

*பொ-ரை: ஜடமான தேகம் 'நான்' என்று கூறாது; மனதற்ற உறக்கத்தில் 'நான் இல்லை' என்று எவரும் கூறுவதில்லை. மனம் 'நான்' என்று எழுந்த பின் ஜக, ஜீவ, ஈசுவரர்கள் எல்லாமும் எழுகின்றன. எனவே 'நான்' என்னும் இந்த முதல் எழுச்சி எங்கிருந்து எழுகின்றதென்று கூர்ந்த அறிவால் விசாரிப்பாயாக!*

24. சடஉடல் நான்என்னாது ஸச்சித்து உதியாது
உடல்அளவா நான்ஒன்று உதிக்கும் - இடையில் இது
சித்சடகிரந்தி பந்தம்ஜீவன் நுட்பமெய் அகந்தை
இச்சமு சாரமன மெண்.

*பொ-ரை: ஜடவுடல் 'நான் என்ற அறிவு வடிவாய் எழாது. சச்சித்தாம் ஆன்மாவோ முற்றிலும் அகர்த்தாவாக இருப்பதால் உதியாது. இந்த இரண்டிற்கும் இடையில் இந்த உடல் அளவில் 'நான்' என்று ஒன்று தோன்றுகின்றது. இதுவே சித் ஜடக்ரந்தி (தேகத்தையும் ஆன்மாவையும் பிணைக்கும்முடிச்சு), பந்தம் (கட்டு), ஜீவன் (தற்போதம்), நுட்ப மெய் (சூக்ஷ்ம சரீரம்), அகந்தை, சம்சார சாகரம், மனம் என்றெல்லாம் அழைக்கப்படுகின்றதென்பதை அறிவாயாக!*

25. உருப்பற்றி உண்டாம் உருப்பற்றி நிற்கும்
உருப்பற்றி உண்டுமிக ஓங்கும் - உரு விட்டு
உருப்பற்றும் தேடினால் ஓட்டம் பிடிக்கும்
உருவற்ற பேய்அகந்தை ஓர்.

*பொ-ரை: அகந்தையானது ஒரு உடலைப் பற்றி உண்டாகும்; உடலைப் பற்றிக்கொண்டுதான் ஜீவிக்கும்; உடலின் பஞ்சேந்திரியங்களின் மூலமாக ஐம்புல உணவை உட்கொண்டு செழித்து வளரும்; ஒரு உடல் போய்விட்டால் மற்றொரு உடலைப் பற்றிக் கொள்ளும்; யாது இது என்றுத் தேடினால் எளிதில் அகப்படாது ஓட்டம் பிடிக்கும். தனக்கென்று ஒரு உருவமில்லாது பேயாட்டம் ஆடும். அகந்தையின் இந்த குணாதிசயங்களைத் தெரிந்து கொள்வாயாக!*

26. அக ந்தை உண்டாயின் அனைத்தும் உண்டாகும்
அகந்தை இன்றேல் இன்றுஅனைத்தும் - அகந்தையே
யாவுமாம் ஆதலால் யாதுஇது என்றுநாடலே
ஓவுதல் யாவும்என ஓர்.

*பொ-ரை: அகந்தை உற்பத்தியினால் ஜக, ஜீவ, ஈசுவரர்களாக அனைத்தும் தோன்றும். இந்த அகந்தை எழுச்சி இல்லையேல், அனைத்தும் மறைந்து போகும். ஆகவே அகந்தை ஒன்றே மனித வாழ்க்கையில் அனைத்துமாக இருப்பதால் அதன் இயல்பை நாடி விசாரித்தலே துன்பத்தைத் தரும் அனைத்தையும் துறப்பதாகுமென அறிவாயாக!*

27. நான் உதியாது உள்ள நிலை நாம்அதுவாய் உள்ளநிலை
நான்உதிக்கும் தானமதை நாடாமல் - நான் உதியாத்
தன் இழப்பைச் சார்வதுஎவன் சாராமல் தான்அதுவாம்
தன்நிலையில் நிற்பதெவன் சாற்று.

*பொ-ரை: 'நான்' என்னும் அகந்தை உதிக்காத தூயநிலையே நாம் ஆன்ம சொரூபமாக இருக்கும் நிலையாகும். அகந்தை 'நான்' என்று உதிக்கும் மூலத்தானத்தை நாடாமல் 'நான்' என்பது எழாத தன்னிழப்பைச் சாதிப்பது எவ்வாறு? அந்த ஆதார மூலத்தானத்தில் ஒன்று கலக்காமல், தான் ஆன்மாவாக இருக்கும் தன் யதார்த்த நிலையில் நிற்பது எவ்வாறு சாத்யப்படும்? நீயே கூறு!*

28. எழும்பும் அகந்தை எழும்இடத்தை நீரில்
விழுந்த பொருள் காணவேண்டி - முழுகுதல்போல்
கூர்ந்த மதியால் பேச்சு மூச்சு அடக்கிக்கொண்டு உள்ளே
ஆழ்ந்துஅறிய வேண்டும் அறி.

*பொ-ரை: நீரில் விழுந்த பொருளைக் கண்டெடுக்கும் பொருட்டு பேச்சு, மூச்சடக்கி நீரில் ஆழ்ந்து மூழ்குதல் போன்று, தன்னுள்ளே கூர்ந்த அறிவொடு பேச்சு, மூச்சடக்கி ஆழ்ந்து ஆன்ம முத்தை அடைய வேண்டுமென்பதை அறிவாயாக!*

29. நான் என்று வாயால் நவிலாது உள் ஆழ்மனத்தால்
நான்என்று எங்குஉந்தும் என நாடுதலே - ஞானநெறி
யாம்அன்றி அன்றுஇது நானும்அது என்றுஉன்னல்துணை
யாம்அது விசாரமா மா.

*பொ-ரை: 'நான்' என்னும் எண்ணத்தை அறவே நீக்கி, வாயினாலும் கூறாது, கவனம் முழுவதும் உள்முகப்பட்டு, 'நான்' என்னும் உணர்வு எங்கிருந்து எழுகின்றதென்று விசாரித்தலே ஞான மார்க்கம் ஆகும். அன்றி ''நான் இந்த உடலோ, மனமோ அல்ல;ஆன்மாவாம் அதுவே '' என்றுத் தியானிப்பது ஞான மார்க்கத்திற்கு ஒரு சகாயமாகுமேயன்றி, அது ஞான விசாரமாகுமா?*

30. நான்ஆர் எனமனம் உள்நாடி உளம்நண்ணவே
நானும் அவன்தலை நாணம்உற - நான் நானுத்
தோன்றும் ஒன்றுதானுகை தோன்றினும் நான்அன்றுபொருள்
பூன்றம்அது தானும் பொருள்.

*பொ-ரை: மேற்கூறப்பட்ட 'நான் யார்' என்னும் ஞான விசாரத்தால் மனம் அகமுகப்பட்டு இதயமாகிய ஆன்ம மூலத்தானத்தை அடைந்தவுடன், இதுநாள்வரை 'நான்' என்று இயங்கி வந்த அகந்தை நாணமுற்றழியும்படிக்கு, 'நான்-நான்' என்று ஒன்று ஸ்புரித்து எழும். புதிதுபோல் தோன்றினாலும், அது தோன்றி மறையும் 'நான்' அல்ல; என்றும் பிரகாசிக்கும் பூரண ஆன்மப் பொருளாகும்.*

*வி-ரை:'நான்' என்று 'இருக்கின்றேன்' (ஆன்மா) என்னும் பிறபகுதி எழுவதில்லை; இந்தத் தேகமும் 'நான்' என்று கூறுவதில்லை; ஏனெனில் அது ஜடம்; உணர்வற்றது. ஆயினும் தூக்கத்தில் கூட*

'நான் இல்லை' என்று எவரும் கூறுவதில்லை. ஆகவே நாம் இருக்கிறோம் என்பது உண்மையாக உள்ளது. எனவே 'நான்' என்னும் முறற்பகுதியே எழுகின்றது; அகந்தையை உருவாக்குகின்றது. இது எங்கிருந்து எழுகின்றதென்று கவனத்தை நுட்பமதியால் தன்னுள்ளே திருப்ப வேண்டும். ஏனெனில் 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சி நம் உடலுக்கு வெளியே நிகழ்வதில்லை. நமக்குள்ளேதான் நிகழ்கின்றது. ''இந்த நான் எங்கு எழும் என்று நுண்மதியால் எண்'' என்பதின் தாத்பரியம் இதுவே! (பாடல் 23).

ஜடவுடல் 'நான்' என்று எழுவதில்லை. சத்சித்தாகிய 'இருக்கின்றேன்' என்னும் உள்ள பொருள் உதித்தெழுவதில்லை. இவையிரண்டிற்குமிடையே உடலளவாய் 'நான்' என்னும் முற்பகுதி எழுகின்றது. இதுவே உடலோடு நம்மை சம்பந்தப்படுத்தி, அந்த 'உடலே நாம்' என்னும் உடற்பற்றை (தேகான்மபாவத்தை) உருவாக்குகின்றது. இந்த உடற்பற்றே அகந்தை உருவாவதற்குக் காரணமாகின்றது. இதுவே நம்மைப் பிறவிச்சுழலில் பந்தப்படுத்துகின்றது (பந்த ஜீவன்); இதுவே மனம் என்றும், சூக்ஷ்மதேகம் (நுட்பமெய்) என்றும் கூறப்படுகின்றது. இதுவே சம்சார பந்தத்தில் நம்மை ஆழ்த்துகிறது. (பாடல் 24).

இந்த 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சி ஒரு உடலைப் பற்றிக் கொண்டுதான் உருவாகும்; செயல்படும்; பற்பல வினைகளை ஆற்றி மிக ஓங்கும்; ஒரு உடலை உபயோகித்து அழித்தப் பின்னர், மற்றொரு உடலைப் பற்றிக் கொள்ளும். (இதுவே பிறவிச் சுழல் ஏற்படக் காரணம்). இந்த 'நான்' என்னும் முற்பகுதி எதுவென்றுத் தேடினால் அகப்படாது ஓட்டம் பிடிக்கும் (பாடல் 25).

இந்த 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியினால் உண்டாகும் அகந்தையினால் அனைத்து மனோவியாபாரங்களும் உண்டாகும். இந்த எழுச்சி இல்லையெனின், இறப்பு-பிறப்பு, வினைகள்-வினைப்பயன்கள், அவற்றால் விளையும் பிறவிச் சுழல், பந்தப்படுதல், முக்தி அடைதல், இரட்டைகள், முப்புடிகள் ஆகியவை அனைத்தும் இல்லாமல் போகும். ஆகவே 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியே அனைத்து துயரங்களுக்கும் காரணமாவதால், இது எது என்று நாடுதலே அதை நீக்கும் வழியாகும் (பாடல் 26).

*'நான்' என்னும் முற்பகுதி உதியாத நிலேயே நாம் ஆன்மவஸ்துவாக உள்ள நிலேயாகும். 'நான்' என்பது எழுகின்ற மூலத்தானத்தை நாடாமல், அகமுகப்பட்டு அந்த ஆதார வஸ்துவில் 'நான்' என்று எழும் அகந்தையைக் கரைப்பதாகிய தன்னிழப்பைச் சாதிக்காமல் 'இருக்கின்றேன் ((*Existence - Absolute*)' என்னும் ஆன்ம வஸ்துவாய் விளங்குவது எவ்வாறு இயலும்? நீயே கூறுவாயாக! (இதை உணர்வாயாக என்றவாறு)(பாடல் 27).*

*'நான்' என்று அகந்தை உதிக்கும் 'இருக்கிறேன்' என்னும் இடத்தை கடலில் விழுந்த பொருளே அதில் மூழ்கி எடுப்பவர்போல் கூர்ந்த மதியால் மிகுந்த கவனத்தொடு, பேச்சு-மூச்சு அடக்கித் தன்னுள் ஆழ்ந்து அறிய வேண்டுமென்பதை அறிவாயாக!(பாடல் 28).*

*'நான்' என்று வாயால் கூடக் கூருமல், தன்னுள் ஆழ்ந்து கவனிக்கின்ற கூர்ந்த மதியால், 'நான்' என்னும் முற்பகுதி எங்கிருந்து தோன்றுகின்றதென்று ஆராய்ந்து அறிவதே ஞான மார்க்கம் ஆகும். மாருக, 'நான் இந்த அகந்தை அறிவு அல்ல; அந்த ஆன்ம வஸ்துவே' என்றுத் தியானிப்பது ஆன்மப் பயணத்தில் மேலும் பயணிக்கச் சிறிது சகாயமாகும்; ஆனுல் அதுவே -'இருக்கின்றேன்' என்னும் ஆதார வஸ்துவில் கொண்டு சேர்த்து, அந்த ஆன்மப் பயணத்தை ஒரு முடிவிற்குக் கொண்டு வரும் - ஆன்ம விசாரமாகுமா? (பாடல் 29).*

*'உண்மையான நான் யார்' என்று மனம் தன்னுள் ஆழ்ந்து இதயமாகிய 'இருக்கின்றேன்' என்னும் உள்ளபொருளே நாடி, அதை அடையும்போது, 'நான்' என்னும் முற்பகுதி அகந்தை அறிவு தன் பொய்மையை நினேத்து நாணும்படி, 'நான்–நான்' என்னும் தன்னுணர்வு அறிவுப் பிரகாசம் ஒன்று தோன்றிச் சுடர்விட்டுப் பிரகாசிக்கும். அவ்வாறு அது தாளுகவே தோன்றினுலும், ஒருகால் தோன்றி, மறுகால் மறையும் அனுத்ம அகந்தை அறிவு அல்ல; மாருக, என்றும் ஒளிரும் பூரண ஆன்ம வஸ்துவேயாகும்(பாடல் 30).*

ஒப்பு(1): நானென்று எழுமிடம் ஏதென நாட உண்
ஞூன்றலே சாய்ந்திடும் உந்தீபற
ஞான விசாரம் இது உந்தீபற.

நானென்று தானத்து நான்நான்என்று ஒன்றுஅது
தானகத் தோன்றுமே உந்தீபற
தானது பூன்றமாம் உந்தீபற.
- உபதேச உந்தியார் (பாடல் 19, 20)

## *பாடல் 32*

32. அதுநீஎன்று அம்மறைகள் ஆர்த்திடவும் தன்னை
எதுஎன்று தான்தேர்ந்து இராது - அதுநான்
இதுஅன்று என்றுஎண்ணல் உரன் இன்மையினால்என்றும்
அதுவே தானாய் அமர்வதால்..

*பொ-ரை: அந்த ஆன்மாவே நீ (தத்துவம் அஸி) என்று நான்கு மறைகளும் கோஷிக்கின்றபோது, தன் உண்மை இயல்பு எது என்று அறிந்து கொள்ளாமல், 'நான் பிரம்மமே; தேகம் அன்று' என்று தியானிப்பது 'நான் யார்' என்னும் விசார நெறியை மேற்கொள்ளும் மனவலிமை இல்லாத காரணத்தினால் தான். ஏனெனில் உண்மையில் எப்பொழுதும் அந்த ஆன்மாவே நாமாக நமது உள்ளத்தில் எழுந்தருளியிருக்கின்றது. எனவே அதை அகமுகப்பட்டு விசாரித்து அறிய வேண்டுமேயன்றி, தியானிக்க வேண்டிய அவசியம் என்ன? (அதனால் யாது பயன்?).*

*வி–ரை: நாம் 'இருக்கின்றேன்' என்னும் பிற்பகுதியேயன்றி, 'நான்' என்னும் முற்பகுதி அல்ல என்று வேதங்களும் கோஷிப்பதால், அந்த 'இருக்கின்றேன்' என்னும் சத்வஸ்து எது என்று ஆராய்ந்து அதைத் தேராமல், 'நான் இந்த அகந்தைச் சிற்றறிவு அல்ல; அந்த ஆன்மப் பேரறிவே' என்றுத் தியானிப்பது, தன்னுள் ஆழ்ந்து தன்னாராய்ச்சி செய்யக் கூடிய வலிமை இல்லாத காரணத்தினாலேயேயாகும். உண்மை நிலை என்னவென்றால், வேதங்கள் சுட்டிக்காட்டும் அந்த 'இருக்கின்றேன்' என்னும் சச்சிதானந்த ஆன்ம வஸ்து 'தான்–தான்' என்னும் ஸ்புரணமாக நம்முள் என்றும் நிலைத்திருப்பதேயாகும்.*

## *பாடல் 33*

33. என்னை அறியேன்நான் என்னை அறிந்தேன்நான்
என்னல் நகைப்புக்கு இடனாகும் - என்னை

**தனைவிடயம் ஆக்க இருதான் உண்டோ ஒன்றாய்**
**அனைவர் அனுபூதி உண்மையால்.**

*பொ-ரை: ஆன்மாவாக என்னை 'அறியவில்லை' என்றும், 'அறிந்து கொண்டு விட்டேன்' என்றும் கூறுவது பரிகாசத்திற்குரிய செயல்களாகும். ஏனெனில் தன்னை அறிபடு பொருளாக்க 'நான்' என்று இரண்டு உணர்வுகள் உள்ளனவா? அனைவரது அனுபவமும் 'நான் ஒன்றே' என்பதல்லவோ!*

*வி-ரை: ஆகவே என்னை அறியேன் என்றோ, அல்லது அறிந்து ஆன்ம வஸ்துவாகி விட்டேன் என்றோ ஒருவன் கூறிக் கொள்வது நகைப்பிற்குரியதே! ஏனெனில் தன்னை ஒருவன் அறிந்து கொள்ளக்கூடிய மற்றொரு பொருளாகக் கருத இரண்டு 'நான்' கள் நம்முள் உள்ளதோ? உண்மை அனுபவமோ எல்லோருக்கும் 'நான்' என்பது 'ஒன்றே' என்பதாகத்தான் உள்ளது.*

## பாடல் 34

34. **என்றும் எவர்க்கும் இயல்பாய் உளபொருளை**
**ஒன்றும் உளத்துள் உணர்ந்து நிலை - நின்றிடாது**
**உண்டுஇன்று உருஅருஎன்று ஒன்று இரண்டு அன்று என்றே**
**சண்டைஇடல் மாயைச் சழக்கு.**

*பொ-ரை: எப்போதும், எல்லோருக்கும் சகஜமாக உள்ள ஆன்மப் பொருளை அகமுகப்பட்டு ஒடுங்கிய மனத்தால், இதயத்தில் அனுபவித்து அதிலே ஸ்திரமாக நிலைபெற்றிருப்பதை விட்டு, அந்தப் பரம்பொருள் ''உண்டு; இல்லை ; உருவமுடையது; அரூபமானது; உருவருவமானது; ஒன்று (அத்துவிதம்); இரண்டு (துவிதம்); ஒன்றும் இல்லை, இரண்டும் இல்லை (விசிஷ்டாத்துவிதம்)'' என்றெல்லாம் சண்டையிடுவது அகந்தைமய மாயையால் ஏற்படும் பயனற்ற செயல்களாகும். (சழக்கு-பயனின்மை).*

*வி-ரை: என்றும் எவருக்கும் இயல்பாய் உள்ளதாகிய 'இருக்கின்றேன்' என்னும் ஆன்மப் பேருணர்வைத் தம் உள்ளத்தில் மூழ்கி, அதில் ஒன்றி, உணர்ந்து, அதுவாகவே நிலைத்து நின்றிடுவதைத் தவிர்த்து, அந்த ஆன்ம வஸ்து ''உண்டு ; இல்லை; அது உருவத்தொடு விளங்குவது; இல்லை, அரூபமானது; இல்லை,*

உருவத்தொடும் உருவமில்லாமலும் விளங்கும் சக்தி படைத்தது; அது ஒன்றேயாக (அத்துவிதம்) உள்ளது; இல்லை; ஜீவாத்மா–பரமாத்மா என்று இரண்டாக (துவிதம்) உள்ளது;இல்லை முதலில் 'நான்' என்னும் முற்பகுதி அகந்தை அறிவாக இருந்தாலும், இறுதியில் தன்னை அறிந்து'இருக்கிறேன்' என்னும் ஆன்மப் பேருணர்வில் ஒன்று கலந்து, ஏக வஸ்துவாக விளங்குகிறது(விசிஷ்டாதுவிதம்)'' என்றெல்லாம் தர்க்கம் செய்து, பேதங்களைக் கற்பிப்பது அகந்தை அறிவு செயல்பாட்டினுல் விளையும் மாயைச் சழக்கேயாகும்.

## பாடல் 35

**35. சித்தமாய்உள் பொருளைத்தேர்ந்து இருத்தல் சித்திபிற<br>சித்திஎலாம் சொப்பனம்ஆர் சித்திகளே – நித்திரை விட்டு<br>ஓர்ந்தால் அவைமெய்யோ உண்மைநிலைநின்று பொய்மை<br>தீர்ந்தார் தியங்குவரோ தேர்.**

*பொ-ரை:* எப்போதும் சித்தமாய் (அடையப்பட்டதாய்) உள்ள வஸ்துவை அடையாளம் கண்டு கொண்டு, அதுவாக இருத்தலே மிகப் பெரிய சித்தியாகும்; மற்றைய அஷ்டமா சித்திகளும் அதற்கு சமானம் அல்ல; ஏனெனில் அவை கனவில் அடையப்பட்ட சித்திகளைப் போன்றவை(பொய்மையானவை). உறக்கம் நீங்கி விழித்தெழுந்தால் அவை உண்மையாகுமோ? இந்த உண்மைநிலையை உணர்ந்தவர் மீண்டும் அவற்றில் மயங்குவரோ? இதை அறிவாயாக!

*வி–ரை:* சித்தமாய் என்றும் 'இருக்கிறேன்' என்று நம்முள்ளே பேருணர்வாய் உள்ள வஸ்துவை அகமுகப்பட்டுத் தேர்ந்து, அதில் நிலைபெற்றிருத்தலே உண்மையான சித்தியாகும். சுருங்கக் கூறின், அஷ்டமாசித்திகளும் 'நான்' என்னும் முற்பகுதி அகந்தை அறிவின் மனோமயக் கற்பனைகளேயாகும். 'நான்' உடல் என்னும் மயக்கத்தை விட்டு 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதி விழிப்பு நிலையை அடைந்தவர் மீண்டும் அஷ்டமாசித்திகளினுலும் அறிவுக் கலக்கம் அடைவரோ? இந்த உண்மையை உணர்ந்து கொள்ள வேண்டும் என்கிறுர் (தியக்கம்–கலக்கம்).

## பாடல் 36

36. நாம்உடல்என்று எண்ணின்அலம் நாம்அதுஎன்று எண்ணும்அது
நாம் அதுவாய் நிற்பதற்கு நல்துணையே - ஆம்என்றும்
நாம்அதுஎன்று எண்ணுவதுஎன் நான்மனிதன்என்று எணுமோ
நாம்அதுவாய் நிற்கும் அதனால் .

*பொ-ரை: நாம் நம்மை ஒரு உடலாகக் கருதினால், நாம் 'உடல் அல்ல' என்று தியானிப்பது நாம் ஆன்ம வஸ்துவாய் நிலைபெற சகாயமாகும். ஆனால் நாம் 'ஆன்மா' என்று தனிப்பட ஏன் தியானிக்க வேண்டும்? நாம் நம்மை ஒவ்வொரு கணமும் 'மனிதன்' என்று ஞாபகப்படுத்திக்கொண்டா வாழ்கிறோம்? நாம் எப்போதும் ஆன்மாவாகத் தானே வாழ்கிறோம்.*

*வி–ரை : நாம் 'நான்' என்னும் முற்பகுதி எழுச்சியினால் விளைகின்ற தேகாபிமானத்தால், நம்மை ஓர் உடலாகக் கருதி வாழ்ந்தால், அந்தத் தேகாபிமானத்தைத் துறக்க வேண்டி, 'உடல் நாம் அல்ல' என்று தியானித்து உலகாதி சுகங்களில் வைராக்கியத்தை வளர்த்துக் கொள்வது, 'இருக்கிறேன்' என்னும் ஆன்மப் பேருணர்வையுற்றுத் தெளிவதற்கு மிக உகந்த சகாயமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆயினும் இது ஆரம்ப சாதகர்களுக்கே! ஒரு மனிதன் ஒவ்வொரு கணமும் தன்னை 'மனிதன்' என்று ஞாபகப்படுத்திக் கொண்டோ வாழ்கிறான்? அதுபோல், 'இருக்கிறேன்' என்னும் 'நான்–நான்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமாக ஸதா ஒளிர்கின்ற நாம் எதற்காக ஒவ்வொரு கணமும் அந்த ஆன்மப் பேருணர்வே நாம் என்று நினைத்து வாழ வேண்டும்?*

*குறிப்பு: ஸ்ரீபகவான் தம் சுவானுபூதியில், தன்னை ஒருவன் 'இருக்கிறேன்' என்னும் ஆன்மப் பேருணர்வாக உணர்ந்துவிட்டால், ஆன்மாவைப் பற்றிய தியானமும் அவசியமற்று போகின்றது என்கிறார். ஏனெனில் எத்தகையதொரு தியானமும் முயற்சி(efforts)யை அடிப்படையாகக் கொண்டது. சுவானுபவமோஎந்தவித முயற்சியுமற்றது; ஸ்வயம்பிரகாசமானது.*

## பாடல்கள் 37,2

37. சாதகத்திலே துவிதம் சாத்தியத்தில் அத்துவிதம்
ஓதுகின்ற வாதம்அதும் உண்மைஅல - ஆதரவாய்த்
தான் தேடுங்காலும் தனைஅடைந்த காலத்தும்
தான்தசமன் அன்றியார் தான்.

*பொ-ரை: ஆன்ம சாதனையின்போது 'பரமன்-பக்தன்' என்னும் துவிதமும், சாதனை முடிவில் 'ஏக வஸ்துவே' என்னும் அத்துவிதமும் உள்ளனவென்னும் வாதம் கூட உண்மையல்ல. சாதனை காலத்திலும் நம் உண்மை இயல்பு அத்துவிதமாகவே உள்ளது எவ்வாறெனின், தன்னை எண்ண மறந்த பத்தாவது மனிதன் தன்னைத் தேடியபோதும், பின்பு கண்டு கொண்டபோதும் (அதாவது எப்போதும்) பத்தாமவனாகத் தானே இருந்தான்!*

2. மும் முதலை எம் மதமும் முற்கொள்ளும் ஓர் முதலே
மும்முதலாய் நிற்கும் என்றும் மும் முதலும் - மும் முதலே
என்னல் அகங்காரம் இருக்கும்மட்டே யான்கெட்டுத்
தன்னிலையில் நிற்றல் தலை.

*பொ-ரை: எந்தவொரு மதமும் ஜக, ஜீவ, ஈச்வரர்களாகிய மூன்று முதல்களை ஏற்கும். பின்பு ஒரு முழு முதற் பொருளே மூன்றாக விரிகின்றதென்றும், அல்லது மூன்று முதல்களும் எப்பொழுதும் மூன்றாகவே விளங்குகின்றதென்றும் வார்த்தையாடல் அகந்தை உள்ளவரையிலேயே! அகந்தையை அழித்து உள்ள பொருளாகிய தன்னிலையில் நிலைபெறுதலே (மத ரீதியில் தர்க்கம் செய்வதைக் காட்டிலும்) சாலச் சிறந்ததாகும்.*

*வி–ரை : உயர்ந்த ஆன்ம நோக்கில்(*from absolute stand point*) ஒருவன் 'நான்' என்னும் முற்பகுதியிலிருந்து 'இருக்கின்றேன்' என்னும் பிற்பகுதிக்குக் கவனத்தை திருப்பி, அதை அடைய முயற்சி செய்யும்* ***சாதனையைச் செய்து கொண்டிருக்கும் காலத்திலும்****, அந்த சாதனையில் வெற்றி பெற்று ஆன்மப் பேருணர்வை உணர்ந்து,* ***அதுவே ஆகிய பின்னரும்*** *'இருக்கின்றேன்' என்னும் தன்னுணர்வுப் பிரகாசமே - 'நான்' என்னும் முற்பகுதி அகந்தையின் பொய்மை உணரப்படுவதினால்- ஏகவஸ்துவாய் ஒளிர்வதால், சாதக காலத்தில் ஆன்ம வஸ்து ஜீவாத்மா – பரமாத்மா என்று இரண்டாக (துவிதம்)*

உள்ளது என்பதும், ஆன்ம ஞானத்தை அடைந்த காலத்தில் பரமாத்மா ஏகவஸ்துவாக உள்ளது என்பதுமாகிய வாதம் உண்மையல்ல.

குறிப்பு: அஞ்ஞானிக்கு ஆன்ம ஞானத்தை அடையாத 'நான்' என்னும் முற்பகுதி நிலையில் 'சாதகத்திலே துவிதம் சாத்யத்திலேஅத்துவிதம்' என்கிற வாதம் எழுகிறது. 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதியில் நிலைபெற்ற ஞானிக்கு இத்தகைய பேதங்கள் இல்லையென்பது கருத்து (பாடல் 37).

துவிதாத்துவித பேதங்கள் மட்டுமல்ல; மற்றைய அனைத்து பேதங்களும் 'நான்' என்னும் முற்பகுதி அகந்தை எழுச்சியினுலேயே சாத்யமாகின்றன. அகந்தை அழியும்போது அனைத்து பேதங்களும் ஆதித்யன் முன்பு பனிபோலக் கரைந் தொழிகின்றனவென்பதற்கு மும்முதல்களாகிய பேதங்களைக் கூறும் பாடல்–2 மிகச் சிறந்த உதாரணமாகும்.

''உலகு, உயிர்,கடவுள் (ஜக, ஜீவ, ஈசுவரர்கள்) ஆகிய மும்முதல்களும் அவை மூன்றிற்கும் முதலாகிய 'இருக்கின்றேன்' என்னும் ஆதார ஆன்ம வஸ்துவே; அல்ல, அவை மூன்றும் என்றும் தனிப்பட நிலைத்திருப்பவை'' என்று பற்பல மதங்கள் பற்பலவிதமாகக் கூறுகின்றன. ஆனுல் இந்த மும்முதல்களும் 'நான்' என்னும் முற்பகுதி அகந்தை இருக்கும் வரையில்தான், அதைப்பற்றி 'இருப்பு'கொள்ளும். 'இருக்கின்றேன்' என்னும் பிற்பகுதியாம் ஆன்ம வஸ்துவில் அகந்தை கரைந்தவுடன் அவை மூன்றும் இருப்பற்றுப் போகும். ஆகவே அகமுகப்பட்டு, 'இருக்கின்றேன்' என்னும் ஆன்ம வஸ்துவாகிய தன்னிலையில் நிலைபெறுதல் மனிதராய்ப் பிறந்த ஒவ்வொருவரும் செய்தே தீர வேண்டிய செயல்! இது ஒன்றினுலேயே மும்முதல்களாகிய பேதங்கள் மட்டுமல்ல; மனித வாழ்க்கையின் அனைத்துப் பேதங்களும் அகலும். இதற்காகவே மனிதப் பிறவி ஏற்பட்டிருக்கிறது. இதை வலியுறுத்தும்வகையில் "என்னல் அகங்காரம் இருக்குமட்டே; தன்னிலையில் நிற்றல் தலை" என்று இந்தப் பாடலை நிறைவு செய்கிருர் ஸ்ரீபகவான்(பாடல் 2).

## பாடல் 39

39. பத்தன்நான் என்னும்மட்டே பந்தமுத்தி சிந்தனைகள்
பத்தன்ஆர் என்றுதன்னைப் பார்க்குங்கால் - சித்தமாய்
நித்தமுத்தன் தான்நிற்க நிற்காதேற் பந்தசிந்தை
முக்திசிந்தை முன் நிற்குமோ.

*பொ-ரை: நான் 'பந்தப்பட்டிருப்பவன்' என்னும் எண்ணம் உள்ளவரையில்தான், முக்தியைப் பற்றிய சிந்தனை உண்டாகும். பந்தப்பட்டவன் யாரென்று அகமுகப்பட்டுப் பார்க்கும்போது, அகந்தைப் பந்தம் அவிழ்ந்து, என்றும் அடையப்பட்டதாகிய நித்ய, முக்த ஆன்மா பிரகாசிக்கவும், 'கட்டுண்டோம்' என்ற எண்ணமே அழிந்துபோகும் பின்பு 'முக்தியடைந்தோம்' என்ற எண்ணம் மட்டும் மிஞ்சி நிற்குமோ?*

*குறிப்பு: 'பந்தம்' தனை பாடல் 39–ல் விளக்கியவர், அடுத்து வரும் பாடலில் 'முக்தி' தனை விளக்குகிறார்.*

## பாடல் 40

40. உருவம் அருவம் உருவருவம் மூன்றும்
உறும்முத்தி என்னில் உரைப்பன் - உருவம்
அருவம் உருவருவம் ஆயும் அகந்தை
உருஅழிதல் முத்தி உணர்.

*பொ-ரை: 'அடையத் தக்க முக்தி உருவமுக்தி, அரூபமுக்தி, உருவமும் அருவமும் தேவைக்கேற்ப விளங்கும் முக்தி என்று மூன்று விதம்' என்போர்களுக்கு நான் கூற விரும்புவது இதுவே. முக்தி நிலை உருவமா, அருவமா, அல்லது உருவருவமா என்று ஆராய்ச்சி செய்யும் அகந்தை அழிவதே முக்தியாகும். இதை உணர்வாயாக!*

*வி–ரை: 'நான்' என்னும் முற்பகுதியில் வாழும் வரையில் 'நான் பந்தப்பட்டவன்' என்னும் நினைப்பு இருக்கும். அது இருக்கும் வரையில் 'முக்தி' அடைய வேண்டும் என்னும் நினைப்பும் இருக்கும். 'இருக்கின்றேன்' என்னும் இருப்புணர்விற்குக் கவனத்தைத் திருப்பி, ஆன்மவஸ்துவாகத் தன்னை உணர்ந்தவுடன்,*

'நான்' என்னும் முற்பகுதி அழிவினுல் 'பந்தம், முக்தி' ஆகிய இரண்டும் அர்த்தமற்றுப்போகும் (பாடல் 39).

முக்தி நிலே ''உருவம் கொண்டது; அல்ல, அரூபமானது; அல்ல, உருவம் கொண்டதாகவும், உருவமற்றதாகவும் விளங்கக் கூடியது'' என்றெல்லாம் விவாதிப்பவர்களுக்கு நான் கூற விரும்புவது இதுவே! இத்தகைய விவாதங்கள் 'நான்' என்னும் முற்பகுதி அகந்தையினுலே எழுகின்றன. ஆனுல் 'முக்தி நிலே' என்பது இத்தகைய விவாதங்களுக்குக் காரணமாக விளங்கும் அகந்தை அழிதலே; அதனுல் எஞ்சி நிற்கும் 'இருக்கின்றேன்' என்னும் ''தன்னுணர்வுப் பிரகாசமே 'முக்தி' என்பதை உணர்ந்து கொள்ள வேண்டும் என்கின்ருர் ஸ்ரீபகவான்(பாடல் 40).

## பாடல் 31

**31. தன்னே அழித்துஎழுந்த தன்மய ஆனந்தருக்கு**
**என்னே உளதுஒன்று இயற்றுதற்கு - தன்னே அலாது**
**அன்னியம் ஒன்றும் அறியார் அவர்நிலேமை**
**இன்னது என்றுஉன்னல் எவன்.**

பொ-ரை: (மேற் கூறியபடி) அகந்தையை அழிந்தெழுந்த தன்மயானந்த ஞானிகளுக்கு மேலும் செய்ய வேண்டிய சாதனே என்ன உள்ளது?(ஒன்றும் இல்லே என்றவாறு). தன்னேத் தவிர அன்னியம் ஒன்றும் அறியாது ஏகவஸ்துவாகத் திகழும் அவர்தம் இயல்பு இப்படிப்பட்டது என்று நிர்ணயித்து எவ்வாறு மனதால் நினேத்துப் பார்க்கவும் முடியும்? (இயலாது என்றவாறு).

வி–ரை: **'தன்னே அழித்துஎழுந்த தன்மய ஆனந்தருக்கு'** என்றதாவது

பஞ்சரத்னத்தில் ஐந்தாம் பாடலின் விரிவாக்கமே இந்தப் பாடலாகும். 'நான்' என்னும் முற்பகுதியாகியத் தன்னே (அகந்தையை) அழித்து, 'இருக்கிறேன்' என்னும் பிற்பகுதியாகிய ஆன்மாவில் உயிர்த்தெழுவதையே 'தன்னே அழித்துஎழுந்த தன்மய ஆனந்தருக்கு' என்கிருர். இது ஸ்ரீபகவானின் சொந்த அனுபவமேயாகும்! ஏதுமறியாதப் பாலகன் வெங்கடராமன் தன்னே அழித்துக்கொண்டு எல்லேயற்ற, நிரந்தர, நித்ய, முக்த, புத்த, சுத்த, சத்து, சித்து, ஆனந்த ஸ்ரீரமணபகவத் பரம்பொருளாக உலகம் உய்ய

உயிர்த்தெழுந்த ஆன்மானுபவமே இது! இத்தகைய ஜீவபர ஐக்கியத்தை சாதித்தவர்கள் செய்வன செய்து முடித்த கிருத கிருத்யர்களாகிறார்கள்.

இதுவே பஞ்சரத்னத்தில் ஐந்தாம் பாடலின் முதல் வரியில் கூறியுள்ளபடி உள்ளத்தை அருணாசலனிடத்தில் முழுவதுமாக ஒப்படைப்பதாகும்; அதனால் 'நான்' என்னும் முற்பகுதி அகந்தை அழிந்து ஆன்மாவில் தன்மயமாகக் கரைந்துத் தாமும் ஆன்மப் பேரின்பத்தில் ஆழ்ந்து மூழ்கித் திளைப்பதாகும். எனவே தம் சொந்த அனுபவத்தின்பேரில் அத்தகையோர்களைத் **'தன்மயானந்தர்'** என்கிறார் ஸ்ரீபகவான்.

அத்தகைய ஞானியர் பஞ்சரத்னத்தில் ஐந்தாம் பாடலின் இரண்டாவது வரியில் கூறியுள்ளபடி, கனவு, நனவு, உறக்கம் ஆகிய மூன்று அவஸ்தைகளிலும் (நிலைகளிலும்) , கடந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய மூன்று காலங்களிலும், அதாவது, எந்த நிலையிலும், எக்காலத்திலும் தம் உண்மை இயல்பாகிய ஆன்மாவையே எப்பொழுதும் அகத்தே தரிசனம் செய்தவாறும், புறத்தே அனைத்து ஜீவராசிகளிலும், பொருள்களிலும் தானாகிய ஆன்மாவையே தரிசனம் செய்தவாறும், அதனால் தன்னைத் தவிர அன்னியம் ஒன்றும் அறியாது ஏகவஸ்துவாகத் திகழ்வர்.

மேலும், பஞ்சரத்னத்தில் ஐந்தாம் பாடலின் மூன்றாம் வரியில் கூறியுள்ளபடி தன்னைத் தவிர அன்னியம் ஒன்றுமின்றிய ஏகவஸ்துவாகையினால், தன்னிடத்தில் கொண்ட அன்பு தன்னிச்சையாகவே எல்லையற்று, எங்கும் நிறைந்து எதிலும் பரவவும், அதனால் அனைத்து ஜீவராசிகளிடமும் அன்பு செலுத்தி, அதாவது, ஸ்வாத்ம பக்தி செய்து, ஆன்மானந்த சுக சொரூபராக ஒளிர்வர்; அவர்களே மனித வாழ்க்கையின் உண்மையான வெற்றியைப் பெற்றவராவர். அத்தகைய தன்மயானந்த ஞானியரின் பிரம்மானந்த முக்தி நிலையை 'விண்டவர் கண்டிலர்; கண்டவர் விண்டிலர்' என்னும் ஆன்றோர் வாக்கின்படி எவ்வாறு வார்த்தைகளால் குறுக்கமுடியுமென்று இந்தப் பாடலை நிறைவு செய்கிறார் ஸ்ரீபகவான்.

***பஞ்சரத்னத்தின் ஐந்து பாடல்களுக்கும் இந்த 'உள்ளது நாற்பது' 31-வது பாடல் ஒரு முத்தாய்ப்பாகச் சுடர் விட்டுப் பிரகாசிக்கின்றது.***

*அருணாசல பஞ்சரத்னத்தை விளக்கி நிற்கும் 'உள்ளது நாற்பது விளக்கவுரையாம் இதனை உள்ளபடி உள்ளுவோர்*

***உள்ள பொருளை உணர்ந்தவராவர்!;***
***ஸ்ரீபகவானருள் பெற்று உய்ந்தவராவர்!***

*ஓம் ஸ்ரீரமணார்ப்பணமஸ்து.*